# சங்க இலக்கியத்தில் வேந்தர் மரபும் புலவர் மரபும்

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு முனைவர் **(Ph.D)** பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**ச.பாலசுப்பிரமணியன்**

பதிவு எண் : **19262/ Ph.D.-K6/Tamil/Part Time /October 2014**

முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்)

நெறியாளர்

**முனைவர் சி.கலைமுகிலன்**

உதவிப்பேராசிரியர்,
தமிழாய்வுத்துறை,
பிஷப் ஹீபர் கல்லூரி (தன்னாட்சி),
திருச்சிராப்பள்ளி - 620 017.


**தமிழாய்வுத்துறை**

**பிஷப் ஹீபர் கல்லூரி (தன்னாட்சி),**

(ஆற்றல்சார் சிறப்புநிலை தகுதிப்பேறு பெற்றது)

திருச்சிராப்பள்ளி - 620 017.

**செப்படம்பர் - 2019**

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் சி.கலைமுகிலன்**

உதவிப்பேராசிரியர்,

தமிழாய்வுத்துறை,

பிஷப் ஹீபர் கல்லூரி (தன்னாட்சி),

திருச்சிராப்பள்ளி - 620 017.

**“சங்க இலக்கியத்தில் வேந்தர் மரபும் புலவர் மரபும்”** என்ற தலைப்பில் திரு. **ச.பாலசுப்பிரமணியன்** எழுதியுள்ள இவ்வாய்வேடு பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டத்திற்காகப் பிஷப் ஹீபர் கல்லூரி (தன்னாட்சி), தமிழாய்வுத்துறையில் பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளராகப் பயின்ற காலத்தில் என் மேற்பார்வையின் கீழ் அவரது சொந்த முயற்சியில் எழுதப்பட்டது எனவும் இவ்வாய்வேடு வேறு எந்தப் பட்டத்திற்காகவும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

துறைத்தலைவர் நெறியாளர்

இடம் : திருச்சிராப்பள்ளி

நாள் :

# ஆய்வாளர் உறுதிமொழி

**ச.பாலசுப்பிரமணியன்**

முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்)

பதிவு எண்: 19262/Ph.D.-K6/Tamil/Part Time/October 2014

தமிழாய்வுத்துறை,

பிஷப் ஹீபர் கல்லூரி (தன்னாட்சி),

திருச்சிராப்பள்ளி - 620 017.

**"சங்க இலக்கியத்தில் வேந்தர் மரபும் புலவர் மரபும்"** என்ற தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு முனைவர் பட்டப் படிப்பின் நிறைவாகத் திருச்சிராப்பள்ளி, பாரதிதாசன் பல்கலைக் கழகத்திற்கு 2014 - 2019 ஆம் கல்வியாண்டில் எழுதப்பட்டது. இவ்வாய்வேடு உதவிப்பேராசிரியர் முனைவர் **சி.கலைமுகிலன்** அவர்களின் மேற்பார்வையின் கீழ் என் சொந்த முயற்சியால் உருவானதாகும். இதற்கு முன் இவ்வாய்வேடு எந்த வேறு பட்டத்திற்காகவும் அளிக்கப்பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

நெறியாளர்            ஆய்வாளர்

**(ச.பாலசுப்பிரமணியன்)**

இடம் : திருச்சிராப்பள்ளி

நாள் :

# நன்றியுரை

கல்வியல் சிறந்த இளையத்தலைமுறையை உருவாக்குவதில் செவ்வனே செயலாற்றி வருகின்ற பாரதிதாசன் பல்கலைக் கழகத்திற்கு என் முனைவர் பட்ட படிப்பிற்கான ஏற்பினை வழங்கியமைக்காக எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதியளித்த பிஷப் ஹீபர் கல்லூரி முதல்வர் முனைவர் த.பால்தயாதரன் ஐயா அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழாய்வுத்துறையில் முனைவர் பட்டம் பயில்வதற்கு அனுமதி வழங்கி ஊக்கப்படுத்திய துறைத்தலைவர் பேராசிரியர் முனைவர் க.சோ.பால்சந்திரமோகன் அவர்களுக்கு என் நன்றியை சமர்பிக்கிறேன்.

முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொள்ள வாய்ப்பினை நல்கி நெறிப்படுத்தி விரைந்து ஆய்வேட்டினைச் சமர்பிக்க அறிவுறுத்திய நெறியாளர் முனைவர் சி.கலைமுகிலன் அவர்களை நன்றியுணர்வோடு வணங்குகிறேன்.

தமிழ் இலக்கியத்துறையை எமக்கு அறிமுகப்படுத்தி அதில் முனைவர் பட்டம் பெறுவதைத் தம் கனவாகக் கொண்ட எனது தந்தை தெய்வத்திரு. சங்கரன் அவர்களுக்கும் தாயார் திருமதி. மாரியம்மாள் அவர்களுக்கும் என் நன்றியைக் காணிக்கையாக்ககிறேன்.

என் ஆய்வுப் பணி தொய்வில்லாது தொடர பல்வேறு உதவிகளைச் செய்தும் ஊக்கம் தந்தும் துணைநின்ற எனது துணைவியார் திருமதி. மங்களச்செல்வி அவர்களுக்கு நன்றி.

இவ்வாய்விற்குத் துணை நின்று பல்வேறு கருத்துக்களையும் அறிவுரைகளையும் நூல்களையும் வழங்கிய நண்பர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டிற்குத் தேவையான நூல்களைத் தந்துதவிய நூலகத்தாற்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

என் ஆய்வேட்டை சிறப்புறத் தட்டச்சு செய்து தந்த நண்பர்கள் அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**(ச.பாலசுப்பிரமணியன்)**

# சுருக்க குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| பா.எ. | – | பாடல் எண் |
| நூ. | – | நூற்பா |
| ப.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| மேலது. | – | மேற்கூறிய நூல் |
| அகம். | – | அகநானூறு |
| ஐங். | – | ஐங்குறுநூறு |
| கலி. | – | கலித்தொகை |
| குறள். | – | திருக்குறள் |
| குறிஞ். | – | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | – | குறுந்தொகை |
| சிலம்பு. | – | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | – | சிறுபாணாற்றுப்படை |
| திருமுருகு. | – | திருமுருகாற்றுப்படை |
| திருவா. | – | திருவாசகம் |
| தொல்.எழுத்து. | – | தொல்காப்பியம் எழுத்ததிகாரம். |

| | | |
|---|---|---|
| தொல்.சொல். | – | தொல்காப்பியம் சொல்லதிகாரம். |
| தொல்.பொருள். | – | தொல்காப்பியம் பொருளதிகாரம். |
| நற். | – | நற்றிணை |
| நெடுநல். | – | நெடுநல்வாடை |
| பதிற். | – | பதிற்றப்பத்து |
| பட்டின. | – | பட்டினப்பாலை |
| பரி. | – | பரிபாடல் |
| பழ. | – | பழமொழி |
| புறம். | – | புறநானூறு |
| புற.வெண். | – | புறப்பொருள் வெண்பாமாலை |
| பெருங். | – | பெருங்கதை |
| பெரும்பாண். | – | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | – | பொருநராற்றுப்படை |
| மதுரை. | – | மதுரைக்காஞ்சி |
| மணி. | – | மணிமேகலை |
| மலைபடு. | – | மலைபடுகடாம் |
| முல்லை. | – | முல்லைப்பாட்டு |
| வில்லிபா. | – | வில்லிபாரதம் |

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழில் மொழி உலகில் தோன்றிய மொழிக் குடும்பங்களில் முதன்மையானதும் வரலாற்றுப் பார்வை உடையது. இம்மொழியினைப் பேசுகின்ற மக்கள் நீண்ட பண்பாட்டினைக் கொண்டு சிறப்புற விளங்குகின்றனர் எனில் அது மிகையாகாது. சங்க கால இலக்கியங்கள் அக்கால மக்களின் வாழ்கையைப் பறைசாற்றும் காலக்கண்ணாடியாகத் திகழ்கிறது.

சங்க இலக்கியத்தை எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்று பா அமைப்பிலும் அகம், புறம் என்று இலக்கண அமைப்பிலும் பகுத்துக் காண்பர். சங்க இலக்கிய பகுப்பில் ஒன்றான எட்டுத்தொகை பழந்தமிழரின் சமுதாய வாழ்வியலைப் பறைசாற்றுகிறது. இதில் புறநானூறு பதிற்றுப்பத்து இரண்டும் புற வாழ்வியலை எடுத்தியம்புகிறது. பரிபாடல் அகமும் புறமும் விரவியது. நற்றிணை குறுந்தொகை ஐங்குறுநூறு கலித்தொகை அகநானூறு என்பன அகவாழ்வைக் கணிந்துரைப்பன. பத்துப்பாட்டு நூல்களில் ஆற்றுப்படை நூல்கள் புலவர்களின் வாழ்வியலை எடுத்தியம்புகின்றன.

இத்தகைய சங்க இலக்கியமானது பல்வேறு காலச்சூழலில் வாழ்ந்த மக்களைப் பற்றியும் மன்னர்களைப் பற்றியுமான வரலாற்றுப் பதிவுகளைத் தாங்கியுள்ளது. வேட்டைச் சமுதாயத்தில் தோன்றிய மனிதன் தனக்குள் குழு அமைத்துக்கொண்டு இனக்குழு சமுதாயமாக உருவெடுத்து சீறூர் மன்னராக, முதுகுடி மன்னராக வளர்ச்சிபெற்று இறுதியில் வேந்தனாக விளங்கிய வரலாற்றுப் பதிவுகளை இந்த இலக்கியங்கள் தனக்குள் பொதிந்து வைத்துள்ளன.

யாழில் இசைமீட்டியும் பண்ணமைத்தும் மக்களை மகிழ்வித்த பாணர் கூட்டம் தொடக்கக் காலத்தில் நாடோடிகளாய் திரிந்தனர். காலப்போக்கில் ஓரிடத்தில் நிலைத்திருந்து அரச கவியரங்குகளில் நூலியற்றும் புலவர்களாக வளர்ச்சியடைந்த நிலையைச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

இத்தகைய இனக்குழுச் சமுதாயம் வேந்தர் சமுதாயமாக மாறியநிலையையும் யாழ் மீட்டி பண்பாடும் பாணர்களாகத் தோன்றி புலவர்களாய் வளர்ச்சியடைந்த நிலையையும் ஆராயும் முகமாக இவ்வாராய்ச்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**ஆய்வு நோக்கம்**

தமிழ் இலக்கியங்கள் சேர, சோழ, பாண்டியர்களைக் குறிப்பிடும் போது மூவேந்தர்கள் என்றே குறிப்பிடுகிறது. தமிழில் வேந்தர் என்ற சொல் சேர, சோழ, பாண்டிய மன்னர்களுக்கு மட்டுமே வழங்கப்படுகிறது. குறுநில மன்னர்களை வேளிர் என்ற சொல்லால் அழைக்கின்றனர். மூவேந்தர் காலத்திற்கு முன்பிருந்தே தமிழகத்தில் சிறந்த ஆட்சிமுறை நடைபெற்று வந்துள்ளது. உணவிற்காக வேட்டையாடும் வேட்டைச் சமுதாயத்தில் உணவு பங்கிடுவதற்காக மட்டும் தனக்கென தலைமை வைத்துக் கொண்ட நிலை, பிற்கால வளர்ச்சியில் சிறு குழுமமாக வாழ்ந்த சீறூர் மன்னர் காலத்தில் தலைமைக்கான முழு வளர்ச்சி பெற்று போர்க்குத் தலைமை தாங்கும் நிலையாக உருவாயிற்று. அதுவே காலப்போக்கில் வேந்தர் சமுதாயமாக மாறியது.

உடைமை பொருட்களுக்காக நாடோடிகளாய் திரிந்த பாணர்கள் குறுநில மன்னர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு அவர்களின் சிறப்பினை எடுத்தோதியும் அவர்களால் ஏற்படும் தீமைகளை அவர்களுக்குச் சுட்டிக்காட்டி அவர்களை நன்னெறிப் படுத்தியும் வந்தனர். காலப்போக்கில் பாணர் கூட்டம் ஓர் இடத்தில் நிலை பெற்று புலவர் சமுதாயமாக உருப்பெற்று வேந்தர்களையும் மன்னர்களையும் புகழ்ந்து பாடிய நிலையை ஆராய்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வுத் தலைப்பு**

**"சங்க இலக்கியத்தில் வேந்தர் மரபும் புலவர் மரபும்"** என்பது ஆய்வின் தலைப்பாய் அமைகிறது.

**கருதுகோள்**

இனக்குழுச் சமுதாயத்திலிருந்து வேந்தர் மரபும் பாணர் சமுதாயத்திலிருந்து புலவர் மரபும் தோன்றியது என்பது இவ்வாய்வின் கருதுகோளாய் அமைகிறது.

**ஆய்வு அணுகுமுறை:**

இவ்வாய்வில் பகுப்புமுறை, விளக்கமுறை, ஒப்பியல்முறை ஆகிய ஆய்வு அணுகுமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளன.

**ஆய்வு எல்லை**

சங்க இலக்கியத்திலுள்ள எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் ஆகிய பதினெட்டு நூல்களும் ஆய்வின் எல்லையாக அமைகின்றன.

**ஆய்வுத் தரவுகள்**

**முதன்மைச் சான்றாதாரம்**

சங்க இலக்கியத்திலுள்ள எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் ஆகிய பதினெட்டு நூல்களும் ஆய்வின் முதன்மைச் சான்றாதாரமாக அமைகின்றன.

**துணைமைச் சான்றாதாரம்**

தமிழ் இலக்கிய நூல்களும் சங்க இலக்கியம் தொடர்பான பிற ஆய்வு நூல்களும் ஆய்வுக் கட்டுரைகளும் துணைமைச் சான்றாதாரமாக அமைகின்றன.

**ஆய்வு முன்னோடிகள்**

அரங்க. இராமலிங்கம், கோவிந்தனார், இரா. இளங்குமரன், பக்தவச்சல பாரதி, பெ.மாதையன், கா.சுப்பிரமணியன் ஆகியோர் ஆய்வு முன்னோடிகளாக அமைகின்றனர்

**இயல் பகுப்பு முறை**

சங்க இலக்கியத்தில் வேந்தர் மரபும் புலவர் மரபும் என்ற ஆய்வு தலைப்பின் கீழ் நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை, கீழ்க்கண்டவாறு அமைந்துள்ளது.

இயல் 1 தமிழ்ச் சூழலில் இனக்குழு வாழக்கைமுறை

இயல் 2 சங்க காலப் பாணர் மரபு

இயல் 3 வேளிர் மரபு

இயல் 4 வேந்தர் மரபும் புலவர் மரபும்

**இயல் 1 தமிழ்ச் சூழலில் இனக்குழு வாழக்கைமுறை**

மனிதன் இறைவனால் தோற்றுவிக்கப்பட்டான் என்று மதக்கோட்பாடு கூறிவந்த நிலையில் ஒருவகை குரங்கிலிருந்து தோன்றினான் என்று அறிவியல்

கூறுகிறது. விலங்கிலிருந்து தோன்றிய மனிதன் விலங்கிற்குரிய குணங்களுடன் காணப்படுகிறான். விலங்குள் எவ்வாறு குழுவாக வாழுமோ அவ்வாறு மனிதனும் குழுவாக வாழும் இயல்புகளைப் பெற்றிருந்தான். இத்தகைய குழு வாழ்வியலை மானுடவியல் இனக்குழுச் சமூகம் என்றுரைக்கிறது. இனக்குழுச் சமூகத்தினைக் காட்டுமிராண்டி நிலை, அநாகரிக நிலை, நாகரிக நிலை என்று மானுடவியல் பிரித்துக் காட்டுகிறது. தமிழ் சூழலில் இனக்குழு வாழ்வியலானது திணை அடிப்படையில் அமைகிறது. குறிஞ்சி முதல் பாலை வரையிலான ஐவகை நிலத்தில் தமிழ்ச் சமூகம் தம்முடைய இனக்குழு வாழ்வு முறையை அமைத்துக்கொண்டது.

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த இனக்குழுச் சமூகம் வேடராகவும் முல்லை நிலத்தில் வாழ்ந்த இனக்குழுச் சமூகம் இடையராகவும் நெய்தல் நிலத்தில் வாழ்ந்த இனக்குழுச் சமூகம் பரதவர், உமணர்களாகவும் விளங்கியுள்ளனர். இனக்குழுச் சமூகத்தில் அக்குழுவை வழிநடத்தத் தலைமைத் தேவைப்பட்டபோது முதலில் பெண் தலைமையிலும் பின்னர் ஆண் தலைமையிலும் அக்குழுச் செயல்பட்டு வந்துள்ளது. தமிழ்ச் சமூகத்தில் இனக்குழு வாழ்வின் எச்சங்கள் சங்க இலக்கியங்களில் வேளிராகவும் முதுகுடி மன்னராகவும் குறுநில மன்னராகவும் பதிவுசெய்யப்பட்டுள்ளது. இத்தகைய இனக்குழு வாழ்வியல் முறைமைகளைப் பற்றி முதல் இயலில் ஆராயப்பட்டுள்ளது.

**இயல் 2 சங்க காலப் பாணர் மரபு**

வாய்மொழி இலக்கியங்களின் முன்னோடிகளாகப் பாணர்கள் விளங்குகின்றனர். பொதுவுடைமைச் சமூகத்தின் ஓர் அங்கமாக விளங்கும் பாணர்கள் வேளிர்களின் புகழைத் தரணியெங்கும் பரப்பும் முக்கியப் பணியைச் செய்துள்ளனர். பாணர்கள் தங்களுக்கென தனியுடைமை இல்லாதிருப்பதினால் அவர்களுடைய சிந்தை எப்பொழுதும் பொதுவுடைமைச் சிந்தையாகவே இருந்துள்ளது. பாணர்கள் ஓர் இடத்தில் நிலையான குடியிருப்பைப் பெற்றிராத நாடோடி வாழ்வை வாழ்ந்துள்ளனர். பாணர்கள் தனித்து வாழாது கூட்டாக வழும் இனக்குழு முறைமையைப் பெற்றுள்ளனர்.

பாணர்களில் ஒருவர் ஈட்டிய பொருளைப் பலரும் பகிர்ந்து கொள்ளும் தன்மையைப் பெற்றிருந்தனர். பாணர்களின் வாழ்வானது எப்பொழுதும் வறுமை சூழ்ந்த வாழ்வாக அமைந்துள்ளது. வள்ளல்களிடம் வெகுமதியைப் பெற்றே தம் வாழ் நாளைக் கழிப்பவர்களாகப் பாணர்கள் விளங்கியமையால் பெரும் பொழுதுகள்

வறுமையோடு போராடும் வாழ்வாக அவர்கள் வாழ்வு அமைந்திருந்தது. பாணர்கள் தம்முடைய யாழைத் தெய்வமாகக் கருதி அதனைப் போற்றி வந்துள்ளனர். தம்மிடமுள்ள இசைகருவிகளைப் பொறுத்து யாழ்ப் பாணர், மண்டைப்பாணர், இசைப்பாணர் என அழைக்கப்பெற்றனர். இத்தகைய பாணர் மரபைப் பற்றி இரண்டாவது இயலில் ஆராயப்பட்டுள்ளது.

**இயல் 3 வேளிர் மரபு**

இனக்குழு வாழ்வின் எச்சமாகச் சங்க இலக்கியங்களில் வேளிர் சமூகம் அமைந்துள்ளது. இத்தகைய வேளிர் சமூகம் பொதுவுடைமைச் சமூகமாக விளங்கியுள்ளது. வேளிர் சமூகத்தில் தன்னை நாடி வரும் வறியவர்களுக்குப் பொருள் வழங்குவதை தலையாய நோக்கமாகக் கொண்டுள்ளது. வேளிர்கள் தன்னை நாடிவரும் விறலியர், பொருநர், பாடினி, கூத்தர், பாணர் போன்றோருக்கு உணவும் உடுக்க உடையும் வாழ்வியலுக்குத் தேவையான அளவிற்குப் பொருளையும் வழங்கியுள்ளது. வேளிர்கள் வறுமையுறும் காலங்களில் கூடத் தன்னிடம் இருக்கும் பொருட்களை வழங்கி வறியவரின் துன்பத்தைப் போக்கியுள்ளது.

வேந்தரின் ஆட்சிக்காலத்தின் போது இவ்வேளிர்கள் வேந்தர்களின் ஆட்சிக்குட்பட்டு அவர்களுக்குப் படையுதவி வழங்கியும் அவர்களது படைகளை வழி நடத்தும் தலைமைப் பொறுப்பேற்றும் பேருதவி புரிந்துள்ளனர். இதற்காக வேந்தர்களிடமிருந்து தண்ணடையும் பெற்றுள்ளனர். சில வேளையில் பெரும் வேந்தர்களை எதிர்த்துப் போர்புரிந்தும் மகட்கொடை மறுத்தும் போரில் வெற்றி பெற்றும் தோல்வி அடைந்தும் வந்துள்ளது. இத்தகைய வேளிர்களின் மரபைப் பற்றி மூன்றாவது இயலில் ஆராயப்பட்டுள்ளது.

**இயல் 4 வேந்தர் மரபும் புலவர் மரபும்**

சங்க இலக்கியங்கள் ஆட்சித் தலைவர்கள் வேந்தன், மன்னன், அரசன், இறை அல்லது இறைவன், காவலன், கோ எனப் பல்வேறு பெயர்களால் குறிக்கப்பெறுகின்றனர். ஆட்சிப் பரப்பில் குறைந்த நிலப் பரப்பை உடையவர்களை மன்னர்கள் என்றும் பெரும் பரப்பை ஆண்டவர்கள் வேந்தர்கள் என்றும் சுட்டும் மரபு சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளது. தமிழகச் சூழலில் சேர, சோழ, பாண்டியர் மரபினரை வேந்தர்கள் என்று அழைக்கும் மரபு நிலவி வந்துள்ளது. புலவர்கள் வேந்தர் சமுதாயத்தில் நிலையான குடியிருப்பையும் சமுதாயத்தில்

முக்கிய அங்கமாகத் திகழுகின்றனர். சங்க கால வாழ்க்கை முறையில் புலவர்களுக்கும் வேந்தர்களுக்கும் நெருங்கிய தொடர்பு காணப்படுகிறது.

வேந்தர்களின் வாழ்க்கை முறையிலும் அரசாட்சி முறையிலும் புலவர்களின் பங்கு இன்றியமையாதது. வேந்தர்களின் வெற்றிச் சிறப்பையும் புகழினையும் வானுயரக் கொண்டு சென்றவர்கள் புலவர்களே. வேந்தர்களின் கொடுங்கோல் தன்மையைச் சுட்டிக் காட்டி செங்கோலாட்சி நிலைபெறச்செய்தவர்களும் புலவர்களே. இதனைப் போன்று வேந்தர்களும் புலவர் வாழ்கையில் சிறப்பிடம் பெறுகின்றனர்.

புலவர்கள் வறுமையில் வாடும் போது அவர்களைப் புறங்காத்தவர்கள் வேந்தர்களே. புலவர்களின் திறம் அறிந்து பொருட்கள் வழங்கியும் பரிசுகள் வழங்கியும் சிறப்பித்தவர்கள் வேந்தர்களே. பல வேந்தர்கள் புலவர்களாகவும் விளங்கியுள்ளனர். தம்முடைய கவித்திறத்தால் அக இலக்கியங்களிலும் புற இலக்கியங்களிலும் பல்வேறு பாடல்களை வேந்தர்கள் பாடியுள்ளனர். மக்கள் வாழ்வியலுக்குத் தேவையான அறக்கருத்துக்களையும் தம்முடைய மான உணர்வுகளையும் தம்முடைய பாடல்கள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளனர். இத்தகைய வேந்தர், புலவரின் மரபு பற்றி நான்காவது இயலில் ஆராயப்பட்டுள்ளது.

**முடிவுரை**

முடிவுரையில் ஆய்வில் கண்டறியப்பட்ட ஒவ்வொரு இயலின் முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. தொடர்ந்து எதிர்கால ஆய்வுக் களங்கள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

**எதிர்கால ஆய்வுக் களங்கள்**

- தமிழ்ச் சமூக அமைப்பில் இனக்குழு வாழ்க்கை முறை,
- புலவர் வாழ்வியலும் பாணர் மரபு மீட்டுருவாக்கமும்,
- வேந்தர் மற்றும் புலவர் மரபுகளில் பிராமணியக் கோட்பாடுகள்

ஆகிய தலைப்புகள் எதிர்கால ஆய்வுக் களங்களாக அமைகின்றன.

# இயல் ஒன்று

# தமிழ்ச் சூழலில் இனக்குழு வாழ்க்கை முறை

மனிதக் குலத்தின் அறிவுத்திரட்சியால் நெருப்பு கண்டுபிடிக்கப்பட்டது. நெருப்பு பயன்பாட்டால் பலவித புதுப்புது ஆயுதங்களும் கண்டுபிடிக்கப்பட்டு பயன்பாட்டிற்கு வந்ததன. இதன் பயனாக மனிதக் குலம் பெருங்கூட்டமாக வாழும் காட்டுமிராண்டி நிலையிலிருந்து மாறி, சிறு கூட்டமாகப் பயன் தரும் வகையில் மனித சமுதாயமாக உருமாறத் தொடங்கியது. இவ்வாறு குலங்களாகவும், குடிகளாகவும் சிறுசிறு கூட்டங்களாகப் பிரிந்த மக்கள், அவசியம் ஏற்படும்போது இணைந்தும் செயல்பட்டனர். இணைந்து செயல்படும் மக்கள் ஒரே மாதிரியான வாழ்க்கை நடத்துவோராக இருந்துள்ளனர். இதன் வளர்ச்சியைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை நிலையில் தமிழ் இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளது.

### 1.1 மனித இனம் தோற்றம்

பூமியில் காணப்படும் எண்ணற்ற உயிரினங்களில் மனித இனம் மட்டுமே சிறந்த உயிரினமாக எண்ணப்படுகிறது. பல கோடிக் கணக்கான மண்ணுயிர்களில் மனிதன் மட்டுமே அறிவின் உச்சமாகக் கருதப்படுகிறான். பல்வேறு உயிர்களின் தோற்றத்தின் இடையே நடைபெற்ற பரிணாமத்தின் கூட்டு முயற்சியில் மனித இனம் தோன்றியது என்று அறிவியல் கூறுகிறது. ஆனால், இறைவனே முதலில் உலகத்தைப் படைக்க எண்ணிப் பூமியை உருவாக்கினார். பின்னர், தன் விருப்பம் போல் மரஞ்செடி, கொடிகளையும் பிற விலங்கினங்களையும் படைத்து, இறுதியாக மனிதனையும் உருவாக்கினார் என்று வேதங்கள் உரைக்கின்றன. இதனை, “தேவனாகிய கர்த்தர் பூமியிலிருந்து மண்ணை எடுத்து மனிதனை உருவாக்கினார். அவன் மூக்கில் தன் உயிர் மூச்சினை அளித்தார். அதனால் மனிதன் உயிர் பெற்றான”[1] என்று விவிலியம் உரைக்கின்றது. ஆனால், அறிவியலின் அடிப்படையில் உயிரினங்களின் பரிணாமத்தைக் கண்டறிந்த டார்வின் ஒரு தனி ரகக் குரங்கிலிருந்து பரிணாம வளர்ச்சியால் மனித இனம் தோன்றியதாகக் கூறுகின்றார்.

“கோடிக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்தான் பூமியில் உயிரினங்கள் தோன்றியதென்று உயிரியல் விஞ்ஞானம் போதிக்கிறது. இதற்கு முன் விவரித்தது போல ஒரு தனி ரகக் குரங்கிலிருந்து இன்றைய மனிதனின் முன்னோடிகள் தோன்ற, மேலும் பத்து லட்சக்கணக்கான ஆண்டுகள் கடக்க வேண்டியிருந்தது. இவ்வாறு

கோடிக்கணக்கான ஆண்டுகளின் வளர்ச்சியின் மூலமாக இன்றைய மனிதன் உருவாகியே ஒரு லட்சம் ஆண்டுகள் கடந்து விட்டன என்று கணிக்கப்பட்டுள்ளது."[2] என மனித இனத்தின் தோற்றம் பற்றி டார்வின் கூறுகிறார். எனவே, மனித இனம் காடுகளில் வசிக்கும் குரங்காகிய விலங்கிடமிருந்து தோன்றியதென்பது இன்றைய அறிவியல் சூழலில் நிரூபிக்கப்பட்டுள்ள ஒன்றாகும்.

விலங்கிடமிருந்து தோன்றிய மனிதனிடத்தில் விலங்குக் குணாதிசயங்களும் இருத்தல் வேண்டும். இன்றைய சமூக அமைப்போ மனித இனத்தினை சமூக விலங்கு (Social Animal) என்று குறிப்பிடுகிறது. மனித இனம் தோன்றி பல கோடி ஆண்டுகளுக்குப் பின்னரும் மனிதனை (மனித உடலமைப்பினை மையமாகக் கொண்டு) விலங்குகளோடு அறிவியல் ஒப்பிடுகிறது. இன்றும் சிலர் கோபங்கொண்டு வன்மையாக நடந்து கொள்ளும் போது 'ஏன் மிருகம் போல் நடந்து கொள்கிறாய்?' என்று வினவப்படுவது அனைவரும் அறிந்த ஒன்றே. எனவே, உடலியல் அமைப்பிலும் உளவியல் அமைப்பிலும் இன்றும் மனிதர்களிடையே விலங்குப் பண்புகள் இழையோடிக்கிடக்கிறன.

மனித இனம் தோன்றிய பல கோடி ஆண்டுகளுக்குப் பின்பும் விலங்குப் பண்புகள் மனிதனிடையே காணப்படுகிறது என்றால் ஆரம்பக் காலத்தில் மனிதன், விலங்காகவே வாழ்ந்திருக்க வேண்டும். விலங்குகளின் செயல்பாடுகளை உற்று நோக்கிய மனிதன், அதன் செயல்களில் ஒன்றான குழுவாக வாழும் தன்மையைத் தானும் பெற்றிருக்க வேண்டும்.

## 1.2 குழுக்களின் தோற்றம்

மனிதன் தொடக்க காலத்தில் தனக்குரிய உணவுகளை வேட்டையாடுதலின் மூலமாகப் பெற்றான். வேட்டையாடுதல் என்னும் தொழில் தன்னிச்சையாகச் செயல்படுவதைவிட ஒரு குழுவாக இணைந்து செயல்படும் பொழுதே எளிதில் வெற்றிக்கிட்டியது. எனவே, உணவிற்காக ஆதி மனிதன் ஒரு குழுவாகச் செயல்பட வேண்டிய சூழல் ஏற்பட்டது. இந்தக் குழுச் செயல்பாடே அவனுக்குரிய உணவின் தன்மையை நிர்ணயித்தது. வேட்டைக்காக மட்டுமே கூடிய குழுமம் நாளடைவில் கொடிய விலங்குகளிடமிருந்தும் இயற்கை சீற்றத்திடமிருந்தும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள பயன்பட்டது. ஆதி காலத்தில் குழு என்பது நான்கிலிருந்து எட்டு பேர் கொண்டதாக இருந்திருக்கலாம். இந்தக் குழுவே நாளடைவில் அவனுக்குரிய குடும்பமாகவும் இயங்கத் தொடங்கியது. "அதோ யாவற்றிலும் பெரிய குழந்தை எட்டு வயதிருக்கும் சின்னக் குழந்தைக்கு ஒரு

வயதிருக்குமல்லவா? ஆம், ஒரே வீட்டில் ஆறு குழந்தை இது வீடில்லையே மலையின் இயற்கை குகை."[3] என்று ராகுல் சாங்கிருத்தியாயன் தன்னுடைய வால்கா முதல் கங்கை வரை என்ற நூலில் ஆதிமனிதனின் குழு பற்றியும் அவனது இருப்பிடம் பற்றியும் குறிப்பிடுகிறார்.

இன்றும் காட்டில் வாழும் விலங்கினங்கள் தங்கள் உணவுத் தேவைக்காகவும் பாதுகாப்பு கருதியும் அவை குழுமமாகவும் குடும்பமாகவும் செயல்படுவதைக் காணலாம். இவ்வாறாக மனிதனும் குழுவாகச் செயல்பட்டு அதிலிருந்து பெறப்பட்ட உணவினைப் பங்கிட்டு உண்ண தொடங்கினான். இவ்வாறாக அவர்களுக்கிடையே குழு மனப்பான்மையும் பகிர்ந்து உண்ணும் பழக்கமும் வளரத் தொடங்கியது. "முன்னே வழிகூட்டிச் செல்லும் அந்தப் பெண்ணுக்கு வயது நாற்பதுக்கு மேல் ஐம்பதுக்குள்ளிருக்கும். இடது கையில் நீண்ட கூர்மையான கம்பு, வலது கை தோலிலே நன்றாகத் தீட்டிக் கூர்மையாக்கப்பட்ட கல் அம்பு இவளுக்குப் பின்னே நான்கு ஆடவர்களும் இரண்டு பெண்களும் செல்கின்றனர்."[4] என்று வேட்டைக்குச் சென்ற ஆதிமனிதர்களைப் பற்றி ராகுல் சாங்கிருத்தியாயன் குறிப்பிடுகிறார்.

### 1.3 இனக்குழுத் தோற்றமும் வாழ்க்கைமுறையும்

இனக்குழுச் சமூகம் வேட்டையாடி உணவு சேகரிக்கும் முதல் நிலை தொடங்கி நாகரிக நிலை வரை பல படிநிலைகளில் வளர்ச்சி பெற்று வந்துள்ளது. இந்த வளர்ச்சிகளை மானிடவியலாளர்கள் வரிசைப்படுத்திப் 'பண்பாட்டுப் படிமலர்ச்சி' என்ற கோட்பாட்டை முன்வைத்துள்ளனர். "மனித சமூகத்தின் படிநிலை வளர்ச்சிகளை விலங்காண்டி நிலை, காட்டாண்டி நிலை, நாகரிக நிலை என்ற மூன்று விதமான படிநிலைகளைக் கூறியுள்ளார். இவற்றை ஏற்றுக்கொண்ட ஏங்கல்ஸ் ஒவ்வொரு பிரிவுகளுக்குள்ளும் மூன்று உட்பிவுகளைக்கொண்டு காட்டுமிராண்டி நிலை கடைக்கட்டம், காட்டுமிராண்டி நிலை இடைக்கட்டம், காட்டுமிராண்டி நிலை தலைக்கட்டம், அநாகரிக நிலை கடைக்கட்டம், அநாகரிக நிலை இடைக்கட்டம், அநாகரிக நிலை தலைக்கட்டம், நாகரிக நிலை கடைக்கட்டம், நாகரிக நிலை இடைக்கட்டம், நாகரிக நிலை தலைக்கட்டம"[5] என்ற நிலையில் வளர்ச்சியடைந்ததை அமெரிக்க மானிடவியலறிஞர் லூவி ஹென்றி மார்க்கன் குறிப்பிட்டுள்ளார்.

"காட்டுமிராண்டி நிலை - உபயோகிப்பதற்குத் தயாராக இருந்த இயற்கைப் பொருட்களை உபயோகிப்பதே மேலோங்கியிருந்த ஒரு நிலை. அநாகரிக

நிலை - கால்நடை வளர்ப்பு, நிலத்தில் பயிரிடுதல் ஆகியவை குறித்த அறிவைப் பெற்ற கட்டம் இது மனித நடவடிக்கைகளின் மூலமாக இயற்கையின் உற்பத்தித் திறனைப் பெருக்குகின்ற வழிமுறைகள் இக்கட்டத்தில் கற்றுக் கொள்ளப்பட்டன. நாகரிக நிலை - இயற்கைப் பொருட்களை மேலும் பண்படுத்திக் கொள்வது பற்றி தொழில் மற்றும் கலையைப் பற்றிய அறிவைப் பெற்ற கட்டம் இது."[6] என்று மூன்று நிலைகளைப் பற்றி பழனிவேல் கூறுகிறார்.

இந்தச் சமூக வளர்ச்சி மனிதர்களின் உணவு தேடும் செயல், அதற்காக அவர்கள் மேற்கொண்ட தொழில்கள், அதில் ஏற்பட்ட மாற்றங்கள் என்ற அடிப்படையிலேயே வளர்ச்சிபெற்றுள்ளது. அதாவது, மனிதர்கள் தமது உணவுத் தேவையை நிறைவேற்றிக் கொள்ள மேற்கொண்ட முயற்சியில் நிகழ்ந்த பல்வேறு விதமான மாற்றங்களின் அடிப்படையில் சமூகமானது வளர்ச்சியடைந்துள்ளது.

### 1.3.1 காட்டுமிராண்டிநிலை

#### 1.3.1.1 கடைக்கட்டம்

இது மனிதச் சமுதாயத்தின் தொடக்க நிலையாக அமைந்தது. குரங்கிலிருந்து தனி இனமாகப் பிரிந்த மனிதன் விலங்காண்டியாகக் காடுகளில் வாழத் தொடங்கினான். இக்காலத்தில் மரங்களிலும் குகைகளிலும் தன்னுடைய இருப்பிடத்தை அமைத்துக் கொண்டான். மரங்களில் கிடைத்த பழங்களையும் கொட்டைகளையும் நிலத்தில் விளைந்த கிழங்குகளையும் உணவாக உட்கொண்டு உயிர் வாழத்தலைப்பட்டான். கொடிய விலங்குகளிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள அவற்றை வேட்டையாட முற்பட்டான். வேட்டையாடிய விலங்குகளை உணவாக (பச்சை மாமிசம்) உட்கொண்டான்.

பகை விலங்குகளிடமிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவும் உணவு வேட்டைக்காகவும் முதன்முதலாகக் குழு மனப்பான்மையைத் தனக்குள் வளர்த்துக் கொண்ட மனிதனுக்குக் கரடு முரடான கற்கருவிகளே ஆயுதமாக இருந்தது. பின்னர், சிலவகை மரக்கொம்புகளையும் (மூங்கில்) விலங்குகளின் எலும்புகளையும் ஆயுதமாகப் பயன்படுத்தத் தொடங்கினான். வேட்டைச் சமூகம் என்னும் வாழ்க்கை முறை இந்த காலத்தில் தான் மனித சமூகத்தில் நிலைப்பெறத் தொடங்கியது. "இது மனித குலத்தின் குழந்தைப் பருவம் ஆகும். மனிதன் தனது ஆரம்ப இருப்பிடமான உஷ்ணப் பிரதேச அல்லது அரை உஷ்ணப் பிரதேச காடுகளிலேதான் இன்னும் வசித்து வந்தான். குறைந்த பட்சம் அரைகுறையாவது

மரங்களில்தான் குடியிருந்து வந்தான். கொன்றுத் தின்னும் பெரிய மிருகங்களின் எதிரே அவன் தொடர்ந்து தப்பி வாழ்வதை இது ஒன்றுதான் விளக்குகிறது. பழங்கள் கொட்டைகள் கிழங்குகள் அவனுக்கு உணவாகப் பயன்பட்டன. ஓசைச் சீருள்ள பேச்சு அமையப் பெற்றது தான் இந்த கட்டத்தின் பிரதான சாதனையாகும். மிருக ராசியிலிருந்து மனிதன் தோன்றினான் என்பதை ஒத்துக்கொண்டால் இந்த மாற்றக் காலக்கட்டத்தை ஒத்துக்கொள்வதைத் தவிர்க்க முடியாது."[7] என்று ஏங்கல்ஸ் காட்டுமிராண்டி நிலை குறித்துக் குறிப்பிடுகிறார்.

### 1.3.1.2 இடைக்கட்டம்

தற்போது மனித குழுக்களின் எண்ணிக்கை பலவாறாகப் பெருகிக் காணப்படும் காலம். தமக்கு வேண்டிய உணவுகளில் பற்றாக்குறை ஏற்பட்ட குழுக்கள் தங்களுக்குள் பகிர்ந்து கொண்டனர். குழுக்களின் எண்ணிக்கை மேலும் பெருக உணவுத் தேவைக்காக தங்களுக்குள் மோதியும் கொண்டனர். இதனால் சில குழுக்கள் மலைக் காடுகளிலிருந்து இறங்கி சம வெளிகளை நோக்கிப் பயணம் செய்தனர். ஆற்றோரங்களில் அமைந்த சமவெளிகளில் தங்களை நிலை நிறுத்திக் கொண்டனர். ஆற்றோரங்களில் கிடைக்கப் பெற்ற மீன்களைத் தனக்கான உணவாக மாற்றிக் கொண்டு உயிர் வாழத்தலைப்பட்டனர்.

இந்த காலத்தில்தான் நெருப்பின் பயன்பாட்டை முழுமையாக மனித இனம் பயன்படுத்த தொடங்கியது. மீன் மனிதப் பயன்பாட்டில் முதன்மை உணவாக மாறத் தொடங்கியது. மீன் உணவை நெருப்பின் உதவியால் மட்டுமே மனிதனால் உட்கொள்ள முடிந்தது. எனவே, இந்தக் காலக்கட்டத்தில் தான் மனிதன் நெருப்பின் பயன்பாட்டை முழுமையாகப் பயன்படுத்தவும் அடுத்த கட்டத்திற்கு எடுத்துச் செல்லவும் முனைந்தான். "உணவுக்காக மீன்களை உபயோகித்துக் கொள்வது நெருப்பைப் பயன்படுத்திக் கொள்வது ஆகியவற்றுடன் இந்தக் கட்டம் தொடங்குகிறது. இவ்விரண்டும் ஒன்றையொன்று சார்ந்துள்ளன. ஏனெனில், நெருப்பை உபயோகிப்பதால் மட்டுமே மீனுணவு பூரணமாகக் கிடைக்கப்பெறும். இருந்த போதிலும் அந்தப் புதிய உணவு சீதோஷ்ண நிலையிலிருந்தும் வட்டாரத்திலிருந்தும் சுதந்திரமடையச் செய்தது. நதிகளின் கரையோரங்களைப் பின்பற்றிச் செல்வதின் வழியாகக் காட்டுமிராண்டி நிலையிலும் கூட மனிதன் உலக நிலப்பரப்பின் பெரும் பகுதியில் பரவிப்படர முடிந்தது."[8] என்று ஏங்கல்ஸ் காட்டுமிராண்டி நிலையின் இடைக்கட்டத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

### 1.3.1.3 தலைக் கட்டம்

இந்தக் காலத்தில்தான் மனிதன் முழுமையான அறிவுத் திறனைப் பயன்படுத்தத் தொடங்கினான். மற்ற விலங்குகளிடமிருந்து தன்னைத் தனித்துக் காட்ட முயன்றான். வேட்டையாடுதலில் புதிய உத்திகளைப் பயன்படுத்தி தனது வேட்டையை எளிமையாக்கினான். அறிவின் முதிர்ச்சியாக வில் அம்புகளைப் பயன்படுத்தி கொடிய விலங்குகள் அருகில் நெருங்கிச் செல்லாமல் தூரத்திலிருந்து வேட்டையாடும் உத்தியைப் பெற்று வேட்டை விலங்குகளைத் தனித்திருந்து தனி ஒருவனாக வேட்டையாட முனைகிறான். இதன் மூலம் குழுவின் உயிர்ச் சேதம் குறைக்கப்படுவதோடு தன் வேட்டையிலிருந்து விலங்குகள் தப்புவதும் குறைகிறது.

இந்தக் காலத்தில்தான் மனித இனம் ஆற்றின் நீரினைக் கடந்து மறுமுனைக்குச் செல்ல மர ஓடங்களைத் தயார் செய்வதிலும் மண்பாண்ட உற்பத்தியிலும் தன்னை ஈடுபடுத்தத் தொடங்கியது. இந்த வேலைப்பாடுகள் முழுமையும் தனி ஒருவனாகச் செய்ய இயலாத நிலையில் கூட்டு முயற்சியும் ஒருங்கிணைந்த செயல்பாடும் நடைபெற்றது. உணவுத்தேவையைத் தாண்டி இனக்குழு செயல்பாடுகள் சமூக வளர்ச்சியில் ஈடுபட தொடங்கியது. மேலும், நார் மற்றும் புல்லினைக் கொண்டு கூடை முடைதல் என்னும் அறிவின் உதவியால் கைவிரல்களுக்கு வேலைக்கொடுக்கும் பயிற்சியும் இக்காலத்தில் நடைபெற்றுள்ளது.

“வில்லும் அம்பும் கண்டுபிடிக்கப்பட்டதிலிருந்து இது தொடங்குகிறது. இதனால் காட்டு மிருகங்களின் இறைச்சி ஒழுங்காகச் சாப்பாட்டுக்குக் கிடைக்கிற உணவுப் பொருளாக அமைந்தது. வேட்டையாடுதலும் ஒரு சகஜமான தொழிலாயிற்று. இந்த ஆரம்பக் கட்டத்தில் கூட கிராமம் கிராமமாகக் குடிகளை அமைத்துத் தங்குவதின் ஆரம்ப நிலைகளைப் பார்க்கிறோம். மரத்தால் செய்த கலயங்கள், சாமான்கள், நாரிலிருந்து கைவிரல்களால் துணி நெய்தல், நாரைக் கொண்டோ அல்லது நாணல் புல்லைக் கொண்டோ கூடைகளை முடைதல், பட்டைத் தீட்டப்பட்ட கற்கருவிகள் ஆகிய ஜீவனோபாயத்திற்குரிய சாதனங்களை உற்பத்தி செய்வதில் ஓரளவுக்குத் தேர்ச்சியடைந்திருப்பதையும் பார்க்கிறோம். மேலும், பெரும்பாலான இடங்களில் நெருப்பும் கற்கோடாலியும் கொண்டு மரத்தைக் குடைந்து ஓடம் செய்யப்பட்டது. சில இடங்களில் வீடு கட்டுவதற்கு மரக்கட்டைகளும் பலகைகளும் செய்யப்பட்டன.”[9] என்று ஏங்கல்ஸ் காட்டுமிராண்டி நிலையின் தலைக்கட்டத்தை விவரிக்கிறார்.

### 1.3.2 அநாகரிக நிலை

#### 1.3.2.1 கடைக்கட்டம்

காட்டுமிராண்டி நிலையில் உணவிற்காக மிருகங்களை வேட்டையாடுதல் என்ற நிலையிலிருந்து விலங்குகளைத் தானே வளர்த்தல் என்ற நிலைக்கு மனித இனம் தன்னை மாற்றியமைத்துக்கொள்கிறது. இந்தக் கட்டத்தில்தான் மனிதன் முதன்முதலாக விவசாயத் தொழிலில் தன்னை ஆட்படுத்த முனைகிறான். முதன்முதலாக விவசாயத்திற்கான வித்து இந்தக் காலத்தில்தான் விதைக்கப்படுகிறது. இயற்கையாக விளைந்து நிற்கும் பயிர் வகைகளில் விதைகளைப் பயன்படுத்தி (குறிப்பிட்ட சில தானியங்களை) புதியப் பயிர்களை வளர்த்து அதன் மூலம் உணவு சேகரிப்பு என்ற நிலை உருவாகிறது. இந்நிலையில் இன்று குறிப்பிடப்படும் விவசாய நிலை அதாவது நிலத்தைப் பண்படுத்துதல், உழுதல், விதைத்தல் என்ற நிலை இன்றி இயற்கை விதைகளைத் தூவி பயிர்களைப் பெறுதல் என்ற முறையில் உணவு சேகரிப்பு நடைபெறுகிறது. மேலும், இந்த கட்டத்தில் ஆற்றங்கரையோரம் குடியேறிய குழுக்கள் கால நிலைக்கு உகந்த பயிர்களை உழுது விளைவித்து உண்ணும் பழக்கத்திற்குப் பழகத் தொடங்கியது.

தானிய விதைகளை விதைத்து தனக்குத் தேவையான உணவுகளைத் தானே உற்பத்தி செய்யும் பழக்கத்திற்குத் தன்னை மாற்றியமைத்துக் கொண்டது. மரங்களால் ஆன வீடுகள் உருவாக்கப்பட்டு நிலையான குடியிருப்புகள் அமைக்கப்பட்டன. மிருகங்களைப் பழக்குவதற்கும், விதைகளை விதைத்து உணவுப்பொருட்களைப் பெறுவதற்கும் குழுச் செயல்பாடே சாத்தியமாக்கியது. “மட்பாண்டங்கள் புகுந்த காலத்திலிருந்து இது தொடங்குகிறது. மிருகங்களைப் பழக்குவது, வளர்ப்பது, பயிர்ச்சாகுபடி செய்வது இவை அநாகரிக நிலையின் காலப்பகுதியின் விஷேத்தன்மை பெற்ற குணாதிசயமாகும்”[10] என்று அநாகரிக நிலையின் தன்மையை ஏங்கல்ஸ் சுட்டிக்காட்டுகிறார்.

#### 1.3.2.2 இடைக்கட்டம்

இந்தக் கட்டத்தில் ஒன்றிற்கு மேற்பட்ட விலங்கினங்களைப் பழக்கிக்கொள்ளத்தலைப்பட்டனர். மேலும், வளர்ப்பு விலங்குகள் இறைச்சிக்கு மட்டுமின்றி அவற்றின் பால்படு பொருட்களும் உணவில் சேர்த்துக் கொள்ளப்படுகிறது. பெரும்பான்மையான உணவுப் பொருட்களை விளைவித்தல் மூலமாகப் பெறப்படுகின்றன. ஒன்றிற்கு மேற்பட்ட தானியங்கள் விளைவிக்கப்பட்டன.

விவசாயத்தின் மூலமாகப் பழ வகைகளும் பெறப்பட்டன. நிலையான குடியிருப்புகள் அமைக்கப்பட்டு பெரும் குழுக்களாக (சிறு கிராம வடிவில்) தன்னை நிலை நிறுத்திக் கொண்டன. விலங்குகள் மட்டுமின்றி பறவைகளும் வளர்க்கப்பட்டன. வீடுகள் சுட்ட செங்கற்கள் அல்லது கற்களால் கட்டப்பட்டன. கால்நடைகள் வளர்ப்பில் தனிக்கவனம் செலுத்தப்பட்டு அவை மந்தை மந்தையாக வளர்க்கப்பட்டது. அநாகரிக நிலையின் இடைக்கட்டத்தை ஏங்கல்ஸ் "கிழக்குக்கண்டத்தில் மிருகங்களைப் பழக்குவதிலிருந்து இது தொடங்குகிறது. மேற்குக் கண்டத்தில் உணவுக்குரிய பயிர்களை நீர்ப் பாசனத்தைக் கொண்டு சாகுபடி செய்வது, கட்டிடங்கள் கட்டுவதற்கு அடோபுகளையும் கல்லையும் உபயோகிப்பது ஆகியவற்றிலிருந்து தொடங்குகிறது."[11] என்று கூறுகிறார். எனவே, அநாகரிக நிலையின் இடைக்கட்டம் கால்நடை வளர்ப்பு, பயிர்த்தொழில் ஆகிய இருநிலைகளைக் கொண்டதாக இருந்துள்ளது.

### 1.3.2.3 தலைக்கட்டம்

இரும்பைப் பயன்படுத்துவதிலிருந்து இந்த காலம் தொடங்குகிறது. இதனை உலோகக் காலம் என்று அறிஞர்கள் குறிப்பிடுவர். முதன் முதலாக இரும்பு, தாமிரம் போன்ற உலோகங்கள் பயன்பாட்டிற்கு வந்தன. இவை விவசாயத்தில் மிகப் பெரிய மாறுதல்களையும் வளர்ச்சியையும் கொண்டுவந்தன. விவசாயப் பணிகளை உலோகங்கள் எளிமையாக்கின. இங்குதான் முதன் முதலாக விலங்குகள் விவசாயத்தில் பயன்படுத்தப்பட்டன. இரும்பினால் செய்யப்பட்ட கலப்பைகள் எளிதில் நிலத்தைப் பண்படுத்தின. அதிகப்படியான நிலங்கள் விவசாயத்திற்குப் பயன்படுத்தப்பட்டதனால் உற்பத்தியானது பெருமளவில் நடைபெற்றது. உணவு பயன்பாட்டிற்குப் போக மீதமுள்ள உணவுப் பொருட்கள் சேமிப்பில் நிறுத்தி வைக்கப்பட்டு அவை விளைச்சல் இல்லாத காலங்களில் பயன்படுத்தப்பட்டன.

நிலையான உணவு உற்பத்தி மக்களின் பெருக்கத்திற்கும் பெருவாரியான மக்கள் ஒரே இடத்தில் இணைந்து வாழ்வதற்கும் வழிவகுத்தது. இந்த காலகட்டத்தில்தான் மனிதனிடத்தில் தனியாள் சொத்துடைமை என்ற நிலை உருவாகத் தொடங்கியது. குடும்பம் என்னும் முழுமையான கட்டமைப்பான அரசு தோற்றத்தின் முதல் படிநிலையும் இலக்கிய ஆக்கமும் தோன்றியது. "இரும்புக் கனிமம் உருக்கப்படுவதிலிருந்து இது தொடங்குகிறது. வரி வடிவத்தில் எழுதுவதைப் புனைந்து இலக்கிய சாசனங்களுக்காக அதைப் பயன்படுத்தியது

ஆகியவற்றின் வழியாக இந்தக் கட்டம் நாகரிக நிலைக்கு மாறிச் செல்கிறது. மாடுகள் இழுத்துச் செல்லும் இரும்புக் கலப்பைக் கொழுவை இங்கேதான் முதன் முதலில் சந்திக்கிறோம். விரிந்த அளவில் நிலத்தை உழுது பண்படுத்துவதை இது சாத்தியமாக்கிற்று. மேலும், அன்றைய நிலைமைகளில் உயிர் வாழ்வதற்குரிய சாதனங்கள் நடைமுறையில் வரம்பற்ற விதத்தில் பெருகுவதையும் சாத்தியமாக்கிற்று. இது சம்பந்தமாகக் காடுகள் வெட்டித் திருத்தப்பட்டு வயல்களாகவும் மேய்ச்சல் நிலங்களாகவும் மாற்றப்படுவதையும் காணலாம். இரும்புக் கோடாலியும் மண்வெட்டியும் இல்லாமல் இதுவும் விரிந்த அளவில் சாத்தியமாயிருந்திருக்காது. ஆனால், இத்துடன் ஜனத்தொகையும் துரிதமாகப் பெருகிற்று. சிறுசிறு வட்டாரங்களில் அடர்த்தியான ஜனத்தொகைப் பெருக்கமும் ஏற்பட்டது”[12] என்று அநாகரிக நிலையின் தலைக்கட்டத்தை ஏங்கல்ஸ் விவரிக்கிறார்.

## 1.4 இனக்குழுக்களின் பெயரிடும் முறை

குழுவாகச் செயல்பட்ட மனிதன் எண்ணிக்கையில் பெருகும் போது அவை சிறு சிறு குழுக்களாக உருமாறுகின்றன. தற்போது குழுக்களின் எண்ணிக்கை பல்கிப் பெருகும் போது உணவின் தேவையிலும் இனப்பெருக்க உறவு முறைகளிலும் பல்வேறு கட்டுப்பாடுகள் கட்டாயமாக்கப்படுகின்றன. இவையே நாளடைவில் குழுக்களிடையே மோதல்களைத் தோற்றுவிக்கின்றன. குழுக்கள் தங்களுக்கிடையே மோதும் போது அதன் தலைமை அல்லது ஆதிக்க சக்திகளின் பெயரினையோ அல்லது குறியீட்டையோ முன்னிறுத்தி தன்னை பிற குழுக்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுகிறது. நாளடைவில் அதன் அடையாளமே குழுவின் பெயராகவும் அதனைத் தொடர்ந்து வரும் சந்ததியினர் அந்த குழுக்களின் இனமாகவும் மாற்றம் பெறுகின்றனர்.

பெரும்பான்மை விலங்குகளின் அல்லது மரம், செடிகொடிகளின் பெயர்களையே தன் குழுவின் பெயர்களாக இட்டு அழைப்பர். இவர்களுக்கும் இயற்கைக்கும் இடையிலான உறவினைக் காட்டுகிறது. “இராகுவாய்களின் கணத்தைக் குறிப்பாகச் செனீகா குலத்தின் கணத்தை ஆதிகணத்தின் சஸ்திரீய வடிவமாக மார்க்கன் எடுத்துக்கொள்கிறார். அவர்களிடையே எட்டு கணங்கள் (குழுக்கள்) உள்ளன. அவை பின்வரும் மிருகங்களின் பெயர்களைத் தாங்கியுள்ளன. 1) ஓநாய், 2) கரடி, 3) ஆமை, 4) பீவர், 5) மான், 6) ஸ்னைப் என்ற பறவை, 7) ஹெரன் என்ற பறவை 8)பருந்து.”[13] என்று ஏங்கல்ஸ் ஆதிகணங்கள் கொண்டிருந்த விலங்குகளின் பெயர்களைப் பட்டியலிட்டுக்காட்டுகிறார்.

தமிழ் இனக்குழு வாழ்க்கை முறையில் விலங்குகளின் பெயர்களைவிட பூக்களைத் தங்கள் குழுக்களுக்குப் பெயர்களாக வைக்கும் வழக்கம் இருந்திருக்கவேண்டும். இரு பெரும் இனக்குழுக்கள் தங்களுக்குள் மோதும் போது தங்களை வெட்சி, கரந்தை, வஞ்சி போன்ற பூக்களைச் சூடிக்கொண்டதாகச் சங்க இலக்கியப் பதிவுகள் காட்டுகின்றன. ஆனால், தொடக்கத்தில் தங்களின் குழுக்களுக்கு இந்தப் பூக்களையே பெயராகச் சூட்டப்பட்டு அவை தங்களுக்குள் மோதும் போது தங்களை அடையாளப்படுத்திக்கொள்ள சூடியிருக்க வேண்டும். அதன் தொடர்ச்சியே போர்க்காலச் சூழலில் மாலையாக அணியும் மரபு பின்னாளில் வந்திருக்க வேண்டும்.

### 1.5 இனக்குழுவின் தலைமைமுறை

ஒவ்வொரு இனக்குழுக்களும் தனக்குரியத் தலைமையை நிர்ணயம் செய்தது அவர்களின் ஆலோசனைப்படியும் வழிகாட்டுதலின் படியும் செயல்பட்டது. மனிதன் குழுவாக வாழ்ந்த ஆதிகாலம் தொட்டே தலைமை என்ற முறையும் உருவாகியிருக்க வேண்டும் ஆனால், அங்குத் தலைமை என்ற பதவி நிலையோ அதிகார முறையோ நிர்ணயம் அல்லது வரையறை செய்திருக்க வாய்ப்பில்லை. குழு முறையில் உள்ள தலைமை வேட்டையாடுவதிலும் காலச் சூழலுக்கு ஏற்றவாறு தங்கும் இடங்களைத் தேர்வு செய்வதிலும் முக்கியப்பங்கு ஆற்றின. வேட்டையின் போது தன்குழுக்களில் யார் யார் எந்தப் பக்கம் நின்று விலங்குகளைத் தாக்கவேண்டும் என்றும் கொலை செய்யப்பட்ட விலங்கினை யாருக்கு எவ்வளவு பங்கிட வேண்டும் என்பது குறித்தும் அதிகார வரையறை பெற்ற தலைமையை இந்தக் குழுக்கள் பெற்றிருந்தன.

குழுக்களில் உள்ள வயதான பெண்களுக்கே தலைமையேற்று நடத்தும் பொறுப்பு இருந்துள்ளது. இன்றும் யானை போன்ற கூட்டமாக வாழும் விலங்கினங்கள் வயதான பெண் விலங்குகளையே தலைமையேற்று நடக்கின்றன. அவையே காலச் சூழலுக்கு ஏற்ப உணவு கிடைக்கும் இடங்களைத் தன் அனுபவத்தின் வாயிலாக கற்றுக் கொண்டதை வைத்துத் தனது இனத்தை வழி நடத்திச் செல்லும் பாங்கினைக் கொண்டுள்ளது. ஆதிகால குழுச் சமூகத்திலும் இனக்குழுச் சமூகத் தொடக்க காலத்திலும் பெண்களே தலைமை ஏற்று நடத்தி வந்துள்ளனர். ஆனால், இனக்குழுச் சமூகத்தின் கடைசிக் காலத்தில் பெண் தலைமை என்பது ஆண் தலைமை என மாற்றம் பெறுகிறது. பகைமை பெருகிவரும் இனக்குழுச் சமூகத்தின் கடைசிக் கட்டத்தில் எதிர் குழுக்களிடமிருந்து தன்னைக் காத்துக் கொள்ள வலிமையான தலைமையே இக்குழுக்களுக்குத் தேவைப்படுகிறது.

எனவே, மறம் பொருந்திய வீரர்களான ஆண்களே தலைமை பண்பினை ஏற்கும் சூழல் தானாக உருவாகியது. தற்போது தலைமைப் பண்பானது பெண்ணிடமிருந்து ஆணுக்கு மாற்றம் பெறுகிறது.

குழுவாகச் சேர்ந்து வேட்டையாடுதலின் போது பெண்ணின் தலைமையில் சிறப்பாகச் செயல்பட்ட குழு, தற்போது மனித மிருகங்களை (எதிரிகளை) வேட்டையாட (சண்டையிட) பெண்ணின் தலைமையைவிடக் களத்தில் வீரனாக நின்று போர் செய்து குழுவைக் காக்கும் ஆணையே தலைவனாக ஏற்றுக்கொள்ளத் துணிகிறது. ஆனால் சில இடங்களில் இத்தகைய போர்ச் சூழலில் மட்டும் வீரனான ஆண் போர்க் காலத் தலைவனாகவும் மற்ற காலங்களில் வழக்கமான பழைய தலைமையையும் ஏற்றுக் கொண்டு செயல்படும் வழக்கமும் நிகழ்ந்துள்ளது. பெண் தன்னுடைய நிலையிருப்பை இழந்தபோதிலும் அவளுடைய உரிமை ஆணுக்கு மாறியது. அதாவது பெண்ணுக்குக் கிடைக்க வேண்டிய தலைமை பதவி அவளுடைய மகனுக்கு (தலைவியின் மகனுக்கு) கிடைத்தது. ஆனால், தற்போது உள்ள தலைவனின் மகனுக்கு வாரிசு அடிப்படையில் தொடர்வது கிடையாது அதற்குப் பதிலாக அவனது சகோதரியின் மகனுக்கே அந்தப் பதவி உரிமையுடையதாக இருந்தது. இது தாய முறை என்றழைக்கப்படுகிறது. சங்க காலத்தில் தாயமுறை எச்சங்கள் இருந்ததற்குச் சான்றாகச் சில பாடல்கள் அமைந்துள்ளது.

"வெளியன் வேண்மாள் நல்லினி யீன்றமகன" (பதிற். 2:2)

என்று இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை அறிமுகப்படுத்தும் இந்த பதிகம் அவனது தாயாரின் பெயரைச் சுட்டியே அவனை அறிமுகம் செய்யும் தாயமுறை எச்சங்கள் காணப்படுகின்றது. "அது தனது சாகெம் (சமாதான காலத்தில் தலைவன்) என்பவரையும் தனது தலைவனையும் (யுத்தத்தின் போது தலைவன்) தேர்ந்தெடுக்கிறது. குலத்திற்குள்ளிருந்துதான் சாகெம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். யுத்த தலைவனைக் குலத்திற்கு வெளியேயிருந்தும் தேர்ந்தெடுக்கலாம். அந்தப் பதவி சில சமயம் காலியாக இருக்கலாம். முந்திய சாகெமின் மகன் எப்போதும் சாகெம் பதவிக்கு வந்ததில்லை ஏனென்றால் இராகோஸ்களிடையே தாயுரிமை நிலவியது. மகன் மற்றொரு குலத்தைச் சார்ந்தவனாவான். ஆனால், சகோதரனோ சகோதரியின் மகனோ பெரும்பாலும் தேர்ந்தெடுக்கப்பட்டான"[14] என இனக் குழுக்களுக்கிடையே தலைமையானது பெண்ணிடமிருந்து ஆணுக்கு மாறியதைப்பற்றி ஏங்கல்ஸ் குறிப்பிடுகிறார்.

தமிழ்ச் சூழலில் இனக்குழுத் தலைவன் சீறூர் மன்னன் சிறு குடிக் கிழான் சீறூர்வன்மையோன் எனறழைக்கப்படுகிறான். இவன் கூட்டு உழைப்பிலிருந்து விலகிப் பிறர் உழைப்பில் வாழாதவன். இம்மன்னன் அரசனைப் போல அதிகாரம் செலுத்தாது இனக்குழுவின் தலைவனாக மட்டுமே செயல்படுபவனாகத் திகழ்ந்துள்ளான். போர்க்காலத்தில் மட்டுமே தலைவனாக இவன் செயல்பட்டுள்ளான். "இனக்குழுத் தலைவன் அவசியம் நேரும்பொழுதுதான் தலைமைப் பொறுப்பில் செயல்பட்டான். பிற சந்தர்ப்பங்களில் அவனும் பிறரைப்போல அக்குழுவின் ஒரு சாதாரண உறுப்பினனைப் போலவே நடந்துகொண்டான்"[15] என்று கா.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார். எனவே, அதிகாரம் படைத்த தலைமை அப்போதிருந்திருக்க வாய்ப்பில்லை.

### 1.6 திணை நிலைச் சமுதாயம்

உலகில் தோன்றிய குடிகளில் மூத்தக் குடி தமிழ் குடி என்று அறிஞர்களால் கூறப்பட்டு வருகிறது. மனித சமுதாயத்தின் தோற்ற வளர்ச்சியோடு இக்கூற்றினைத் தொடர்புப்படுத்தினால் தமிழ்ச் சமூகம், குழுச் சமூக அடிப்படையில் வளர்ச்சி அடைந்ததை அவதானிக்க இயலும். தமிழ்ச் சமூக கட்டமைப்பையும் அதன் வளர்ச்சிப் போக்கினையும் அறிய சங்க இலக்கியங்கள் பல்வேறு ஆய்வுத் தரவுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. சங்கச் சமுதாயத்தைத் திணைச் சமூகமாக இலக்கியப்பதிவுகள் காட்டுகின்றன. "சிற்றூர்களில் சிறுகுடிகளாகப் பாரம்பரியமாக வாழ்ந்த குடிசையைச் சுற்றியும் ஊரைச் சுற்றியும் வேலிகளை எல்லையாக இட்டுத் தனித் தனிக் குடும்பங்களாக இரத்த உறவுகளின் இயக்கத்தில் உணவைக் கூட்டமாக குடும்பமாகவோ யாருக்கும் உடைமையாகாத இயற்கை நிலத்திலிருந்து அல்லது கடலிலிருந்து உற்பத்தி செய்தோ அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிய ஒரு வாழ்க்கை முறையில் வாழ்ந்த பண்டைய சமூகத்தைத் திணைநிலைச் சமூகம்"[16] என்று திணைநிலைச் சமூகம் பற்றி ராஜ்கௌதமன் குறிப்பிடுகிறார்.

"திணை என்பதற்குப் 'பொருள்' என்று இளம்பூரணரும் 'ஒழுக்கம்' என்று நச்சினார்க்கினியரும் விளக்கம் தருகின்றனர்."[17] இங்கு ஒழுக்கம் என்பது மனித வரலாறு புவி எங்கும் பரவும் போது தனக்குள் ஏற்படும் மாற்றத்தையும் சூழல் அமைவுகளையும் எடுத்துக் கூறும் தன்மை என்று பொருள்படும். "திணை என்ற சொல் 'நிலம்' என்றும் குறிஞ்சிப்பாட்டில் 'குலம் அல்லது குடும்பம்' என்றும் உரை உள்ளது. குழு அல்லது குடியிருப்பு என்ற பொருளில் திணை நிலப்பெயர் என்ற

சொற்றொடர் வருகிறது. திணை என்ற சொல்லுக்கும் தொடக்கத்தில் குழு, குடும்பம் என்ற பொருள் உண்டு என்பது இதன் மூலம் தெரிகிறது. பெயர்ச்சொல்லின் பிரிவுகளைச் சுட்டிக்காட்டத் திணை என்ற சொல்லைப் பயன்படுத்துவதானது இப்பெயர் பிரிவு அல்லது குழு என்ற பொருள் உடையது என்பதற்குச் சான்றாகும்"[18] என்று கா.சிவதம்பி திணைக்கு விளக்கம் தருகிறார்.

சங்க காலத் திணை அமைப்பு அகத்திணை, புறத்திணை என இரண்டாகப் பகுக்கப்படுகிறது. அகத்திணை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை எனவும் புறத்திணை வெட்சி, வஞ்சி, காஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண் என்றும் பகுக்கப்பட்டுள்ளது. அவற்றில் பெரும்பான்மை இயற்கையில் தோன்றிய பூக்களின் பெயர்களைக் கொண்டுள்ளமை நோக்கத்தக்கது. இவை இயற்கையோடு இயைந்த சங்க கால மக்களின் வாழ்வியலை எடுத்தியம்புகிறது. குறிஞ்சி, முல்லை, மருதம் எனப் பகுக்கப்படும் நில அமைவுகள் மக்கள் ஓரிடத்தில் தங்கி நிலைத்து வாழத்தலைப்பட்ட சமூகமாகச் சங்க காலச் சமூகம் மாறியதைக் காட்டுகின்றது. கூட்டு வாழ்க்கை முறை நிலவிய இனக்குழுச் சமுதாயத்தைத் தொடர்ந்து நிலவுடைமைச் சமூகமாக மாறிய நிலையை இந்தத் திணைநிலைச் சமூகங்கள் எடுத்தோதுகின்றன. திணை நிலை வாழ்வு குறிஞ்சி, முல்லை போன்ற அந்தந்த நில வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டதைப் போல் நிலவுடைமையும் நிலத்தையே அடிப்படையாகக்கொண்டது. இவ்வாறு நிலம் மையப்படுத்தப்பட்ட நிலையில் உற்பத்திக்கான அடிப்படை ஆதாரமாக நிலம் அமைகிறது. தொல்காப்பியரும் நிலத்தை வாழ்வியலின் முதன்மைப் பொருளாகச் சுட்டுகிறார். இதனை

"முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்

இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே" (தொல். அகத். 4)

என்ற அடியின் வாயிலாக அறியலாம். "வாழ்வின் அடிப்படைத்தேவைகளில் முதன்மையான உணவு உற்பத்திக்கு ஆதாரமான நிலம் சமுதாயப் பொது உற்பத்திக்கும் பொதுத்துாய்ப்புக்கும் அடிப்படையாக இருந்த இனக்குழுச் சமுதாய நிலை மாறி நிலவுடைமைச் சமூகத்தில் அது தனி உடைமையாக மாறிய நிலையில் வேளாண் வர்க்கம் உருப்பெறுகிறது. உடைமையாளர், உழைப்பவர் என்ற பாகுபாட்டுடன் உற்பத்தி ஆதாரமும் உற்பத்தி சக்திகளின் பெருக்கமும் உபரி உற்பத்திக்கு வழிவகுக்க அந்த உற்பத்தி பிறிதொரு உடைமை வர்க்கமான வணிக வர்க்க உருவாக்கத்திற்கு வழிவகுக்கிறது. குழுத்தலைமை

நிலைத்தத்தலைமையாக மாற அரசும் உருவாகிறது. இவ்வாறு எல்லா வகையான மாற்றத்துக்கும் நிலமே அடிப்படையாக அமைகிறது. அரசு உருவான சூழலில் நில எல்லைப் பெருக்கமே அரசின் அடிப்படை நோக்கமாகிறது. நால்வகை நிலங்களும் அரசில் இணைகின்றன. அந்நால்வகை நிலங்களில் மருதம் வேளாண் பொருளாதாரத்திற்கும் நெய்தல் வணிக பொருளாதாரத்திற்கும் அடிப்படையாய் அமைகின்றது. இவ்விரண்டில் மருதத்தின் வேளாண் விளைப் பொருட்களின் அடிப்படையிலும் குறிஞ்சி, முல்லை இயற்கை விளைபொருட்களின் அடிப்படையிலும் உருவான வணிகப் பொருளாதாரம் முக்கியத்துவம் பெறுகிறது."[19] என்று திணை நிலைச் சமூகத்தின் வளர்ச்சிப்போக்கினைப் பெ.மாதையன் குறிப்பிடுகிறார்.

சங்க காலம் உணவு தேடும் வாழ்க்கை முறைகள் மாறி உணவு உற்பத்தி முறைகளில் மிகுந்த கவனம் செலுத்தப்பட்ட காலம் ஆகும். இதனால் உருவான நிலைத்த குடியிருப்புகள் சார்ந்த வாழ்வியல் நெறிகளைச் சங்கத் திணைச்சமுதாய வாழ்வு முறைகள் எடுத்துக்காட்டுகின்றன. நால்வேறு திணைச் சமுதாயங்களில் நால்வேறு வகையான உற்பத்தி முறைகளும் உறவு முறைகளும் நிலவியுள்ளன. குறிப்பிட்ட பொருளாதார அச்சை மையமாகக் கொண்டு ஒவ்வொரு திணைச் சமுதாயமும் செயல்பட்டுள்ளது. நிலப் பாகுபாட்டில் சீறூர் மன்னரும், முது குடி மன்னரும், குறுநில மன்னரும் முல்லை, மருதம், குறிஞ்சி என்ற மூவகை நிலப் பகுதியை ஆண்டமையும் பொருள் உற்பத்தியில் சிறந்து விளங்கும் மருதம், நெய்தல் ஆகிய இரு நிலப்பகுதிகளை வேந்தர்கள் ஆட்சி புரிந்தது குறிப்பிடத்தக்கது.

## 1.7 திணை நிலச் சமூகத்தின் வாழ்க்கை வேறுபாடுகள்

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நால்வகைத் திணைச் சமுதாயங்களும் நால்வகையான இயற்கைச் சூழல்களை மையமாகக் கொண்டு அமைந்தவை. சங்க காலம் இனக்குழுச் சமுதாய வாழ்விலிருந்து நிலவுடைமைச் சமூகமாக மாறிய காலக்கட்டம். இவ்வாறு இனக்குழுச் சமுதாயம் நிலவுடைமைச் சமுதாயமாக வளர்ந்து வரும் நிலையில் நானிலத் தலைமைகளிலும் வேறுபாடுகள் இருந்துள்ளன. முல்லை நிலப்பகுதிகளைச் சீறூர் மன்னரும், குறிஞ்சி நிலப்பகுதிகளைக் குறுநில மன்னரும், மருதநிலப் பகுதிகளை முதுகுடி மன்னர்களும் ஆண்டுள்ளனர். நெய்தல் நிலப்பகுதிகளிலும், மருத நிலப்பகுதிகளிலும் வேந்தர்கள் தம் செல்வாக்கை நிலைநாட்டி வேந்தர் சமுதாயம் உருவாகியுள்ளது. எனவே, பொருளாதார மேம்பாட்டிற்குச் சங்கச் சமுதாயம் நிலங்களை மையப்படுத்தி

அதன் வழியே மக்களின் வாழ்வியல் கூறுகள் இருந்துள்ளன. அதற்குத் திணைப் பாகுபாடும் அதன் வாழ்வியல் சூழலும் முக்கியப் பங்கு கொண்டிருந்த தன்மையைச் சங்க இலக்கியங்கள் அடிநாதமாகக் கொண்டுள்ளன.

### 1.7.1 குறிஞ்சித்திணை வாழ்வியல் கூறுகள்

குறிஞ்சித் திணையானது மலையும், மலைசார்ந்த இடங்களில் நடைபெறும் புன்செய் வேளாண்மையையும், வேட்டைத் தொழிலையும் அடிப்படையாகக் கொண்டுள்ளது. தினை, ஐவன நெல், புல்லரிசி, மூங்கிலரிசி, அவரை, கிழங்கு, தேன் மற்றும் வேட்டைப் பொருட்கள் இச்சமுதாயத்தின் அடிப்படை உணவுகளாக அமைகின்றன. இவை உழவரால் உழுது விதைக்கப்படாத சூழலில் இயற்கையாகக் கிடைக்கும் விவசாய உணவுப்பொருட்களால் அமைந்தவையாகும்.

“உழவர் உழாதன நான்கு பயன் உடைத்தே
ஒன்றே, சிறியிலை வெதிரின் நெல் விளையும்மே
இரண்டே, தீம் சுளைப் பலவின் பழம் ஊழ்க்கும்மே
மூன்றே, கொழுங் கொடி வள்ளிக் கிழங்கு வீழ்க்கும்மே
நான்கே, அணி நிற ஓரி பாய்தலின், மீது அழிந்து,
திணி நெடுங் குன்றம் தேன் சொரியும்மே.” (புறம். 109 3-8)

என்று குறிஞ்சித் திணையின் உணவுப்பொருட்களைப் புறநானூறு பட்டியலிட்டுக் காட்டுகிறது.

### 1.7.2 முல்லைத்திணை வாழ்வியல் கூறுகள்

முல்லை நில வாழ்வு கால்நடைப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டது. பால், மோர், தயிர், தினை, வரகு, கொள், அவரை என்பன இந்நில உணவுப்பொருட்களாக அமைகின்றன. முல்லை முழுக்கமுழுக்க கால்நடைப் பொருளாதாரத்தை மட்டுமல்லாமல் புன்செய் நில வேளாண்மையை அடிப்படையாகக் கொண்டுள்ளது.

"கருங் கால் வரகே, இருங் கதிர்த் தினையே,

சிறு கொடிக் கொள்ளே, பொறி கிளர் அவரையொடு,

இந் நான்கு அல்லது உணாவும் இல்லை" (புறம். 335 4-6)

என்று முல்லை நில மக்களின் உணவுப் பாரம்பரியத்தைப் புறநானூறு சுட்டுகிறது.

### 1.7.3 மருதத்திணை வாழ்வியல் கூறுகள்

குறிஞ்சி, முல்லை நில வாழ்வு முறைகளிலிருந்து மருதம் விளங்கியுள்ளது. நாற்று நடுதல், கடாவிடுதல், கரும்பாலை, அந்தணர் உறைவிடங்கள், வயல் வளம், வேளாளர் இல்ல வளம், குளத்தின் வளம் என பண்பாட்டளவிலும், செல்வ வளத்திலும் மேம்பட்ட சமூக தளத்தைக் கொண்ட சூழலாக மருதத்திணை விளங்கியுள்ளது. பசி அறியப்படாத ஊர்களாய் மருத நில ஊர்கள் சங்க இலக்கியங்களில் காட்டப்பட்டுள்ளன. செந்நெல், வெண்ணெல் உணவு இம்மக்களின் அடிப்படை உணவாக அமைந்துள்ளது.

"தொல்பசி அறியாத் துளங்கா இருக்கை

மல்லற் பேரூர" (பெரும்பாண். 253,254)

என்று மருத நில ஊரின் வளத்தைப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.

### 1.7.4 நெய்தல் திணை வாழ்வியல் கூறுகள்

குதிரைகளும் வடபுலப்பொருட்களும் கொண்ட நாவாய்களையும், தொழில் செய்வோரால் காக்கப்படும் பண்டகசாலைகளையும், மாடங்கள் உயர்ந்த தெருக்களையும், நெல் விளைவதற்குக் காரணமான எருதுகளுடன் ஆடுகளும், நாய்களும் உள்ள சோற்று வளம் மிக்க நல்ல இல்லங்களையும் உடையதாக நெய்தல் நிலம் காட்டப்பட்டுள்ளது. நெல்லோடு தோப்புக்குடிகளின் உணவாக இளநீர், பலா, வாழை, நுங்கு, சேப்பங்கிழங்கு ஆகியனவும் கூறப்பட்டுள்ளன.

"கறை அடிக்குன்று உறழ் யானை மருங்குல் ஏய்க்கும்,

வண் தோட்டுத் தெங்கின் வாடு மடல் வேய்ந்த,

...................................................

தீம் பல் தாரம் முனையின், சேம்பின்

முளைப் புற முதிர் கிழங்கு ஆர்குவிர்.” (பெரும்பாண். 352-362)

என்று பெரும்பாணாற்றுப்படை நெய்தல் நில மக்களின்வாழ்வியலைச் சுட்டுகிறது. இவ்வாறு நால்வேறு நிலங்களும் நால்வகை வாழ்க்கை முறைகளை உடையது. இந்த வேறுபட்ட வாழ்வியல் முறைகள், வேறுபட்ட பொருளாதாரச் சார்பை அடிப்படையாகக் கொண்டது. இந்த வேறுபட்ட வாழ்வைக் காட்டும் திணைச் சமுதாயங்கள் சமச்சீரற்ற வளர்ச்சிப் போக்குகளைக் கொண்டுள்ளது. இந்த நால்வகை நிலங்களும் தனித்தனித் தீவுகளாக அமையாது, ஒவ்வொரு நிலங்களும் மற்ற நிலங்களுடன் தொடர்பு கொள்ளவும், உணவு உற்பத்திப் பொருட்கள் நால்வேறு நிலப்பகுதியில் பரவுவதற்கும் பண்டமாற்றுமுறை பேரளவில் உதவியுள்ளது.

## 1.8 சங்கப்பாடல்களில் இனக்குழு எச்சங்கள்

### 1.8.1 வேடர் இனக்குழுச் சமூகம்

தமிழ் இனக்குழுச் சமூகத்தின் தொல்குடியாகவும், இனக்குழு வாழ்க்கை முறையை முழுமையாகவும் தனக்குள் கொண்ட ஒரு சமூகவாழ்வை வேடர் குடி பெற்றுள்ளது.

“வெண் குடை நிழற்றிய ஒருமையோர்க்கும்,

நடு நாள் யாமத்தும் பகலும் துஞ்சான்

கடு மாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும” (புறம். 189)

என்ற புறநானூற்றுப் பாடல் அடிகள் வேடர் முதல் வேந்தன் வரையிலான ஒரு சமூகத்தின் தள வரிசை முறை சங்க காலத்தில் இருந்துள்ளதைக் காட்டுகிறது. இதிலிருந்து வேடர் குடியின் தொன்மையை அறியலாம். மேலும்,

“பைங் குழைத் தழையர் பழையர் மகளிர” (அகம். 331)

என்ற அகநானூற்றுப் பாடலடியிலுள்ள பழையர் என்ற சொல் வேட்டுவக்குடியின் தொன்மையைப் பறைசாற்றுவதாக உள்ளது.

சங்க இலக்கியங்கள் வேட்டையை முக்கியத் தொழிலாகக் கொண்டவர்களை வேட்டுவர் என்ற பொதுச் சொல்லால் குறிக்கின்றன. சங்க இலக்கியங்களில் வேடன் தவிர்த்து கள்வன், வன்கண் ஆடவர், நெடுஞ்சிலை மறவர், துவர்செய் ஆடை

செந்தொடை மறவர், வேட்டுவன், செயிர் நோக்கு ஆடவர், அந்தக்கள்வர், மழவர், மறவர், வேட்டைக்கள்வர், கொடுவில் எயினர், கொள்ளையர், செங்கண் ஆடவர், கொலைவில் ஆடவர், கொடு நோக்கு ஆடவர், கொடுவில் எயினர், கடுங்கண் மறவர், பழையர், வலைவர் என்ற பெயர்களில் இவர்கள் அழைக்கப்பட்டுள்ளனர்.

வில் அம்புகளைக் கருவிகளாகக் கொண்டு விலங்குகளை வேட்டை நாய்களின் துணையோடு வேட்டையாடி உணவாகக் கொள்பவர்கள் வேடன் அல்லது வேடர்கள் என்று அழைக்கப்பட்டனர். இதனை,

"பகை புறம் கண்ட பல் வேல் இளைஞரின்
உரவுச் சினம் செருக்கி, துன்னுதொறும் வெகுளும்,
முளை வாள் எயிற்ற, வள் உகிர், ஞமலி
திளையாக் கண்ண வளைகுபு நெரிதர" (குறிஞ். 129-132)

என்ற பாடலில் வேட்டைச் சமூகத்தைச் சார்ந்த ஒருவன் வேட்டை நாயுடன் விலங்கு வேட்டைக்கு வந்த செய்தியைக் கபிலர் எடுத்துக்கூறுகிறார். கூட்டங்கூட்டமாக வேட்டையாடுவது நிகழ்ந்தாலும் வேடர்களில் சிலர் தனியொருவனாகவும் வேட்டைத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர்.

"உடும்பு கொலீஇ, வரி நுணல் அகழ்ந்து,
நெடுங் கோட்டுப் புற்றத்து ஈயல் கெண்டி,
எல்லு முயல் எறிந்த வேட்டுவன் சுவல" (நற். 59)

"பார்வை வேட்டுவன் படு வலை வெரீஇ,
நெடுங்கால் கணந்துள்அம் புலம்பு கொள்தெள் விளி" (நற். 212)

என்ற பாடல் அடிகள் வேடர்கள் தனியொருவனாய் வேட்டையாடும் நிகழ்வுகளை எடுத்துக் கூறுகிறது.

வனவிலங்குகளான பசுக்களையும் காளைகளையும் வீட்டு வசமாக்கிய முல்லை நிலப்பகுதி வேடர்கள் நாகரிக வளர்ச்சி காலத்தில்கூட அவற்றை வேட்டை விலங்குகளாகவே கருதி வந்துள்ளனர். வேடர்கள் கள்வர்கள், கொலைகாரர்கள், வழிப்பறிக் கொள்ளையர்கள், இரக்கமில்லாதவர்கள், பச்சைக்கறி உண்பவர்கள்,

உண்டபின் கை, வாய் கழுவாத நாகரிகமற்றவர்கள், ஆறலைக் கள்வர்கள் என சங்கப் பாடல்களில் வருணிக்கப்பட்டுள்ளனர்.

“செல்சாத்து எறியும் பண்பு இல் வாழ்க்கை” (அகம். 245)

“கலன் இலர் ஆயினும் கொன்று
புள் ஊட்டும் கல்லா இளையர” (அகம். 375)

என்ற அகநானூற்றுத் தொடர்கள் வேடர்களை நாகரிகமற்றவர்களாகப் பதிவுசெய்துள்ளன.

மலை வேளாண்மையும், வேட்டையும், தேன், கிழங்கு சேகரிப்பும், பிரதான பொருளாதாரச் செயல்பாடுகளாகக் கொண்டிருந்த கானக்குறவர் குடி நாகரிகமும், ஆடு மாடு வளர்ப்பையும் பால் உற்பத்தியையும் பால்படு பொருள்களின் பண்டமாற்றையும், கொல்லைகளில் மலைசார்ந்த வரகு தானிய விவசாயத்தையும் பிரதான பொருளாதாரச் செயல்பாடுகளாகக் கொண்டிருந்த முல்லை குடிகளின் நாகரிகமும், கடலில் மீன், முத்து, சங்கு, சிப்பி எடுத்தல், கழிகளில் பாத்தி கட்டி உப்பு எடுத்தல், பண்டமாற்று ஆகியவற்றைத் தலையான பொருளாதார நடவடிக்கையாகக் கொண்டிருந்த பரதவர் மற்றும் உமணர் குடி நாகரிகமும் இந்த வேடர் குடி மக்களிடமிருந்து தோன்றிப் பரிணாம வளர்ச்சிப் பெற்றுள்ளன. எனவே, வேடர் குடியே தொல் சமூகத்தில் அல்லது இனக்குழுச் சமூகத்தின் எச்சமாகக் கருதப்படுகிறது. இதனைக், “குறிப்பிட்டபொருளாதார நடவடிக்கைகளில் ஈடுபட்ட குடிகளின் நாகரிகங்கள் வரலாற்றுக்கு முந்தைய காலகட்டத்தில் இருந்திருக்கக்கூடிய, ஒன்று அல்லது ஒன்றிற்கு மேற்பட்ட மூல இனக்குழு நாகரிகத்திலிருந்து இன்னும் சற்று விரிந்த அளவில் விரிந்த ஊகத்தில் கூறுவதென்றால் மூலதிராவிட இனக்குழுக்களின் நாகரிகத்திலிருந்து வளர்சிதை மாற்றங்களை அடைந்து சங்க காலத்தில் பாடல்களில் பதிவாகிய வடிவத்தைப் பெற்றிருக்கலாம”[20] என்று ராஜ்கௌதமன் குறிப்பிடுவதிலிருந்து வேடர் குடியே மூல இனக்குழுவாக இருப்பதாகக் கருத இடமுள்ளது.

### 1.8.1.1 வேடர்களின் அமைவிடம்

சங்க கால வேடர்கள் மலை, காட்டுப்பகுதிகளில் சிற்றூர்களில் தங்கள் தொழிலுக்கு (வேட்டையாடுதல்) ஏதுவான இடங்களில் தங்களது குடியிருப்புகளை அமைத்துக்கொண்டனர். இவர்கள் தேக்கின் இலைகளைக் கொண்டு தங்கள்

குடிசைகளை அமைத்துள்ளனர். இவை காண்பதற்குப் புதர் போலக் காட்சித் தருகின்றன. இக்குடிசையின் முற்பகுதியில் முற்றங்கள் அமைத்துள்ளனர். தாங்கள் வேட்டையாடி வரும் இறைச்சியை முற்றத்தில் வைத்து அவித்து உண்டனர்.

"சேக்குவள் கொல்லோதானே தேக்கின்

அகல் இலை கவித்த புதல் போல் குரம்பை,

ஊன் புழுக்கு அயரும் முன்றில்,

கான் கெழு வாழ்நர் சிறுகுடியானே." (அகம். 315)

"படலைப் பந்தர்ப் புல் வேய் குரம்பை,

நல்கூர் சீறூர் எல்லித் தங்கி," (அகம். 87)

என்ற அகப்பாடல்களில் வேடர்கள் வாழ்ந்த குடிசையின் தன்மைகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

### 1.8.1.2 பூக்களை விற்பனை செய்தல்

வேடர்குடியினைச் சார்ந்த பெண்கள் இயற்கையில் பூத்த பூக்களைக் கொய்து அவற்றைப் பிற திணை சார்ந்த மக்கள் வாழ்ந்த வீதிகளில் விற்றுவந்துள்ளனர்.

"நீடு நிலை அரைய செங் குழை இருப்பை,

கோடு கடைந்தன்ன, கொள்ளை வான் பூ,

.................................................

குன்றகச் சிறுகுடி மறுகுதொறும் மறுகும்

சீறூர் நாடு பல பிறக்கு ஒழிய," (அகம். 331 )

நீண்ட இலையையும், அடிமரத்தினையும், சிவந்த தளிர்களையும் உடைய இருப்பை மரங்களின் தந்தத்தினைக் கடைந்தாற் போன்ற வெண்மையான பூக்களைக் கணுக்கள் திரண்டு நீண்ட மூங்கிற் குழாயில் திரட்டி பசிய தளிர்களாலான தழை ஆடையை அணிந்த எயினர் மகளிர் அவற்றைச் சீறூரின் தெருக்களில் சுழன்று விற்றுத் திரிந்தனர் என்று அகநானூற்றுப் பாடல் வரிகள் தெரிவிக்கிறது.

### 1.8.1.3 வேட்டைச் சடங்குகள்

இனக்குழு மக்கள் வேட்டைக்குச் செல்லும் முன்பு, விலங்கு நடனம் ஆடிவிட்டுச் சென்றனர். இவ்வாறு ஆடிவிட்டுச் சென்றால் வேட்டையில் நல்ல பலன் கிடைக்கும் என்று நம்பினர். இத்தகைய விலங்கு நடனம் வேட்டைச்சடங்காக இனக்குழு வாழ்க்கையில் இருந்துள்ளது. இதனை, மானிடவியலாளர்கள் நடனம் என்று குறிப்பிடுகின்றனர். “இனக்குழுவின் மந்திர நம்பிக்கைக்கு ஏற்ப இச்சடங்கு அல்லது நடனம் போலச் செய்யும் ஒத்த மந்திரமாகவே விளங்கின. இன்றைய திராவிடப் பழங்குடியினர் குறும்பர்களிடையே ‘நரிக்கூத்து’ நடைபெறுகிறது. நரிக்கூத்து என்பது எல்லோரும் சேர்ந்து வலைகளையும் ஈட்டிகளையும் எடுத்துக்கொண்டு, காட்டுக்குள் போய் தொல்லைக் கொடுக்கும் நரியைப் பிடிப்பதுதான். நரியைப் பிடிக்கக் கூச்சல் போட்டு வலை வீசிக் கூத்தாடுவர். நரி வேட்டையே அபிநயத்தில் கூத்தாக அமைகிறது.”[21] என்று கா.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

### 1.8.1.4 ஆநிரை கவர்தல்

வேட்டைத் தொழிலில் ஈடுபடும் வேடர்கள் ஆநிரை கவர்தலைச் செய்துள்ளனர். தங்களுக்குரிய வேட்டை விலங்குகள் கிடைக்காத போது முல்லை நில மக்களின் குடியிருப்புகளில் வளர்க்கப்பட்ட பசுக்கூட்டங்களைக் கொள்ளையிட்டு வந்துள்ளனர். இவர்கள் பசுக்கூட்டங்களை இரவு நேரத்தில் கவர்ந்து சென்று அவற்றை வேட்டைக் குடிகளுக்கிடையே பங்குபோட்டுக் கொள்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். அவ்வாறு பங்கு போட்டுக் கொள்ளும் ஆநிரைகளைக் கள்ளுக்கு விலையாக (பண்டமாற்று முறை) கொடுத்துள்ளனர். மேலும், வேந்தர்கள் சார்பாக ஆநிரை கவர்தலிலும் வேட்டுவர்கள் ஈடுபட்டுள்ளனர்.

“கடி புலம் கவர்ந்த கன்றுடைக் கொள்ளையர்,

நனை முதிர் தேறல் நுளையர்க்கு ஈயும்

.....................................................................

கல்லுடைப் படுவில் கலுழி தந்து,“ (நற். 33)

வேடர்களில் சிலர் கவர்ந்து வந்த மாட்டினை அறுத்து உணவாகவும் உட்கொண்டுள்ளனர் என்ற செய்தி நற்றிணையில் இடம்பெற்றுள்ளது.

### 1.8.1.5 நடுகல் எடுத்தல்

போரில் ஈடுபட்டு உயிர் துறக்கும் வீரர்களுக்குச் சங்க காலத்தில் நடுகல் எடுத்து அவர்களை வழிபடும் பழக்கம் இருந்துள்ளது. இப்பழக்கம் முதன் முதலில் இந்த வேட்டைச் சமூகத்தில் தோன்றியதாக இருக்க வேண்டும். ஆநிரை கவர்தலில் ஈடுபட்டு இறந்து போகும் வீரர்களுக்கு நடுகல் எடுக்கும் பழக்கம் வேடர்களிடையே காணப்பட்டுள்ளது. நடுகல்லுக்குப் பழியிடும் பழக்கமும் அவர்களிடையே இருந்துள்ளது.

"நுழை நுதி நெடு வேல், குறும் படை, மழவர்

முனை ஆத் தந்து, முரம்பின் வீழ்த்த

..................................................................

நடுகல் பீலி சூட்டி, துடிப்படுத்து,

தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலி கொடுக்கும" (நற். 35)

என்ற வரிகள் நெடிய வேலையுடைய, குறும்படை மழவர் (வேடர்கள்) தங்கள் நடுகல் கடவுளை வழிபட வேண்டி, அந்த நடு கல்லில் மயிற்தோகைகளைச் சூட்டி, துடியை அடித்து, தோப்பிக் கள்ளொடு செம்மறிக் குட்டியைப் பலி கொடுத்து வணங்கியதையும் என்று ஆநிரை கவர்தலில் ஈடுபட்டு போரில் இறந்த வீரனை வணங்கும் நிகழ்வினையும் அகநானூற்றுப் பாடல் மூலம் அறியலாம்.

### 1.8.2.1 ஆறலைக் கள்வர்கள்

வேட்டைத் தொழிலில் மட்டுமின்றி வேடர்களில் சிலர் கள்வர்களாகவும் செயல்பட்டுள்ளனர். வேட்டைக்குரிய விலங்குகள் கிடைக்காத போது காட்டு வழியாகச் செல்லும் வணிகரும் வழிப்போக்கர்களும் வேடர்களின் உடைமைப்பொருளாகவே கருதப்பட்டனர். வழிப்போக்கர்களாக வரும் வணிகர்களைத் தாக்கி அவர்களிடம் உள்ள

பொருட்களை வழிப்பறி செய்துள்ளனர். வழிப்பறியாகக் கிடைத்த பொருட்களைத் தங்கள் குடிகளுக்கிடையே பங்கு போட்டுக் கொண்டுள்ளனர்.

"சேக்குவம்கொல்லோ, நெஞ்சே! சாத்து எறிந்து

அதர் கூட்டுண்ணும் அணங்குடைப் பகழிக்

கொடு வில் ஆடவர் படு பகை வெரீஇ,

ஊர் எழுந்து உலறிய பீர் எழு முது பாழ"  (அகம். 167)

"அம்பு தொடை அமைதி காண்மார், வம்பலர்

கலன் இலர் ஆயினும் கொன்று, புள் ஊட்டும்

கல்லா இளையர் கலித்த கவலை,

கண நரி இனனொடு குழீஇ, நிணன் அருந்தும்

நெய்த்தோர் ஆடிய மல்லல் மொசி விரல"  (அகம். 375)

என்ற அகப்பாடல் வரிகள் வேடர்கள் வழிப்போக்கர்களைக் கொள்ளையிட்டு அவர்களிடம் பெற்ற பொருட்களைத் தங்கள் குடிகளுக்கிடையே பங்கு போட்டுக்கொள்ளும் செய்திகள் இடம் பெற்றுள்ளன.

**1.8.2.2 எயின வேடர்கள்**

தமிழக வேடர்கள் எயினர் குடியைச் சேர்ந்தவர்கள் இக்குடியைச் சாராத வேறு குடியைச் சார்ந்த வேடர்களும் சங்க காலத்தில் வாழ்ந்திருக்கக்கூடும். எயினர் குடிசைகள் வேல் போன்ற கூர்மையான ஈச்சம் இலைகளால் வேயப்பட்டிருந்தன. அதனால் அக்குடிசைகள் முள்ளம்பன்றியின் முதுகுபோல் ஒழுங்கின்றிக் காணப்பட்டன. குடிசையின் முற்றத்தில் படல் கட்டப்பட்டிருந்தது. எயினர்களின் வீட்டு உபயோகப்பொருட்களைப் போல வேட்டைக் கருவிகளும் எளிமையானதாகவே காணப்பட்டன. முறியடுப்பு, முரவு வாய்க் குழிசி, முதுவாய்ச்சாடி மற்றும் நிலவுரல், உலக்கை, துடுப்பு இவையே எயினர் வீட்டு உபயோகப் பொருட்களாக இருந்துள்ளன. இக்குடிசைகளில் மான் தோலால் படுக்கைகள் அமைக்கப்பட்டிருந்தன. கல், கவண், கைத்தடி, வில், அம்பு, வலை, வேல், குத்துக்கோல் முதலிய வேட்டைக்கருவிகளை எயினர்கள் வேட்டைக்குப் பயன்படுத்தியுள்ளனர். இவற்றால் உடும்பு, முயல், பன்றி, முள்ளம்பன்றி, மான், புலி, யானை முதலிய விலங்குகளை வேட்டையாடியுள்ளனர். புறா, காட்டுக்கோழி முதலிய பறவைகளையும் வேட்டையள்ளனர்.

எயிற்றியர் இரும்பு உளியால் கரம்பை சிலத்தைக்கிளறி புல்லரிசியைச் சேகரித்தனர். அவ்வரிசியை விளா மர நிழலின் அடியிலுள்ள முற்றத்தில் அமைந்த நில உரலில் பெய்து குறுங்காழ் உலக்கைக் கொண்டு குற்றி பெரிய கிணற்றில்

ஊறிய நீரை எடுத்து வந்து பானையிலிட்டு அடுப்பேற்றிக் காய்ந்த இறைச்சியோடு கலந்து சமைத்து உண்டனர்.

### 1.8.2.2.1 எயினர் அரண்

வேட்டை சமூகத்தவரான எயினர்கள் தம் முயற்சியால் விளைவித்துச் சேமித்த உணவு தானியங்கள் மற்றும் கால் நடைகள் முதலிய உடைமைகளை அண்டை புலங்களில் வசிப்பவர்களின் கொள்ளையிலிருந்து பாதுகாத்துக்கொள்ள வேண்டிய கட்டாயத்திலிருந்தனர். அதற்காக, அவர்கள் அரண் அமைத்துத் தம் செல்வத்தைப் பாதுகாத்துக் கொண்டனர்.

எயினர்கள் தாங்கள் குடியிருப்பைச் சுற்றிலும் அரண் அமைத்திருந்தனர். அவர்கள் அமைத்த அரணானது ஊகம் புல்லால் வேய்ந்த உயரமான மதில்களைக் கொண்டதாக இருந்தன. வீடுகளில் பலகைகளோடு வேல்களும் வரிசையாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. அவ்வேல்கள் பருந்து மொய்க்குமாறு பகைவரைக் குத்தி வீழ்த்தியதால் முனை மழுங்கியிருந்தன. இரு முனைகளிலும் முடிந்த நாணையுடைய விற்கள் சார்த்தி வைக்கப்பட்டிருந்தன. திரண்ட கால்களையுடைய பந்தல்களில் அம்புக்கட்டுகையும் வல்லோசையுடைய பறைகளும் வைக்கப்பட்டிருந்தன. வாயிலில் கணைய மரம் செருகப்பட்ட கதவுகள் பொருத்தப்பட்டிருந்தன. செவ்விய முனையையுடைய கழுக்கள் வரிசையாக நடப்பட்டிருந்தன. என்பதை,

“பருந்து பட,

ஒன்னாத் தெவ்வர் நடுங்க, ஓச்சி,

வைந் நுதி மழுங்கிய புலவு வாய் எ.்.கம்

வடி மணிப் பலகையொடு நிரைஇ, முடி நாண்

………………………………………….

கொடு வில் எயினக் குறும்பில் சேப்பின், (பெரும்பாண். 117-135)

என்று பெரும்பாணாற்றுப்படை எயினரின் அரண் பற்றிக் குறிப்பிடுகிறது.

### 1.8.2.2.2 எயினர் உணவு முறை

கரம்பை நிலமாகிய காட்டில் மிக விளைந்து உதிர்ந்து கிடந்த புல்லரிசியை எறும்புகள் இழுத்துச் சென்று சேமித்து வைத்திருந்தன. அவ்வாறு சேமித்து வைத்த இடங்களைத்தேடி எயினப் பெண்கள் சென்றனர். வெண்மையான பற்களையுடைய அவர்கள் தம் கையில் வைத்திருந்த கடப்பாரையால் அவ்விடங்களில் உள்ள கட்டிகள் கீழ்மேலாகுமாறு குத்தி எறும்புகள் சேமித்து வைத்திருந்த புல்லரிசியை எடுத்து வந்தார்கள். அதனை அவர்கள் குடிசையின் முற்றத்தில் விளா மரத்தின் அடியில் பதித்து வைத்திருந்த மரவுரலில் பெய்து, வயிரமுடைய கோலாகிய உலக்கையால் குற்றினார்கள். கிணற்றில் சில்லூற்றாக ஊறிய உவர் நீரை முகந்து வந்து, பழைய பானையில் உலை ஏற்றினார்கள். அரியாது ஆக்கின அச்சோற்றை உப்புக் கண்டத்தோடே, தெய்வங்களுக்குச் சேர இட்டு வைத்த பலிபோல தேக்கிலையில் வைத்து விருந்தினராக வந்த பாணர்க்கும் கொடுத்து தாமும் உண்டனர் என்பதை,

“பார்வை யாத்த பறை தாள் விளவின்

நீழல் முன்றில், நில உரல் பெய்து,

குறுங் காழ் உலக்கை ஓச்சி, நெடுங் கிணற்று

.....................................................

ஓடாத் தானை, ஒண் தொழில் கழல் கால்,

செவ் வரை நாடன், சென்னியம்“ எனினே

தெய்வ மடையின் தேக்கிலைக் குவைஇ, நும்

பை தீர் கடும்பொடு பதம் மிகப் பெறுகுவிர். (பெரும்பாண். 95-105)

என்று பெரும்பாணாற்றுப்படை பாடல் அடிகள் எயினரின் உணவு முறையை எடுத்துரைக்கின்றன.

### 1.8.2.3 வடுக வேடர்கள்

தமிழ் நாட்டைச் சார்ந்த எயினரும், வட வேங்கட மலைக்கு அப்பால் வேற்று மொழி பேசிய தேசத்தைச் சேர்ந்த வடுகரும் வேடர் குடியாகக் காணப்படுகிறார்கள். தமிழக வடக்கு, வடமேற்கு எல்லையோர மலைப் பகுதிகளில்

வேட்டையாடி வாழ்ந்த தமிழ் மொழியல்லாத மொழிகள் பேசியோரை வடுகர், வடுக வேடர், வம்ப வடுகர் என்று குறிப்பிடப்பட்டுள்ளனர். வடுக வேடர் வாழ்ந்த பகுதி வடுக தேசமாகச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகிறது.

"கற்று உரிக் குடம்பைக் கத நாய் வடுகர்

வில் சினம் தணிந்த வெருவரு கவலை,

குருதி ஆடிய புலவு நாறு இருஞ்சிறை

எருவைச் சேவல் ஈண்டுகிளைத் தொழுதி

பச்சூன் கொள்ளை சாற்றிப் பறைநிவந்து" (அகம். 381)

என்ற அகநானூற்று அடிகள் சினம் கொண்ட நாயினையும் கொடிய வில்லையும் உடைய வடுக வேடர்கள் கொழுப்பு மிகுந்த பசுவின் இறைச்சியைப் பங்கு போட்ட செய்தியைக் கூறுகிறது. மேலும், வடுக வேடர்கள் தேக்கின் இலையால் அமைந்த குடிசைகளில் வாழ்ந்த செய்தியை,

"புகர் அரைத் தேக்கின் அகல் இலை மாந்தும்

கல்லா நீள் மொழிக் கத நாய் வடுகர" (அகம். 107)

என்ற அடிகள் எடுத்தோதுகின்றன. வடுக வேடர்கள் மொழியால் மட்டுமே தமிழக வேடர்களிடமிருந்து வேறுபட்டவர்களாக இருந்துள்ளனர். ஆநிரை கவர்தல், பசுக் கறி உண்ணுதல், கள் குடித்தல், குடிசையில் வாழ்தல், வேட்டை நாயைக் கொண்டு வேட்டையாடுதல் ஆகியவற்றில் தமிழக வேடர்களை ஒத்துக் காணப்படுகின்றனர். "மலைப்புற இனக் குழு வாழ்வின் எச்சங்களை வேடர்குடிச் சமூகத்தில் தெளிவாகக் காணலாம். இவர்களுக்கு வேளாண்மை ஓர்மை ஏதும் இருக்கவில்லை உணவு சேகரிக்கும் நாகரிகத்திலிருந்து இவர்கள் அடுத்த படிநிலையை எட்டவில்லை. கோடைக் காலத்தில் வறண்ட நிலங்களில் சிதறிய சிறு புல்லரிசியை எறும்புகள் தம் அளைகளில் சேகரித்ததை வேடர்கள் பறித்துத் தங்களது உணவாகக் கொண்டுள்ளனர். பத்துப் பாடல்களில் இவர்களைப் பற்றி வந்துள்ள வருணனைச் சிறுபாணாற்றுப்படையில் வேலூர் எயினப் பெண் புளிச்சோறு சமைத்து ஆமான் இறைச்சியைச் சுட்டு விருந்தோம்பியதாக எட்டுத் தொகையின் அகப்பாடல் வேடர்களிடமிருந்து வேலூர் எயினர்கள் சற்று முன்னேறியவர்களைப் போலத் தெரிகிறது."[22] என்று ராஜ் கௌதமன் வேடர் குடிகளைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

### 1.8.2.4 கானக் குறவர்கள்

மலை வேளாண்மை, தேன், கிழங்கு, பலா சேகரிப்பு, வேட்டை என்ற அளவில் வேடர்களை விட உணவு உற்பத்தி நாகரிகம், பண்பாடு ஆகிய நிலைகளில் வளர்ந்தவர்களாகக் கானக் குறவர்கள் காணப்படுகின்றனர். கானக்குறவர்கள் புகைக்குறவன், ஏனல் காவலர், காவலன் நாடன், கிளைக்குறவன், மலை உறைக்குறவர், குடிக்குறவர் என இலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ளனர். இந்தக் கானக் குறவர்களின் வாழ்விடத்திற்கும் வேடர்களின் வாழ்விடத்திற்கும் பெரிய வேறுபாடு இல்லை. மலை வேளாண்மையைக் கானக் குறவர்கள் மேற்கொள்ளாத நிலையில் இவர்களை வேடர்களிடமிருந்து பிரித்துப் பார்க்க இயலாது. இந்த இரு குழு மக்களும் வில், அம்பு, வேட்டை நாய், கொம்பு, வலை, பொறி, என்பவற்றில் மட்டுமே கானக் குறவர்கள் வேடர்களை விட மேம்பட்டவர்களாக இருந்துள்ளனர்.

“கோடு துவையா, கோள் வாய் நாயொடு

காடு தேர்ந்து அசைஇய வய மான் வேட்டு

வயவர் மகளிர் என்றிஆயின்,

குறவர் மகளிரேம் குன்று கெழு கொடிச்சியேம்

………………………………………

வேங்கை முன்றில் குரவையும் கண்டே.” (நற். 276)

என்ற நற்றிணைப்பாடலில் வரும் தலைவி தன் தலைவனை விளித்து தன்னை வேட்டுவக்குடியின் மகளிர் எனவும் தன்னைக் குறவர் மகளிர் எனவும் விளித்தற்குப் பொருந்தும் என்றும் தன் ஊரின் கண் தங்கியிருந்து வேங்கை மரத்தடியில் நிகழும் குறவைக் கூத்தினைக் கண்டு செல்லும்படியாகவும் அழைப்பு விடுப்பதாகப் பாடல் அடிகள் அமைகின்றன. இதிலிருந்து குறவர்களையும் வேட்டுவர்களையும் பிரித்து அறியாத நிலையை உய்த்துணரமுடிகிறது.

#### 1.8.2.4.1 குறவர்களின் குடிசைகள்

கானக் குறவர்களின் குடிசைகள் அருவிகள் பக்கமாக அமைக்கப்பட்டன. அவை புல்லால் வேயப்பட்டிருந்தன. குடிசைகளுக்கு முன்பகுதியில் முற்றம் அமைக்கப்பட்டிருந்தது. முற்றங்களில் நெல்லி, பலா, வேங்கை மரங்கள்

வளர்க்கப்பட்டன. கானக் குறவர்கள் கற்றாழை நாரால் ஆடை நெய்து உடுத்தியுள்ளனர். புலிப்பல்லும் மணியும் கோர்த்த தாலி என்ற அணிகலனைக் குறமகளிர்கள் அணிந்துள்ளனர்.

"மரல் நார் உடுக்கை மலை உறை குறவர" (நற். 64)

என்ற நற்றிணைப் பாடல் வரி குறவர்கள் நார் ஆடை உடுத்திய செய்தியை உரைக்கிறது.

### 1.8.2.4.2 கானக்குறவர்களின் வேளாண்மைமுறை

கல்லும் வில்லும் கைத்தடியும் கொண்டு வேட்டையாடித் திரிந்த மனிதன் உணவுக்காகத் தானியச் சாகுபடி முயற்சியில் ஈடுபட்டான், அப்போது அவன் பயிர் சாகுபடி பற்றி ஏதும் அறியாத நிலையில்தான் இருந்தான். இந்நிலையில் நிலத்தில் கிடக்கும் கிழங்குகளைத் தின்பதற்காகப் பன்றிகள் மண்ணைத் தொண்டிக் கிளறிப் புழுதியாக்கியிருப்பதைக் கண்டான். அவ்வாறு பன்றிகளால் கிளறிப் புழுதியாக்கப்பட்ட இடங்களில் கானவர் மழைக்காலத்தில் தினை விதைத்தனர். அங்ஙனம் விதைத்த தினை முளைத்து வளர்ந்து விளைத்தது.

குறவர்கள் வாழ்ந்த இருப்பிடத்திற்கு அருகில் உள்ள சாரலில் குறவர் குடும்பங்கள் மரம், புதர், கொடி முதலியவற்றை நெருப்பூட்டி எரித்துச் சாம்பலாக்கி புதிய புனங்களை ஏற்படுத்துகிறார்கள். இவ்வாறு உருவாக்கிய புதிய புனங்களில் மழை பெய்த பின் தினை அல்லது ஐவனம் என்ற காட்டு நெல் வகையை விதைத்து வளர்த்து அறுவடை செய்தார்கள். தொடர்ச்சியாக ஒரே புனங்களில் அவர்கள் பயிரிடவில்லை. புதிய புதிய புனங்களை ஆங்காங்கு உண்டாக்கி பயிரிட்டனர்.

"மரம் கொல் கானவன் புனம் துளர்ந்து வித்திய
பிறங்கு குரல் இறடி காக்கும், புறம் தாழ்
அம் சில் ஓதி, அசை இயல், கொடிச்சி" (குறுந். 214)

"யாஅம் கொன்ற மரம் சுட்ட இயவில்
கரும்பு மருள் முதல பைந் தாட் செந் தினை" (குறுந். 198)

மரங்களைச் சுட்டு அழித்த இடங்களில் கரும்பைப் போன்ற பசிய காம்பையுடைய சிவந்த தினையினைக் கானக்குறவர்கள் பயரிட்டனர் என்று குறுந்தொகை குறிப்பிடுகிறது. தினை விவசாயம் கானவரின் வாழ்வின் முக்கிய நடவடிக்கையாக இருந்தது வேடர்குடி வாழ்விலிருந்து இந்நடவடிக்கையே இக்குறவர்குடி வாழ்வை வேறுபடுத்தியது. தினையோடு ஐவன நெல், அவரை, உளுந்து முதலியவற்றையும் கானக்குறவர்கள் பயிரிட்டனர்.

“வார் உறு வணர் கதுப்பு உளரி, புறம் சேர்பு,

பெரும் புனக் குறவன் சிறு தினை மறுகால்

கொழுங் கொடி அவரை பூக்கும்

அரும் பனி அற்சிரம் வாராதோரே.” (குறுந். 82)

குறவர்கள் ஐவன விளைச்சலுக்கு அருவி நீரும் தினை விளைச்சலுக்கு மழை நீரும் போதுமானதாக இருந்தது. தினையில் கருந்தினை, செந்தினை வகைகள் இருந்தன. தினையை இடித்து மாவாக்கி உணவாக உட்கொண்டுள்ளனர்.

### 1.8.2.4.3 தினைக் கதிர்களை அறுவடை செய்தல்

புனத்தில் நீண்ட தோகைவிட்டு விளைந்த தினைக்கதிர்களை அறுவடை செய்ய கானக்குறவர்கள் கூட்டமாக முற்றத்தில் தங்கி வானத்தில் மேகத்தின் இயக்கத்தைக்கண்டனர். வேங்கை மரங்கள் பூத்த காலங்களில் அறுவடை தொடங்கி முடிந்துவிடும். அறுவடைக் காலத்தினை விழாக் காலமாகக் கொண்டாடினர். குறவர் தம் வீட்டு முற்றத்தில் மகளிரோடு சேர்ந்து குரவைக்கூத்தாடி மகிழ்ந்தனர். குரவை ஆடுவதற்கென்று தனியாக ஆடுகளமும் அமைக்கப்பட்டிருந்தது. குறமகளிர் தினையை உரலில் இட்டு உலக்கையால் இடிக்கும் போது பாடல் (வள்ளைப்பாட்டு) பாடியுள்ளனர்.

“மன்ற வேங்கை மண நாட் பூத்த

மணி ஏர் அரும்பின் பொன் வீ தாஅய்

வியல் அறை வரிக்கும் முன்றில், குறவர்

மனை முதிர் மகளிரொடு குரவை தூங்கும்

ஆர் கலி விழவுக் களம் கடுப்ப, நாளும்,“ (அகம். 232)

என்று தினை அறுவடையின் போது குறமக்கள் கூத்தாடிய நிகழ்வினை மேற்கண்ட அகநானூற்று அடிகள் கூறுகின்றன.

'தினைப்புனத்தை, தினைக் கதிரைக் காத்த கடி உண் கடவுளுக்கு' என முதலில் விளைந்த தினைக் கதிரைக் குறவர்கள் கடவுளுக்குப் படைப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இரவில் தொண்டகப் பறையைக் கொட்டி விளைந்த தினையை அறுவடை செய்துள்ளனர். அறுவடை செய்த தினைக் கதிர்களைக் குறவர்கள் களத்தில் பரப்பி எருது விட்டுப் போரடித்துள்ளனர்.

வேட்டையில் சிக்கிய இறைச்சியைக் குறவர் குடிகளுக்கிடையே பகிர்ந்து உண்டது போலத் தினை, ஐவன தானியங்கள் பகிர்ந்து கொடுக்கப்படவில்லை. பயிரிடப்பட்ட குடும்பங்களுக்கு உடைமையாக அவை கருதப்பட்டிருக்க வேண்டும். புனத்தில் மழை நீரைச் சார்ந்து தினை விளைவிக்கப்பட்டிருக்க வேண்டும். ஐவன நெல்லை அருவிப் பரப்பில் விதைத்து, காட்டு முல்லை, கற்றாழைகளைக் களையாக எடுத்தார்கள். அருவி நீர் பாசனத்தில் ஐவன நெல்லை மட்டுமின்றி மலை வாழைகளைப் பயிரிட்டு வளர்த்துள்ளார்கள். தினை பயிரிட்ட நிலத்தைப் 'புனம், ஏனல், துடவை என்ற சொற்களால் குறிப்பிட்டுள்ளார்கள்.

"கை வளை நெகிழ்தலும் மெய் பசப்பு ஊர்தலும்,
மை படு சிலம்பின் ஐவனம் வித்தி
அருவியின் விளைக்கும் நாடனொடு," (குறுந். 371)

"அருவிப் பரப்பின் ஐவனம் வித்திப்
பரு இலைக் குளவியொடு பசு மரல் கட்கும்
காந்தள்அம் சிலம்பில் சிறுகுடி பசித்தென,
கடுங் கண் வேழத்துக் கோடு நொடுத்து உண்ணும" (குறுந்.100)

என்று அருவிப்பரப்பில் ஐவனம் பயிரிட்ட நிகழ்வைக் குறுந்தொகைப் பாடல் குறிப்பிடுகிறது.

### 1.8.2.4.4 கானக்குறவர்கள் புனத்தில் காவல் மேற்கொள்ளுதல்

கானக்குறவர்கள் வேளாண்மை செய்த பயிர்கள் முற்றி காலத்தில் காட்டுப்பறவைகளும், விலங்குகளும் பயிர்களுக்குத் தீங்கு விளைவித்தன.

பகற்பொழுதில் முற்றிய கதிர்களை உண்ண வரும் கிளி, மயில்களை விரட்டக் குறமகளிரும் இரவு நேரங்களில் பயிர்களை மேயவரும் விலங்குகளை விரட்டக்குறவர்களும் காவலில் ஈடுபட்டுள்ளனர். இரவு நேரங்களில் குறவர்கள் கணை எய்தியும், கிணைப் பறை கொட்டியும் கவண் வீசியும் பெரும் ஆர்ப்பாட்டம் செய்து விரட்டினார்கள். குறவர்கள் கைகளில் தீப்பந்தம் ஏந்தி காவலில் ஈடுபட்டுள்ளனர்.

> "மலை அயற் கலித்த மை ஆர் ஏனல்
>
> ............................................................
>
> கணையர், கிணையர், கை புனை கவணர்,
>
> விளியர், புறக்குடி ஆர்க்கும் நாட!" (நற்.108)
>
> "பைங் கண் மந்தி பார்ப்பொடு கவரும்
>
> ..................................................................
>
> பெருந் தோட் கொடிச்சி இருந்த ஊரே." (நற். 335)

என்ற குநற்தொகைப் பாடல் அடிகள் கானக் குறவர்கள் தனது புனத்தில் மேய வரும் குரங்குகளையும் கிளிகளையும் விரட்டிய செய்திகளைக் குறிப்பிடுகின்றன. "தினைக் கதிர் விளைந்து முற்றிய காலத்தில் பகற்பொழுதுகளில் கிளி, மயில் முதலிய பறவைகளும் இரவுப் பொழுதுகளில் பன்றி, யானை முதலிய விலங்குகளும் தினைக் கதிரைத் தின்று அழித்துவிடும். எனவே, அவற்றைக் காவல் காக்கும் பொறுப்பு இப்பொழுது மனிதனை வந்தடைந்தது. பகற்பொழுதில் பெண்களும் இரவு நேரங்களில் ஆண்களும் தினைப் பயிரைக் காவல் காத்தனர்."[23] என்று வெ.பெருமாள்சாமி குறிப்பிடுகிறார்.

### 1.8.2.4.5 பரண்கள் அமைத்தல்

யானை, பன்றி முதலிய விலங்குகள் இரவு நேரங்களில் வந்து தினைப்புனத்தை அழித்துவிடாமல் ஆண்கள் காவல் காத்தனர். அவர்கள் இரவு நேரக் காவலுக்காக மரங்களின் மேலும், மலைக்குகையின் மீதும் யானைக்கு எட்டாத உயரத்தில் பரண் அமைத்தனர். புனத்தைக் காப்பதற்கு உயரத்தில் பரணைக் கட்டினார்கள். யானையின் நிமிர்ந்த ஓங்கிய கைகளுக்கு எட்டாத

உயரத்தில் பரண் அமைக்கப்பட்டது. பெரும்பாலும் பரண்கள் வேங்கை, பலா போன்ற மரங்களிலும் மலைக் குகைகளிலும் வைக்கப்பட்டிருந்தது. இவை கழுது, இதணம், பணவை போன்ற பெயர்களால் அழைக்கப்பட்டது. பரண் மீது பகலில் குறமகளிரும் இரவில் குறமகனும் காவலிலிருந்துள்ளனர். பகலும் இரவுமாகப் பரண் கட்டி மேய வந்த பறவை, விலங்குகளிடமிருந்து குறவர் குடியினர் தினையைப் பாதுகாத்தனர். பகற்பொழுதில் குறமகளிர் தம் புனங்களில் அமைந்த பரண்களிலிருந்து ஊறித் தட்டை, குளிர், தழல், முறி முதலான கருவிகளைக் கொண்டு பறவைகளை விரட்டியுள்ளனர். இதனை,

“தே மொழித் திரண்ட மென் தோள், மா மலைப்

பரீஇ வித்திய ஏனல்

குரீஇ ஓப்புவாள், பெரு மழைக் கண்ணே!” (குறுந்.72)

என்ற பாடல் மூலம் அறியலாம். இரவில் பரண் மீது இருந்து தினைப்புனம் காத்த கானவன் யானை தன் துணையாகிய பிடியுடன் தினைப்புனத்தை மேய வந்த ஓசையைக் கேட்டான், மழைக்காலத்து இரவு ஆகையால் கானவன் கண்ணுக்கு யானை தெரியவில்லை. இடியும் மின்னலுமாக இருந்த அந்த நேரத்தில் ஓசை வந்த திசையை நோக்கி அவன் தன் கையிலிருந்த கவணையால் கல்லை வீசினான். விசையுடன் வீசப்பட்ட அக்கல் மலைமேல் இருந்த வேங்கை மரத்தின் ஒள்ளிய பூக்களைச் சிதறி, ஆசினிப் பலாவின் பழங்களை உதிர்த்து, தேனிறாலைச் சிதைத்து மரத்தின் துணர்களைக் குலைத்து, குலை பொருந்திய வாழையின் மடலைக் கிழித்துப் பலாப்பழத்துள் தங்கியது என்ற செய்தியை,

“இடி உமிழ்பு இரங்கிய விரவு பெயல் நடு நாள்,

கொடி விடுபு இருளிய மின்னுச் செய் விளக்கத்து,

பிடியொடு மேயும் புன்செய் யானை

.........................................................

தேன் செய் இறாஅல் துளைபடப் போகி,

நறு வடி மாவின் பைந் துணர் உழக்கி,

குலையுடை வாழைக் கொழு மடல் கிழியா,

பலவின் பழத்துள் தங்கும் மலை (கலி. குறிஞ்சி.5)

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம்.

#### 1.8.2.4.6 குறவரும் வேங்கை மரங்களும்

குறவர்க்குடி வாழ்க்கையோடு வேங்கை மரங்கள் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தன. அவர்களுடைய சடங்குகளில் தனித்த இடத்தினை இந்த வேங்கை மரங்கள் பெற்றிருந்தன. தினைப் புனங்களுக்கு அருகில் வேங்கை மரங்கள் இருந்தன. வேங்கை பூக்கும் காலத்தை அடிப்படையாகக் கொண்டு தினை அறுவடைக் காலம் அறியப்பட்டது. வேங்கை மரத்தடியில் திருமணங்கள் பேசி முடிக்கப்பட்டது. வேங்கை மரத்தில் பரண் அமைத்து தினைப் புனம் காவல் காக்கப்பட்டது. அவ்வாறு அமைக்கும் பரண்களில் புலியின் தோல் போர்த்தப்பட்டது. பலா மரத்தில் காய்த்த பலாக்கனிகளைக் குரங்குகளிடமிருந்தும் காட்டு யானைகளிடமிருந்தும் பாதுகாக்கக் குறவர்கள் வேங்கை மர நிழலில் குடிசை அமைத்தார்கள். அந்தக் குடிசையின் கூரை மூடுமாறு வேங்கைப் பூக்கள் உதிர்ந்தன. கூரை மீது கொட்டிக் கிடந்த வேங்கைப் பூக்களின் தோற்றம் புலி போல் இருந்ததால் புலியெனக் கருதி அஞ்சிய யானை, குரங்குகள் அவ்விடத்தை விட்டு விலகியுள்ளன. என்பதை,

“குறவர் ஊன்றிய குரம்பை புதைய,

வேங்கை தாஅய தேம் பாய் தோற்றம்

புலி செத்து, வெரீஇய புகர்முக வேழம்,

மழை படு சிலம்பில் கழைபட, பெயரும” (குறுந். 12)

என்ற குறுந்தொகை அடிகள் விளக்குகின்றன. “புலித் தோலையும் வேங்கை மரத்தின் பூக்களைக் கண்டும் யானைகள் வெகுண்டு ஓடவைப்பதற்காக இவ்வுத்தியைக் குறவர்கள் மேற்கொண்டிருக்கலாம். இதன் வழியாகத் தினைப் புனத்தில் மேய வந்த விலங்குகளை விரட்டியிருக்கலாம்.”[24] என்று ராஜ் கௌதமன் இதனை விளக்கியுள்ளார்.

#### 1.8.2.4.7 கானக்குறவர்கள் வேட்டைத் தொழிலில் ஈடுபடுதல்

கானக்குறவர்கள் வேடர்களைவிட வேளாண்மையில் ஈடுபட்டு பண்பாட்டளவில் முன்னேற்றத்தைக் கண்டாலும் கானக்குறவர்களும் தங்களுடைய

தொன்மையான வேட்டைத் தொழிலை முற்றிலுமாக விட்டொழிக்கவில்லை. கானக்குறவர்களின் வேட்டை அவர்களின் வேளாண்மை நிலத்தைப் பாதுகாப்கதற்காகப் பயன்படுத்தியுள்ளனர். வேளாண்மைப் பயிர்களை மேயவரும் காட்டுப் பன்றி யானை முதலியவற்றை அகற்றுவதற்காக வேட்டையாடுவதை நிகழ்த்தியுள்ளனர். அவ்வாறு வேட்டையாடிய விலங்குகளின் இறைச்சியைக் கூறுபோட்டு வேடர்களைப் போலவே பாதீட்டு உண்ணும் முறை கானக் குறவர்களிடமும் காணப்பட்டுள்ளது.

"பிணர்ச் சுவற் பன்றி தோல்முலைப் பிணவொடு
கணைக் கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்,
கல்லதர் அரும் புழை அல்கி, கானவன்,
வில்லின் தந்த வெண் கோட்டு ஏற்றை,
..............................................
வரை சேர் சிறு நெறி வாராதீமே!" (நற். 336)

என்ற வரிகள் கானக் குறவர்கள் வேட்டையில் ஈடுபட்ட நிகழ்வை எடுத்தியம்புகிறது.

**1.8.2.4.8 யானை வேட்டை, பன்றிகளை வேட்டையாடுதல்**

கானக்குறவர்கள் தன்னுடைய புன்செய் நிலத்தில் ஐவனம், வெண்நெல், தினை முதலிய பயிர்களை வேளாண்மை செய்துள்ளனர். பயிர்கள் முற்றிய காலத்தில் புனத்தின் கண் மேயவரும் முள்ளம்பன்றிகளையும், யானைகளையும் புனத்தைக் காக்க வேண்டி வேட்டையாடியுள்ளனர்.

"வெண் கோடு கொண்டு வியல் அறை வைப்பவும்,
பச்சூன் கெண்டி வள் உகிர் முணக்கவும்," (நற். 114)

"புலியொடு பொருத புண் கூர் யானை
நற் கோடு நயந்த அன்பு இல் கானவர்
விற் சுழிப்பட்ட நாமப் பூசல்" (நற். 65)

என்ற பாடல் அடிகள் தன்னுடைய புனத்தினை மேயவரும் யானைகளையும் புலியால் தாக்கப்பட்டு வலுவிழந்த யானைகளையும் பன்றிகளையும் கானக் குறவர்கள் வேட்டையாடியுள்ள செய்திகளைப் பதிவு செய்துள்ளது. மேலும், கானக் குறவர்கள் தங்களுடைய வேட்டைக்குச் சுருக்கு, வார், பொறி, கல் அடர், வலை போன்ற கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

"சிறு பொறி மாட்டிய பெருங் கல் அடாஅர" (நற். 119)

"ஓங்கு மலை வியன் புனம் படீஇயர், வீங்கு பொறி" (நற். 98)

என்ற அடிகள் மூலம் அறியலாம்.

### 1.8.2.4.9 கானவர் தேனெடுத்தல்

கானவர்களின் முக்கியத் தொழிலாகத் தேன்னெடுத்தல் இருந்துள்ளது. குரங்குகளும் ஏற முடியாத உயரத்தையுடைய உயர்ந்த மலையில் தேனீக்கள் தேனைத் திரட்டிக் கூடுகட்டியிருந்தன. கானவர் அத்தேனை எடுக்க முயன்றுள்ளனர். நிலைப்பேறுண்டாகக் கட்டியமைத்த கண்ணேணி வலியாக ஏறிச்சென்று அத்தேன் கூட்டை அழித்து தேன்னெடுத்துள்ளனர். "கண்ணேணியாவது கணுக்களிலே அடிவைத்து ஏறிச் செல்லும்படி அமைந்துள்ள மூங்கில் ஏணியாகும்."[25] என்று கண்ணேணியின் வடிவம் பற்றி வெ.பெருமாள்சாமி குறிப்பிடுகிறார். இத்தகைய கண்ணேணியைக் கொண்டு உயர்ந்த மலையில் கானவர்கள் தேனெடுத்த நிகழ்வினை,

"கலை கையற்ற காண்பு இன் நெடு வரை,

நிலைபெய்து இட்ட மால்பு நெறி ஆக,

பெரும் பயன் தொகுத்த தேம் கொள் கொள்ளை" (மலைபடு. 315-317)

"மால்புடை நெடு வரைக் கோடுதோறு இழிதரும" (புறம். 105)

என்ற பாடல் அடிகள் எடுத்தோதுகின்றன.

### 1.8.2.4.10 கானக் குறவர்கள் முழுமையாக வேட்டையில் ஈடுபடுதல்.

தினை, ஐவன வேளாண்மை தொழில் நடைபெறாத காலங்களில் கானக்குறவர்கள் வேடர்களைப் போலவே முழுமையான வேட்டைத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர்.

"வன் கைக் கானவன் வெஞ் சிலை வணக்கி,

உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றையொடு,

........................................................

நடு காற் குரம்பைத் தன் குடிவயிற் பெயரும" (நற்.285)

என்ற பாடல் அடிகள் குறவர்கள் முழுமையாக வேட்டைத்தொழிலில் ஈடுபட்டதை எடுத்தியம்புகிறது.

கானக்குறவர்களின் வேட்டைத் தொழில் அவர்கள் செய்த மலை வேளாண்மைக்கு அரணாக மாறியது. தினைப் புனத்தை மேய வந்த காட்டுப் பன்றி, முள்ளம்பன்றி யானை முதலியவற்றை அகற்றுவதற்கு வேட்டைத் தொழில் பயன்பட்டது. தினை, ஐவன வேளாண்மை நடவாத காலங்களில் கானக்குறவர்கள் தங்களது தொன்மையான வேட்டைத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். "வேடர் இனக்குழுவின் பரிணாமங்களில் கானக்குறவர் ஒரு கிளையாகலாம் வேடர்கள் கள்வர் ஆகியோர் ஆநிரை கவர்தல், வேந்து விடு தொழில் செய்தல், காட்டரண்களைக் காத்தல் என்ற மாற்றங்களை அடைந்துள்ளனர். ஆனால் கானக்குறவர்கள் கிழங்கு அகழ்தல், தேன் எடுத்தல், பலா மரங்களை வளர்த்தல் என்ற ரீதியில் மலைச் சாரல்களில் புனங்களை உண்டாக்கி தினை, ஐவனம் ஆகியவற்றைப் பயிரிடும் வாழ்க்கை முறையில் நிலை பெற்றார்கள் வேடர்களைப் போல அவர்கள் போரில் ஈடுபடவில்லை. ஆனால் மலைச் சாரல்களில் இடப் பெயர்ச்சி விவசாய முறையை அழித்து எரிக்கும் உத்தியின் மூலம் மேற்கொண்டார்கள்."[26] என்று வேடர்களிடமிருந்து கானக்குறவர் அடைந்த நாகரிக வளர்ச்சியை ராஜ் கௌதமன் எடுத்துரைக்கிறார்.

### 1.8.2.5 முல்லை நில மக்கள்

புறவு வன்புலம், முல்லை நிலம் என்று அழைக்கப்படும் வானம் பார்த்த பூமி பரப்பில் கால்நடைகளை (ஆடு, மாடு) வளர்த்து அவற்றிலிருந்து பெறப்படும்

பால்படு பொருட்களை உணவாக உட்கொண்டும் பண்டமாற்றம் செய்தும் வாழ்ந்த குடியினர் கோவலர், ஆயர், அண்டர், இடையர் என்ற பெயர்களால் அழைக்கப்படுகின்றனர். பகல் நேரங்களில் கால்நடைகளைக் கோவலர், ஆயர், இடையர் ஆகியோர் மேய்ச்சல் பரப்பில் மேயவிட்டு மாலையில் வீடு திரும்பினார்கள். கால்நடைகளைத் தொழுவிலோ குறும்பிலோ அடைத்தார்கள். மாடுகளின் கழுத்தில் மணி கட்டினார்கள் கால்நடைகள் சிதறாதவாறு மூங்கில் குழல் ஓசையாலும் சீழ்க்கை ஒலியாலும் ஒழுங்குபடுத்தினார்கள். மலைப் பகுதிகளுக்கு அருகிலுள்ள சமவெளி காடுகளும் மேய்ச்சல் நிலங்களும் இவர்களது வாழ்க்கைக்கு உகந்ததாக இருந்தன. ஆநிரைகளும் ஆடுகளும் எருதுகளும் முல்லை நில மக்களின் உடைமையாக இருந்தது.

"ஆநிரைகளை வேடர்கள் கொள்ளையடித்தது, அரசர்கள் ஆநிரைகளைக் கவர்வதற்காகப் போர்கள் நடத்தியது ஆகிய நிகழ்வுகள் குறிப்பிடத்தக்கவை. இவை கால்நடையும் அதன்பால் உற்பத்தியும் அதிலிருந்து மத்து, கலம், கயிறு என்ற கருவிகளால் நிகழ்ந்த பால்படு பொருட்களின் உற்பத்தியும் அவை விற்பனை மதிப்பைப் பெற்றதும் (செலவானிய மதிப்பு) கால்நடைச் செல்வமும் உடைமையும் ஏற்பட்டுவிட்டதை உறுதிப்படுத்துகின்றன."[27] என்று கால்நடை பொருளாதாரத்தின் மையப்பொருளாக விளங்கியநிலையை ராஜ் கெதமன் விளக்குகிறார்.

முல்லை நில மக்கள் கால்நடை சார்ந்த வாழ்க்கையோடு வேளாண்மையிலும் ஈடுபட்டுள்ளனர். உணவு உற்பத்தி செய்தல் என்ற நாகரிக வளர்ச்சியை முல்லை நிலத்தில் வாழ்ந்த இனக்குழுக்கள் அடைந்திருந்தனர். நிரந்தரமான வன், புன் நிலங்களில் உழுது வித்துக்களை அகற்றி அறுத்துப் போரடித்துத் தானிய உற்பத்தி செய்யப்பட்டது. வன்புலம் மட்டுமின்றி செம்மண், கொல்லை நிலங்களிலும் வரகு, அவரை, எள், கொள், பயறு போன்றவற்றைத் தம் வேளாண் பொருட்களாகக் கொண்டிருந்தனர். நீர்ப் பாசன வசதி பெற்ற மருத வயல்களில் கிழார்கள், வேளாளர்கள், அரசர் ஆகியோருக்காக உழைத்த கருங்கை உழவர்களிலிருந்து முல்லை நில உழவர்கள் மாறுபட்டவர்களாக இருந்துள்ளனர்.

### 1.8.2.5.1 இடையர்

ஆடு மேய்த்துப் பராமரிப்பவர்களை இடையர்கள் என்றும், இடை மகன் என்றும் அழைத்தார்கள். அவர்கள் தங்கள் மறியினத்தின் பாலைக் கறந்து வந்து உணவுக்கு மாற்றாக விற்றார்கள். இடையர்கள் வளர்த்த ஆடுகளில் வெள்ளாடு,

துருவையாடு (மறி ஆடு) என்ற பிரிவுகள் காணப்படுகின்றன. பூழியர் என்ற குடியினர் வெள்ளாடுகளை வளர்ப்பதையே தொழிலாகக் கொண்டிருந்தனர்.

"பறியுடைக் கையர் மறியினத்து ஒழிய,

பாலொடு வந்து கூழொடு பெயரும்

ஆடுடை இடைமகன் சென்னிச" (குறுந். 221)

என்ற குறுந்தொகை அடிகள் இடையர்கள் கூழை பண்டமாற்றாகப் பெற்ற நிகழ்வு பதிவுசெய்யப்பட்டுள்ளது.

மழைக் காலத்தில் ஆட்டு இடையன் ஒருவன் பறியை (மூட்டும் ஓலைப்பாய்) பின்பக்கமாக இட்டு உறி, தீக்கடையும் கோல், கலசம், தோல் முதலியவற்றைப் பையில் சுருக்கிக்கட்டித் தண்டு ஊன்றிச் சீழ்க்கையடித்துக் ஆட்டு மந்தையை ஒரு நிலைப்படுத்திய நிகழ்ச்சியை

"வான் இகுபு சொரிந்த வயங்கு பெயல் கடைநாள்

பாணி கொண்ட பல்கால் தெல் உறி

.................................................

நுண் துவலை ஒருதிறம் நனைப்ப

தண்டுகால் வைத்த ஒடுங்குநிலை மடிவிளி

சிறுதலைத் தொழுதி ஏமார்த்து அல்கும" (குறுந். 142)

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம்.

### 1.8.2.5.2 இடையர்களின் தோற்றம்

இடையர்கள் தோலால் ஆன செருப்பினைப் பாதத்தில் அணிந்திருந்தனர். எப்போதும் தனது கையில் தண்டினையும், மரம் வெட்டும் கோடாரியையும் வைத்திருந்தனர். இடையனது பாதம் தோல் செருப்பணிந்ததால் வடுப்பட்டிருந்தது. தண்டு ஊன்றியதாலும் மழுவாளால் (கோடாரி) மரம் வெட்டியதாலும் அவனது கை காப்பேறியிருந்தது. பிடரியில் உறியைச் சுமந்ததால் தழும்பேறியிருந்தது. பசும்பாலைக் கறந்த கையைத் தலை மயிரில் தடவியதால் மயிரில் பால் பட்டிருந்தது. கிளை, கொடிகளில் பூத்த மலர்களைத் தலையில் சூடியிருந்தனர்.

கன்றுகளுடைய ஆநிரையோடு கானகத்தில் தங்கியபோது தீக்கடைக் கோலால் கடைந்து உண்டாக்கிய கொள்ளியால் மூங்கில் குழலில் துளைகள் உண்டாக்கி இசைத்தனர்.

### 1.8.2.5.3 இடையர் குடியிருப்பு

குறிஞ்சி நிலத்து எயினர் ஊர்களைப் போலவே முல்லை நிலத்து ஆயர்களின் ஊர்களும் காவற்காடு மற்றும் விடு நிலம் எனப்பட்ட மேய்ச்சல் நிலங்கள் சூழ அமைந்திருந்தன. குடிசைகள் கழிகளில் வைக்கோலாலே வேயப்பட்டிருந்தன. அவை மழை மேகங்கள் போலக் கறுத்துக் காணப்பட்டன. கதவுகள் கழிகளால் செய்யப்பட்டிருந்தன. சிறு தூற்றையுடைய வாயில்களில் குறுகிய கால்கள் நடப்பட்டு அவற்றில் ஆட்டு மறிகள் நின்று தின்னும் வகையில் தழைகள் கட்டப்பட்டிருந்தன. தங்குமிடமாகிய படுக்கையில் கிடாயினுடைய தோலைப் பாயலாகக் கொண்டு முதியவன் காவலுக்காகப் படுத்திருந்தான். இதனை,

> “.............................................மறிய
>
> குளகு அரை யாத்த குறுங் கால், குரம்பை,
>
> செற்றை வாயில், செறி கழிக் கதவின்,
>
> ....................................................
>
> கொடு முகத் துருவையொடு வெள்ளை சேக்கும்
>
> இடு முள் வேலி எருப் படு வரைப்பின்,“ (பொருந. 147-154)

என்ற அடிகளும் தொழுக்களையுடைய ஊர்களில் குடிசைகளின் முற்றத்தில் வரகு இட்டு நிரப்பிய குதிர்கள் மிகுதியாக இருந்தன. அவை யானைக் கூட்டம் போலக் காணப்பட்டன. குடிசைகளின் முற்றங்களில் அமைக்கப்பட்டிருந்த பந்தரில் வரகு அரைக்கும் திரிசைகள் நிறுத்தப்பட்டிருந்தன. நெடுகக் கட்டிய தொட்டிலின் ஒரு பக்கத்தில் அடுப்பெரித்து ஒரு பக்கத்தில் தொழில் ஒழிந்திராத நாளில் சகடைகளில் உருளைகளையும் கலப்பைகளையும் சார்த்தி உருதுகளையும் கட்டி வைத்திருந்தனர். அதனால் கொட்டிலின் சுவர் தேய்ந்து புகை படிந்து காணப்பட்டது என்பதை,

"..........................முள் உடுத்து

எழு காடு ஓங்கிய தொழுவுடை வரைப்பில்

பிடிக்கணத்து அன்ன குதிருடை முன்றில்,

களிற்றுத் தாள் புரையும் திரி மரப் பந்தர்,

குறுஞ் சாட்டு உருளையொடு கலப்பை சார்த்தி

நெடுஞ் சுவர் பறைந்த புகை சூழ் கொட்டில், (பொருந. 184-189)

என்ற பாடல் அடிகளும் விளக்குகின்றன.

### 1.8.2.5.4 ஆடுகளைக் காவல் காக்கும் இடையனின் செயல்பாடு

காடுகளில் பட்டியிட்டு ஆடுகளைப் பாதுகாத்து வந்தனர். இரவு நேரங்களில் நரி போன்ற கொல்லும் தொழிலையுடைய காட்டு விலங்குகளிடமிருந்து தங்களது ஆடுகளைக் காக்கும் பணியில் இடையர்கள் ஈடுபட்டிருந்தனர்.

"ஆடு தலைத் துருவின் தோடு ஏமார்ப்ப,

கடை கோல் சிறு தீ அடைய மாட்டி,

..................................................

தண்டு கால் ஊன்றிய தனி நிலை இடையன்,

மடி விடு வீளை கடிது சென்று இசைப்ப,

தெறி மறி பார்க்கும் குறு நரி வெரீஇ," (அகம். 274)

என்ற பாடல் அடிகளில் துரவ ஆட்டு (மறி ஆடு) மந்தையைக் காத்த இடையன் தீக்கடைகோலால் தீ மூட்டினான். இரவு நேரங்களில் நெருப்பின் வெளிச்சத்தில் சீழ்க்கை என்னும் ஒலிக் கருவியால் ஒலி எழுப்பிக் கொண்டிருந்தான். அவனது சீழ்க்கை ஒலி கேட்டு மறி பார்த்து ஒளிந்திருக்கும் குறுநரிகள் வெருண்டு ஓடிய நிகழ்வு காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

### 1.8.2.5.5 இடையர்களின் உணவு முறை

குறிஞ்சி நிலக் குறவர் குடியினரின் உணவிலிருந்து முல்லை நிலமக்களின் உணவு முறைகள் மாறியுள்ளன. ஆடு, மாடு, அவற்றின் பால், பால்படு பொருட்கள், வரகரிசி, வெண்ணெய், நெய், அவரை பண்டமாற்றாகப் பெற்ற நெல் போன்றவை முக்கிய உணவுப் பொருட்களாக இருந்தன. இடையர்களின் உணவில் இறைச்சி அரிதாகக் காணப்படுகிறது. இடையர் பெண்களில் சிலர் வரகு கொல்லைகளில் ஆயர்கள் மாடுகள் மேய்ச்சலின் போது மாடுகளின் காலில்பட்டுச் சிதறிய வரகு தினைகளைச் சேகரித்து அதனை உணவாக உட்கொண்டுள்ளனர்.

"கவைக் கதிர் வரகின் கால் தொகு பொங்கழி,

கவட்டு அடிப் பொருத பல் சினை உதிர்வை

அகன் கண் பாறைச் செவ்வயின் தெறீஇ,

..............................................

தொடி மாண் உலக்கை ஊழின் போக்கி,

உரல்முகம் காட்டிய சுரை நிறை கொள்ளை,

ஆங்கண் இருஞ் சுனை நீரொடு முகவா,

களி படு குழிசிக் கல் அடுப்பு ஏற்றி," (அகம். 393)

என்ற பாடல் வரிகளில் புல்லி நாட்டு இடையர்கள் வரகந்தாள்களில் மாடுகளின் குளம்புகளில் பட்டு உதிர்ந்த வரகு தானியத்தைச் சேர்த்து அகன்ற பாறையில் பரப்பினார்கள், சேகரித்த வரகினை இடையர் பெண்கள் திரிகையில் சொலித்து, சுளகால் புடைத்துக் கோது நீக்கி உரலில் இட்டு மழுக்கினார்கள். பின்னர் சுனை நீரெடுத்துப்பானையில் ஊற்றிக் கல் அடுப்பில் ஏற்றி வரகுச்சோறு சமைத்து ஆவின் பாலோடு பகுத்துண்டார்கள் என்ற செய்தி இடம்பெற்றுள்ளது.

### 1.8.2.5.6 ஆயர்கள் அல்லது கோவலர்கள்

முல்லை நிலப் பகுதிகளில் ஆநிரைகளை மேய்ப்பவர்கள் ஆயர்கள் அல்லது கோவலர்கள் என்று அழைக்கப்பட்டனர். "பூழியர் குடி ஆடுகளை வளர்த்தது போலக் கொங்கு நாட்டுக் கொங்கர் குடிப் பசுக்களை வளர்த்தது"[28] என்று ராஜ் கௌதமன் குறிப்பிடுகிறார். எனவே, குறிப்பிட்ட நிலப் பகுதிகளில்

வாழ்ந்த மக்கள் குறிப்பிட்ட விலங்குகளை(ஆடு அல்லது மாடுகள்) மட்டும் வளர்த்துள்ளனர். முல்லை நில ஆயர்களின் ஆநிரை வளர்ப்பு என்பது விவசாயத்தோடு துணைத் தொழிலாகக் கொள்ளாமல் அவர்கள் வாழ்க்கையின் முழுமுதற் தொழிலாகவே இருந்தது.

### 1.8.2.5.7 கோவலரின் இருப்பிடம்

கோவலர்கள் குடிசைகள் புற்களால் வேயப்பட்டிருந்தன. அவற்றின் முன் படலைக்கொடி படர்ந்த பந்தல் அமைக்கப்பட்டிருந்தது. குடிசைக்கு வாசலும், கதவும் இருந்தன. கதவு கழிகளால் செய்யப்பட்டிருந்தது. குடிசைக்குள் அமைந்திருந்த படுக்கைகள் வரகுக் கற்றையால் பின்னப்பட்டிருந்தது. அதன் மேற்புறத்தில் கிடாயின் தோல் விரிக்கப்பட்டிருந்தது. முற்றத்தில் துருவை (செம்மறி) ஆடும் வெள்ளாடும் அடைக்கப்பட்டிருந்தன. ஆட்டு மறிகள் நின்று தின்பதற்காகத் தழைகள் கட்டப்பட்ட குறுங்கழிகள் நடப்பட்டிருந்தன. குடிசையைச் சுற்றிலும் எரு இடப்பட்டிருந்தது.

“தீம் தயிர் கடைந்த திரள் கால் மத்தம்,

கன்று வாய் சுவைப்ப, முன்றில் தூங்கும்

படலைப் பந்தர்ப் புல் வேய் குரம்பை,“ (அகம். 87)

என்ற அடிகள் கோவலர்களின் இருப்பிடம் பற்றிக் கூறுகின்றன.

### 1.8.2.5.8 ஆயமகளிர் பால் படுபொருட்களை விற்றல்

ஆயர் மகளிர்கள் பாலில் உறை ஊற்றி தயிராக்கி அதிகாலையில் வீடுகளில் மத்துக்களில் கயிறு மாட்டிக் கடைந்து வெண்ணெய், நெய் எடுத்தார்கள். பால், மோர், நெய் ஆகியவற்றைப் பண்டமாற்றாக விற்று நெல், எருமை, பசு முதலிய பொருட்களைப் பெற்றார்கள். பால்முடை நாற்றம் தீருவதற்காகத் தயிர் கடையும் பானையில் விளாம்பழத்தைப் போட்டு மூடிவைத்தை,

“விளம்பழம் கமழும் கமஞ்சூற்குழிசிப்

பாசம் தின்ற தேய் கால் மத்தம்

நெய் தெரி இயக்கம் வெளில்முதல் முழங்கும்

வைகு புலர் விடியல் மெய் கரந்து, தன் கால" (நற்.12)

என்ற நற்றிணை அடிகள் வாயிலாக அறியலாம்.

### 1.8.2.5.9 ஆயர்களுக்கு உண்டாகும் பிரச்சினைகள்

காடு, மதலைப் பகுதிகளில் ஆநிரைகளை மேய்த்த போது நிரைகளின் தாகத்தைத் தீர்ப்பது ஆயர்களின் பெரும் பிரச்சினையாக இருந்தது. வறண்ட மலைப் பிரதேசங்களில் மாடுகளுக்குத் தண்ணீர் கிடைப்பது அரிதாக இருந்தது. ஆக்களின் தாகத்தைப் போக்குவதற்காக ஆயர்கள் கணிச்சி (கோடாலி) என்ற கருவியால் கூவல் (குழி) தோண்டி அதில் ஊறிய நீரை மாடுகள் குடிப்பதற்காகப் பத்தல் ஒன்றை அமைத்து அதில் ஊற்றி வைத்தனர். இது ‘ஆன்நீரப் பந்தல்’ என்றழைக்கப்பட்டது.

"வெயில் வெய்துற்ற பரல் அவல் ஒதுக்கில்,

கணிச்சியில் குழித்த கூவல் நண்ணி,

ஆன் வழிப் படுநர் தோண்டிய பத்தல" (நற். 240)

என்ற அடிகள் ஆயர்கள் பத்தல் அமைத்த நிகழ்வைக் கூறுகிறது.

மலைக் காடுகளில் புலி, நரி, செந்நாய் போன்ற விலங்குகளாலும் வேடர்களாலும் இரவு நேரங்களில் ஆநிரைகளுக்குத் தொல்லைகள் ஏற்பட்டன. எனவே, கோவலர்கள் இரவில் பெரிய மரக் கட்டைகளை எரித்து கொடிய விலங்களும் வேடர்களும் நெருங்காத வண்ணம் ஆநிரைகள் அடைக்கப்பட்டிருக்கும் பட்டிகளுக்குக் காவலாக நின்றனர்.

### 1.8.2.5.10 கொல்லை உழவர்கள்

முல்லைத் திணைகளில் வரகு போன்ற தானியங்களை வேளாண்மை செய்தவர்கள் கொல்லை உழவர்கள் என்றழைக்கப்பட்டனர். புதுப்புனல்களிலும், பழங்கொல்லைகளிலும் மழை பெய்த காலங்களில் கொல்லை உழவர்களின் விவசாயம் நடை பெற்றது. கொல்லை உழவர்கள் வேளாண்மை நிலங்களை ‘துடைவை’ என்று அழைத்தனர். கொல்லை உழவர்கள் மழைக் காலங்களில் பெரும் காளை நுகத்தில் பூட்டி கலப்பையின் கொழு மறையுமாறு அழுத்தி மூழ்க ஊன்றித் தங்களுக்கான புதிய கொல்லைகளிலும், ஏற்கனவே திருத்தப்பட்ட கொல்லைகளிலும் உழுதார்கள். அவ்வாறு உழுத துடைவையில் கூடையில் விதை

வரகினைச் சுமந்து சென்று விதைத்தார்கள். அது மழைக்குக் கலிந்து வளர்ந்து கதிர்கள் விட்டது. கரை ஓரங்களில் அவரைகளை விதைத்தனர். வரகஞ்சோறும் அவித்த அவரைப் பயறும் அவர்களுடைய உணவாக இருந்தது.

"முதைப் புனம் கொன்ற ஆர்கலி உழவர்

விதைக் குறு வட்டி போதொடு பொதுளப" (குறுந்.155)

"ஏர் இடம் படுத்த இரு மறுப் பூழிப்

புறம் மாறு பெற்ற பூவல் ஈரத்து,

ஊன் கிழித்தன்ன செஞ் சுவல் நெடுஞ் சால்,

வித்திய மருங்கின் விதை பல நாறி," (அகம்.194)

என்ற பாடல் அடிகளில் கொல்லை உழவர்கள் நிலத்தை உழுத நிகழ்வு பதிவு செய்யப்பட்டுள்ளது.

குறிப்பிட்ட பருவங்களில் மட்டுமே வரகு, எள், கொள், அவரை விவசாயம் நடை பெற்றதால் எஞ்சிய காலங்களில் வரகு கொல்லைகள் தரிசாகக் களைகள் முளைத்துக் கிடந்தன. அவற்றை ஒவ்வொரு முறையும் அழித்துப் புதுக்கி வேளாண்மைக்கு உகந்த நிலங்களாக மாற்ற வேண்டியிருந்தது.

### 1.8.2.511 முல்லை உழவர்களின் இருப்பிடம்

முல்லை நிலத்தில் வாழ்ந்த உழவர்கள் முள் காடு சூழ்ந்த வேலிகளை உடைய ஊர்களில் வாழ்ந்தார்கள் அவர்களின் வீடுகளில் முற்றங்கள் காணப்பட்டன. முற்றத்தில் வரகு முதலிய தானியங்களைச் சேமிக்கும் குதிர்கள் நின்றன. யானையின் பாதம் போல வட்டமான தரிகை வைத்துப் பந்தல் போடப்பட்டிருந்தது. சிறு வண்டியின் உருளையும் கலப்பையும் சுவர்களில் சாத்தப்பட்டிருந்தது. குடிசைகள் வரகு வைக்கோல்களால் வேயப்பட்டிருந்தது.

### 1.8.2.6 பரதவர்

நுளையர், வலைஞர் என்ற சொற்களால் சுட்டப்பட்ட பரதவர்கள் கடற்கரைப் பகுதிகளில் கடலில் தொழில் புரிந்து வாழ்ந்தார்கள். பரதவர், திமிலர் என வெவ்வேறு பெயர்களால் இவர்கள் அழைக்கப்பட்டனர். 'பரதவர்' என்றால்

‘செட்டி வணிகர்’ என்று உ.வே.சா. குறிப்பிடுகிறார். ‘திமிலர்’ என்பதும் பரதவர்களையே குறிக்கிறது.

‘தமிழ்’ என்றழைக்கப்பட்ட படகுகளில் இரவில் சென்று வலை வீசி மீன் பிடித்து விடியலில் கரை சேர்ந்தார்கள். இரவில் கடலில் உழந்து மீன் பிடித்துக் காலையில் கரையேறியதும் பரதவர்கள் பனந்தீம் பிழி தேறல், கமழ் தேறல், நனைமுதிர் தேறல் முதலான மதுபானங்களைத் தங்கள் கிளையோடு மாந்தி மகிழ்ந்தனர். பரதவர் பிடித்த மீன்களைக் கூறு கட்டி பரதவப் பெண்கள் கூடையில் சுமந்து சென்று தெருக்களில் விற்றார்கள். மீன் பிடித்தலை மீன் வேட்டத்து என்று வேட்டைத்தொழிலாகவே சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

“நடு நாள் வேட்டம் போகி, வைகறைக்

கடல் மீன் தந்து, கானற் குவைஇ,“ (நற். 388)

என்ற நற்றிணை பாடல் அடி பரதவரின் மீன் பிடித்தல் தொழிலை மீன் வேட்டை என்று குறிப்பிடுகிறது.

மீன்களில் சுறா, கோட்டு மீன், இறா, அயிலை போன்ற பல வகைகளைப் பரதவர்கள் பிடித்ததாக இலக்கியப் பதிவுகள் காட்டுகின்றன. சுறா போன்ற பெரிய மீன்களை உளி எறிந்து குத்திப் பிடித்துள்ளனர். நீண்ட மூங்கில் கோல் நுனியில் கூர்மையான உளியைப் பொருத்தி அதனைக் கொண்டு பெரும் மீன்கள் மீது குறிபார்த்து விசையாக எறிந்து குத்திப் பிடித்தார்கள். சில வேளைகளில் மூங்கிலுக்குப் பதில் உளியைக் கயிற்றில் கட்டி எறிந்து பெரிய மீன்களைப் பிடித்தார்கள். இதனை,

“கொல்வினைப் பொலிந்த கூர் வாய் எறிஉளி

முகம் பட மடுத்த முளிவெதிர் நோன் காழ்

தாங்கு அரு நீர்ச் சுரத்து எறிந்து, வாங்கு விசைக்

கொடுந் திமிற் பரதவர் கோட்டு மீன் எறிய,“ (குறுந். 304)

என்ற பாடல் வரிகள் வாயிலாக அறியலாம்.

### 1.8.2.6.1 பரதவர் குடியிருப்புகள்

பரதவர் குடியிருப்புகள் அமைந்த பகுதிகள் பாக்கம், சிறுகுடி என்றழைக்கப்பட்டன. தாழை வேலியையும் கழி சூழ்ந்த தோட்டத்தையும் தங்களது இருப்பிடத்தைச் சுற்றி வேலியாக அமைத்திருந்தனர். பரதவர் குடிசைகள் முண்டகச் சருகுகளால் வேயப்பட்டிருந்தன. பரதவர் குடிசையின் முற்பகுதி குறியிறை (தாழ்வாரம்) என்றழைக்கப்பட்டது.

"கண்டல் வேலிக் கழி சூழ் படப்பை

முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்

கொழு மீன் கொள்பவர் பாக்கம் கல்லென," (நற். 207)

என்ற பாடல் வரிகள் பரதவரின் குடிசை அமைப்பைப் பற்றிக் கூறுகின்றன.

பரதவர் ஊருக்கு வேலியாகத் தில்லை மரங்கள் இருந்தன கானலிலிருந்த பனை ஓலைகளைக் கொண்டு வீட்டைச் சுற்றி வேலி கட்டி மணற்காற்றுக்குப் பாதுகாப்புச் செய்தார்கள். சில ஊர்களைச் சுற்றிப் பனை ஓலையோடு முள் மிடைந்த வேலியை எழுப்பியிருந்தார்கள். பரதவர் ஊர்த் தெருக்களில் மணல் மலிந்திருந்தது. மீன் புலால் நாற்றமும் மிகுந்திருந்தது. சில குடிசைகள் புற்களைக் கொண்டும் மேயப்பட்டிருந்தது என்பதை,

"ஆடு அரை ஒழித்த நீடு இரும் பெண்ணை

வீழ் காவோலைச் சூழ் சிறை யாத்த

கானல் நண்ணிய வார் மணல் முன்றில்," (நற். 354)

என்ற பாடல் அடிகளில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

பேரூரில் பரதவர்கள் தூங்கும் இராக் காலத்தில் கடலில் சுறாமீன் நீரை உமிழும் ஓசை கேட்டும் தெருவில் பெய்யும் மழைநீரைக் காற்றானது வீட்டுக் கதவுப் புரைகளில் தூவும் குளிர் பொறுக்காத நாய்கள் நடுங்கும் அந்நேரத்தில் காப்புடை வாயில் போற்று என்று யாமக் காவலளர்கள் மணியடித்துக் கொண்டே எச்சரித்தார்கள் என்பதை,

“பேர் ஊர் துஞ்சும் யாரும் இல்லை

திருந்து வாய்ச் சுறவம் நீர் கான்று, ஒய்யெனப்

பெருந் தெரு உதிர்தரு பெயலுறு தண் வளி

போர் அமை கதவப் புரை தொறும் தூவ,“ (நற். 132)

என்ற அடிகள் வாயிலாக அறியலாம்.

### 1.8.2.6.2 மீன் எண்ணெய்யில் விளக்கெரித்தல்

பரதவர்கள் நெடுங்கடலில் பிடித்து வந்த மீன்களை மணலில் குவித்து விட்டு மீன் நெய்யைக் கிழிசலில் வார்த்துப் பொருத்திய சிறு தீ விளக்கொளியில் பரதவர்கள் படுத்துறங்கினார்கள். இரவில் மீன் பிடிக்கத் திமிலில் சென்ற போது மீன் நிணம் தொகுத்த ஓன் நெய்யில் விளக்கெரித்தார்கள். இதனை,

“நெடுங் கடல் அலைத்த கொடுந் திமிற் பரதவர்

கொழு மீன் கொள்ளை அழி மணல் குவைஇ,

மீன் நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய

சிறு தீ விளக்கில் துஞ்சும்,“ (நற். 175)

என்ற பாடல் அடிகளின் மூலம் அறியலாம்.

### 1.8.2.6.3 கடல் வாணிபம் நடைபெறுதல்

நெய்தல் திணைகளில் மருங்கூர்ப்பட்டினம், கொற்கை, தொண்டி, முசிறி, மாரந்தை, கழுமலம் போன்ற பெரும் கடற்கரை துறைமுகங்கப் பட்டினங்கள் இருந்தன. இப்பட்டினங்களில் கடல் வாணிபம் நடைபெற்றது. வினைப்பாடுகள் அமைந்த பல்வேறு நாட்டு நாவாய்கள் துறைமுகங்களில் வந்து சரக்குகளை ஏற்றி இறக்கின. பெரும் அங்காடிகள் இருந்தன. இதனை,

“வேறு பல் நாட்டுக் கால் தர வந்த,

பல வினை நாவாய் தோன்றும் பெருந் துறை” (நற். 295)

நற்றிணை பாடல் வரிகளில் காணலாம்.

### 1.8.2.6.4 உள்நாட்டு வாணிபம்

பரதவ நிலங்களில் உள்நாட்டு வாணிபமும் நடை பெற்றது. பரதவர்கள் மீனோடு முத்துக்கள், கிழிசல்கள், சிப்பிகளை எடுத்து வந்து விற்றனர். பரதவர்கள் கழிகளில் பாத்திகட்டி உப்பு விளைவித்தலைச் செய்தனர். பரதவப் பெண்கள் தங்களது உப்புவிளை கழனிகளில் விளைந்த உப்பை எடுத்துச் சென்று தெருக்களில் நெல்லுக்கு விலையாகக் கொடுத்துள்ளனர். இவ்வாறு உப்பு விளைவித்த பரதவர்களை 'உவர்விளை உப்பின் உழாஅ உழவர்' என்று இலக்கியங்கள் சுட்டுகின்றன. மேலும், பரதவர்கள் உற்பத்தி செய்த உப்பினை உமணர்கள் வண்டிமாடுகள் கொண்டு சென்று வண்டிகள் முழுவதும் உப்பினை விலைக்கு வாங்கி அவற்றை வீதிகளில் விற்றுள்ளனர். என்பது,

"உவர் விளை உப்பின் உழாஅ உழவர்

ஒழுகை உமணர் வரு பதம் நோக்கி," (நற். 331)

"நீல் நிறப் பெருங் கடல் புக்கனன் யாயும்

உப்பை மாறி வெண்ணெல் தரீஇய

உப்பு விளை கழனிச் சென்றனள்" (குறுந். 269)

மேற்கண்ட பாடல் அடிகள் வாயிலாக அறியப்படுகிறது.

### 1.8.2.6.5 உணவினைப் பதப்படுத்துதல்

பரதவ மகளிர், குறமகளிர், எயினப் பெண்கள் ஆகியோரைப் போல உணவைக் காயவைத்தல், பாதுகாத்தல் ஆகிய தொழில்களில் ஈடுபட்டனர். பரதவ பெண்கள் தெருக்களில் மீன் விற்றனர். விற்றது போக மீதமுள்ள மீன்களையும், இறால்களைப் பரதவப் பெண்கள் காயவைத்துப் பதப்படுத்தினார்கள். அப்போது மீன்களைக் கவர வரும் பறவைகளை விரட்டினார்கள். மீனைக் காயவைத்துப் பறவைகளை விரட்டிய பரதவப்பெண்கள் உப்பு குவியல் மீது ஏறி நின்று மாலையில் மீன் பிடிக்கக் கடலுக்குள் சென்ற திமில்களைப் பார்த்து தங்கள் உறவுகளின் வருகைக்காகக் காத்திருந்தனர்.

#### 1.8.2.6.6 பரதவரின் உணவு

பரதவர்களின் உணவு முறைகள் பெரும்பான்மை கடல் சார் உணவு வகையாகவே இருந்துள்ளது. கடலில் சிவந்த இறாலை முகந்து கரை சேர்ந்த தந்தைக்கு உப்பை விற்றுப் பெற்ற நெற்சோறும் அயிலை மீன் கலந்த புளிக் குளம்பும் மீன் துண்டும் பரதவப் பெண் எடுத்துச் சென்றாள். இதனை,

"நெடுந் திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு,

உப்பு நொடை நெல்லின் மூரல் வெண் சோறு

அயிலை துழந்த அம் புளிச் சொரிந்து,

கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும" (அகம். 60)

என்ற வரிகள் பறை சாற்றுகின்றன.

### 1.8.2.7 உமணர் குடி

சங்க காலத்தில் இடம்விட்டு இடம் பெயர்ந்து ஊர் ஊராகத் திரிந்து உப்பு வாணிபம் செய்த ஒரே நாடோடி குடியாக உமணர்குடி காணப்படுகிறது. இக்குடியினரின் முழுநேரத் தொழிலாக உப்பு வாணிபம் இருந்துள்ளது. உப்பங்கழிகளில் பரதவர் உண்டாக்கிய உப்பை மொத்தமாகத் தங்கள் மாட்டுவண்டிகளில் ஏற்றி ஊர்களில் நெல்லுக்கு மாற்றாக விற்று வாழ்ந்துள்ளனர்.

"பெருங் கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்

இருங் கழிச் செறுவின் உழாஅது செய்த

வெண் கல் உப்பின் கொள்ளை சாற்றி," (அகம். 140)

என்ற பாடலடிகள் உமணப் பெண்கள் பரதவர்களிடமிருந்து உப்பினை வாங்கிச் சென்றதைப் பதிவு செய்துள்ளது.

#### 1.8.2.7.1 உமணரின் மாட்டுவண்டியின் அமைப்பு

உப்பினை எடுத்துச் செல்ல மாட்டுவண்டிகள் அவர்களிடம் இருந்தது. அந்த மாட்டு வண்டிகள் ஒன்றன்பின் ஒன்றாக ஒரே வரிசையில் சென்றன. இது 'ஒழுகை' என்று இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. உப்பு வணிகர்களின்

வண்டிகள் ஆரம், உருளி, பார், ஆரை (பாய்), வேய்ந்த பாய் ஆகிய உறுப்புகளைக் கொண்டிருந்தன.

உமணர் ஒழுகையோடு உமணர் மனைவியரும் குழந்தைகளும் சென்றனர். உமணப் பெண்டிரும் குழந்தைகளும் உப்பினை ஏற்றிய மாட்டு வண்டிகளில் அமர்ந்து பயணித்தனர். உமண ஆண்கள் நடந்த படியே வண்டிகளைச் செலுத்திச் சென்றார்கள். இதனை.

“உப்பு ஒய் உமணர் அருந் துறைபோக்கும்

ஒழுகை நோன் பகடு ஒப்பக் குழீஇ,“ (அகம். 30)

என்ற அகநானூற்று அடிகள் எடுத்துக்காட்டுகின்றன.

மாட்டு வண்டியின் மேல் பரண் மீது அமைந்த குடிசைகளைப் போலவே கோழி அடைக்கும் கூடுகள் வண்டிகளிலிருந்தன. வண்டி ஓரங்களில் அமைந்த துளைகளில் மர உரல்களைக் கட்டித் தொங்க விட்டிருந்தார்கள். வாரால் நன்கு இறுக்கிக் கட்டப்பட்ட முழுவைப் போலக் காடி (ஊறுகாய்) வைத்த மிடர் அசையாதவாறு கயிற்றால் வரிந்துகட்டப்பட்டிருந்தது. வண்டியில் குழந்தைகளை வைத்துக் கொண்டிருந்த பெண்களே வண்டிமாடுகளைச் செலுத்தினர். வண்டிகளுக்குப் பக்கமாக வேம்பின் இலைகளைக் கோர்த்து மிடைந்த படலை (தழை) கண்ணிய கூடிய பருத்துத் திரண்ட தோள்களைக் கொண்ட முறுக்குண்ட உடலை உடைய வலிமையான ஆடவர்கள் காவலாகச் சென்றார்கள். சிறுதுளைகளையுடைய நுகத்தடியில் பெருங்காளை மாடுகளைக் கயிற்றால் ஒரு வழிப்பட நிரைத்துக் கட்டி மாடுகள் திருகாமலும் அச்சு முறியாமலும் பார்த்துக் கொண்டார்கள். கூடவே மாற்றுக் காளைகளையும் ஓட்டிச் சென்றார்கள். இதனை,

“நெய்தல் உருவின் ஐது இலங்கு அகல் இலை,

தொடை அமை பீலிப் பொலிந்த கடிகை,

மடை அமை திண் சுரை, மாக் காழ் வேலொடு

தணி அமர் அழுவம் தம்மொடு துணைப்ப,“ (அகம். 119)

என்ற வரிகள் மூலம் அறியலாம்.

### 1.8.2.7.2 உமணரின் நாடோடி வாழ்க்கை

உமணரின் வணிகம் உமண் சாத்து எனப்பட்டது. காட்டு வழிப்பாதைகளில் உமண் சாத்து கடந்து சென்றபோது ஆங்காங்கே பெருங்கூட்டமாகத் தங்கி கற்களை அடுப்பாக அமைத்துச் சமைத்து உண்டார்கள். ஓரிடத்தில் உமணர்கள் நிலைத்து வாழாததால் அவர்களுடைய வாழ்க்கை நிலையா வாழ்க்கை என்று புலவர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

"மலை உய்த்துப் பகரும், நிலையா வாழ்க்கை,

கணம் கொள் உமணர் உயங்குவயின் ஒழித்த" (நற். 138)

என்ற பாடல் அடிகள் உமணர்கள் நிலையா வாழ்க்கை வாழ்ந்ததை எடுத்துக்காட்டுகின்றன.

### 1.8.2.7.3 உமணப் பெண்களும் குழந்தைகளும்

உமணர்கள் தங்கள் மார்பில் நுணாமரக் கட்டையில் கடைந்தெடுத்த சிறுதுண்டுகளைக் கோர்த்த மாலையையும் தொடலை மாலையையும் அணிந்தார்கள் ஒரு செவியோடு மற்ற செவியை இணைத்து நெற்றி வழியாகச் சூட்டிய கண்ணி அணிந்தார்கள்.

உமண் குழந்தைகளோடு விளையாடுவதற்கு மந்திக்குட்டிகளை வைத்திருந்தனர். பழக்கப்பட்ட அக்குட்டிகள் கிலுகிலி வைத்திருந்தன. கிலுகிலி கிளிசல் ஓடுகளால் செய்யப்பட்டு முத்துக்கள் வைத்து மூடப்பட்டிருக்கும் அக்கிலுகிலியை ஆட்டி ஒலி எழுப்பிய மந்திகள் உமணப் புதல்வரோடு விளையாடின.

### 1.8.2.7.4 உப்பு விற்பனையில் உமணப் பெண்கள்

பரதவர்களிடமிருந்து மாட்டு வண்டிகளில் வாங்கி வரப்பட்ட உப்புகளை மருத நிலம் மற்றும் மற்ற நிலம் சார்ந்த தெருக்களில் உமணப் பெண்களே உப்பினை விற்று வந்துள்ளனர். வீதிதோறும் உமணப் பெண்கள் தங்கள் கைகளில் வளையல்கள் தெளிர்ப்ப வீசி தெருக்களில் நடந்து சென்று 'நெல்லின் நேரே வெண்கல் உப்பு' என விலை கூறி விற்றுள்ளனர்.

“கதழ் கோல் உமணர் காதல் மடமகள்

சில் கோல் எல் வளை தெளிர்ப்ப வீசி,

‘நெல்லின் நேரே வெண் கல் உப்பு’ எனச்

சேரி விலைமாறு கூறலின், மனைய” (அகம். 140)

என்ற பாடல் அடிகள் உமணப் பெண்கள் தெருக்களில் உப்பு விற்ற நிகழ்வைப் படம் பிடித்துக்காட்டுகிறது.

**முடிவுரை**

மனித இனம் தோற்றம் பற்றி மதக்கோட்பாடுகள் இறைவனால் படைக்கப்பட்டவன் என்றும் அறிவியல் விலங்கு பிறந்தவன் என்றும் குறிப்பிடுகின்றன. தொடக்க கால மனிதனிடத்தில் விலங்கியல் குணங்கள் நிறைந்துள்ளதால் மனிதன் காட்டுமிராண்டித்தனமாகவும் பின்னர் குழுவாக இணைந்து வாழும் நிலையிலும் இருந்துள்ளான்.

குழுவாக இணைந்து வாழும் மனித இனத்தினைக் காட்டுமிராண்டி நிலை, அநாகரிக நிலை, நாகரிக நிலை என மூவகையாகப் பகுக்கலாம். கற்களின் பயன்பாடுகளைக் கொண்டு இயற்கைப் பொருட்களை உண்ணும் நிலையைக் காட்டுமிராண்டி நிலையாகவும், விலங்குகளைப் பழக்கத்தில் கொண்டு வந்து உணவுப் பொருட்களைப் பெருக்கும் நிலையை அநாகரிக நிலையாகவும், இயற்கைப் பொருட்களை விளைவித்தலும் கலை உணர்வை வளர்த்தலுமாகிய நிலையை நாகரிக நிலையாகவும் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

தொடக்க காலத்தில் மனிதன் தன் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்வதற்காகவும் இயற்கை சீற்றங்களிலிருந்து தற்காத்துக் கொள்ளவும் குழுவாக இணைந்து செயல்படத் தொடங்கினான். குழுவாக இணைந்து வாழ்ந்த ஆதிமனிதர்கள் தங்கள் குழுக்களுக்குப் பெயரிடும் முறையைக் கொண்டுள்ளனர். அப்பெயர்கள் அவர்கள் வாழும் நிலத்தைச் சார்ந்த விலங்குகள், பறவைகள், மரஞ் செடிக் கொடிகள் ஆகியவற்றைப் பொறுத்து அமைந்துள்ளது. குழுக்களின் தலைமைப் பொறுப்பு முதலில் பெண்களுக்கும் பின்னர் ஆண்களுக்குமானதாக இருந்துள்ளது.

தமிழ்ச் சூழலில் இனக்குழுச் சமூகத்தைத் திணை நிலைச் சமூகமாகச் சங்க இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன. திணை நிலைச் சமூக முறை ஐவகை நிலங்களாகப் பிரிக்கப்பட்டு அவற்றின் வாழ்வியல் கூறுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. சீறூர் மன்னர்களும் முதுகுடி மன்னர்களும் வேளிர்களும் இனக்குழுத் தலைவர்களாக இருந்துள்ளனர்.

தமிழக இனக்குழு வாழ்வானது வேடர் சமூகமாக சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதனை வேடர் சமூக வாழிவிடம், சடங்கு முறைகள், ஆநிரை கவர்தல், நடுகல் வழிபாடு ஆகியவற்றின் மூலம் அறியலாம். ஐந்திணை வாழ்வில் வேடர்கள், இடையர்கள், பரதவர்கள், உமணர்கள் வாயிலாக இனக் குழு வாழ்வு முறை சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

குறிஞ்சி நில மக்களான வேடர் சமூக வாழ்வு எயினர், ஆறலைக்கள்வர், குறவர்கள் ஆகியவரின் வாழ்வியல் நிகழ்வுகளும் முல்லை நில மக்களான இடையர்கள் நெய்தல் நில மக்களான பரதவர்கள், உணமர்கள் ஆகிய மக்களின் வாழ்வியல் இனக்குழு மக்களின் கடைநிலை வாழ்வியலோடு பொருந்திச் செல்கின்றன.

# சான்றெண் விளக்கம்

1. பைபிள் பழைய ஏற்பாடு ப. 7
2. நம்பூதிரிபாத் - இந்திய வரலாறு ப. 12
3. ராகுல் சாகிருதியாயன் - வால்கா முதல் கங்கை வரை ப. 19
4. மேலது. ப. 24
5. ஏங்கல்ஸ் - குடும்பம் அரசு சொத்து ஆகியவற்றின் தோற்றம் பக். 30-31
6. ராஜ்கெதமன் - பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ் சமூக உருவாக்கமும் ப. 28
7. ஏங்கல்ஸ் - குடும்பம் அரசு சொத்து ஆகியவற்றின் தோற்றம் பக். 30-31
8. மேலது. ப. 31
9. மேலது. ப. 35
10. மேலது. ப. 38
11. மேலது. ப. 42
12. மேலது. ப. 45
13. மேலது. ப. 107
14. மேலது. ப. 107
15. கா.சுப்பிரமணியன் - சங்ககாலச் சமுதாயம் ப. 47
16. ராஜ்கெதமன் - பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ் சமூக உருவாக்கமும் ப. 87
17. கா.சிவதம்பி - சங்ககால திணைச் சமுதாயம் ப. 21
18. மேலது. ப. 21
19. பெ. மாதையன் - சங்க காலத்தில் அரசு உருவாக்கம் ப. 03
20. ராஜ்கெதமன் - சங்க இலக்கியத்தில் பாட்டு மரபும் எழுத்து மரபும் ப. 89
21. கா.சுப்பிரமணியன் - சங்ககாலச் சமுதாயம் ப. 315
22. ராஜ்கெதமன் - பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ் சமூக உருவாக்கமும் ப. 89
23. வெ.பெருமாள்சாமி – சங்க காலத் தமிழகத்தின் சமூக நிலை ப. 33
24. ராஜ்கெதமன் - பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ் சமூக உருவாக்கமும் ப. 93
25. மேலது. ப. 64

26. ராஜ்கௌதமன் - பாட்டும் தொகையும் தொல்காப்பியமும்

தமிழ் சமூக உருவாக்கமும் ப. 98

27. மேலது. ப. 82

28. மேலது. ப. 86

# இயல் இரண்டு

# சங்ககாலப் பாணர் மரபு

இலக்கியம் என்பது சமூகத்தின் விளைச்சல் ஆகும். இலக்கியம் அந்தந்தக் கால சமூகத்தையும் அதன் பண்பாட்டையும் உள்ளீடாகக் கொண்டுள்ளது. சங்க இலக்கியத்தின் வழி, பண்டைத் தமிழ்ச் சமூகத்தின் பண்பாட்டு மரபினை ஆராயும் போது அவ்விலக்கியத்தின் சிறப்பையும் பயனையும் மேலும் உணர முடியும். சங்க இலக்கியத்தைத் ‘திணை இலக்கியம்’ என்ற முறையில் அணுகுவது அதன் தனித்துவத்தை வெளிப்படுத்துகிறது. திணை இலக்கியங்கள் ஒரே நாளில் ஒருவரால் முகிழ்ந்ததன்று. வாய்மொழி மரபினரால் தோற்றம் பெற்று புலவர் மரபால் போற்றிப் பாதுகாக்கப்பட்டது. திணை இலக்கியங்களை வாய்மொழி மரபாக எடுத்துச் சென்று ஐந்திணை நிலப்பரப்பையும் பாடித் திரிந்தவர்கள் பாணர்கள். தமிழகத்தில் தமிழ்மொழியோடும் தமிழ் நாகரிகத்தோடும் தமிழரசோடும் ஒட்டி உறவாடி, அவை வளரத்தாம் வளர்ந்து அவை வீழத்தாமும் வீழ்ந்து மறைந்து போன பாணர்குடி மரபுபை ஆராயும் முகமாக இவ்வியல் அமையப்பெறுகிறது.

### 2.1 ஆற்றுப்படை தோற்றம்

ஆற்றுப்படுத்துதல் ஒருவர் தான் பெற்ற சிறப்பை மற்றவரிடம் எடுத்துக் கூறி அவரும் அப்பேற்றினைப் பெற வேண்டுமென வழிகாட்டும் முறை ஆகும். பெரும்பாலும் பாணர், விறலி, கூத்தர், பொருநர், புலவர் ஆகியேரே ஆற்றுப்படை செயல்களை மேற்கொண்டுள்ளதாக இலக்கியப்பதிவுகள் காட்டுகின்றன. ஆற்றுப்படைக்கான இலக்கணம் பற்றி தொல்காப்பியர் பாடாண் திணையில் விரிவாகப்பேசுகிறார்.

“கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்

ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி

பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇ

சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும்” (தொல்.புறத். 88)

என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். புறநானூற்றில் ஆற்றுப்படை சார்ந்த செய்தி காணப்படுகிறது. பசுக்கூட்டம் நிறைந்த மலை வளத்தையும் மான் கூட்டம்

நிறைந்த காட்டு வளத்தையும் மீன்கள் நிறைந்திருக்கின்ற நெய்தல் நிலத்தையும் சிறிய யாழினை மீட்டியபடி பாணர்கள் கடந்து வந்ததாக இளநாகனார் குறிப்பிடுகின்றார். இதனை,

"ஆனினங் கலித்த அதர்பல கடந்து
மானினங் கலித்த மலையி னொழிய
மீனினந் தலித்த துறைபல நீந்தி
உள்ளிவந்த வள்ளுயிர்ச் சீறியாழ்
சிதாஅர் உடுக்கை முதாஅரிப் பாண" (புறம். 138:1-5)

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம். இதன் மூலம் ஆற்றுப்படை இலக்கியத்தின் தோற்றம் குறித்த செய்திகள் எட்டுத்தொகை நூல்களுள் பழமையான புறநானூற்றிலே காணப்படுகிறது என்பதை அறியலாம். மேலும், பத்துப்பாட்டுள் செம்பாதி ஆற்றுப்படைகளாகும். அவற்றில் திருமுருகாற்றுப்படை நீங்கலாகப் பெரும்பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, கூத்தராற்றுப்படை ஆகிய நான்கும் பாணர் சமூகம் பற்றி எடுத்தோதுகிறது. எனவே, ஆற்றுப்படை இலக்கியமானது எட்டுத்தொகை நூல்களில் தொடங்கி பத்துப்பாட்டில் முழு வளர்ச்சி பெற்றுள்ளது. ஆற்றுப்படையின் தோற்றம் பற்றி ராஜ் கௌதமன் கூறும் போது "ஆற்றுப்படை நூல்களின் தோற்றம் தொகை நூல்களில் காணப்படுகிறது. புறநானூற்றில் மற்றும் பதிற்றுப்பத்தில் காணப்படும் ஆற்றுப்படை கூறுகள் பின்னாளில் பெருமளவில் வளர்ச்சி பெற்று விரிவான, தனிவகையான ஆற்றுப்படை நூல்களாகப் படிமலர்ச்சி பெற்றுள்ளன."[1] என்று அவர் குறிப்பிடுகிறார். "புறநானூறும் பதிற்றுப்பத்தும் புறப்பொருள் சார்ந்தன ஆகலின் அவற்றுள்ளும் ஆற்றுப்படைகள் உண்டு. ஆற்றுப்படைகளேயன்றி பாண்பாட்டு என்பதொரு துறைப்பாடலும் உண்டு"[2] என்று இரா.இளங்குமரன் குறிப்பிடுகிறார்

**2.2 பாணரின் காலம்**

பாணரின் காலம் என்பது தொல் பழங்கால மக்கள் சமுதாயத்தில் முதல் இலக்கியம் தோன்றிய காலத்தைப் பாணரின் காலமாகக் கருதலாம். "இசையும், பாட்டும், கூத்தும் கலந்து ஒன்றிய நிலையிலேயே இலக்கியம் தோன்றியது. இவ்வாறு இலக்கியம் அரும்பத் தொடங்கிய காலத்தைப் 'பாணர் - பாடினியரின்

காலம்' என்று நாம் அழைக்கலாம்."[3] என்று வெ.வரதராசன் கூறுவது குறிப்பிடத்தக்கது. நாகரிகம் வளர்ச்சிபெறத் தொடங்கிய காலத்தில், பல்வேறு நாடுகளிலும் பாணரும் பாடினியரும் இலக்கிய வளர்ச்சிக்கு மூலகாரணமாக இருந்துள்ளனர். அவர்கள் மாவீரர்களின் புகழை ஊர்ப்பொது மன்றங்களிலும், திருவிழா நடைபெற்ற இடங்களிலும், மன்னரின் அவைகளிலும் இசையோடு பாடிக் கேட்போரை மகிழ்வித்தனர். அவர்களுடையப் பாடல்கள் வீர உணர்ச்சியை ஊட்டியதோடு மகிழ்ச்சி அளிப்பதாகவும் இருந்தன. அக்காலத்தில் பாணர்களே மூதறிஞராகக் கருதப்பெற்றனர். அவர்களுக்குச் சமுதாயத்தில் சிறப்பிடம் தரப்பட்டது. அவர்கள் ஊர் ஊராகச் சுற்றித் திரிந்தனர். எங்கு இன்ப நிகழ்ச்சிகள் நடந்தாலும் அல்லது துன்ப நிகழ்ச்சிகள் நடந்தாலும் அங்கு, அவர்கள் முன்னின்று அவற்றை நடத்தி வைத்தனர். அச்சமயங்களில் அவர்கள் உணர்ச்சித் துடிப்புடன் வீரர்களின் அரும்பெருஞ் செயல்களைப் போற்றிப் பாடினர். அப்பொழுது, தான் பாடும் பாடலுக்கேற்பத் தாளமிட்டு அவர்கள் ஆடினர். காலப்போக்கில் பாணனோடு ஆடலிலும் பாடலிலும் வல்ல மகளிரும் சேர்ந்து மன்றத்தினருக்கு ஆடலும் பாடலும் கலந்த இலக்கிய விருந்தளித்தனர். அதனால், ஆடல் மகளிராகிய விறலியரும், பாடல் மகளிராகிய பாடினியரும் பாணனைச் சார்ந்து வாழத் தொடங்கினர். இவர்களே வாய்மொழி மரபு இலக்கியங்களை தோற்றுவித்தனர் எனலாம். மேலும் வாய்மொழி மரபுகளே இலக்கியத் தோற்றத்திற்கு அடிப்படையாக அமைந்தது. எனவே, வாய்மொழி மரபு இலக்கியம் தோன்றிய காலத்தையே பாணர்களின் காலம் என்று குறிப்பிடலாம்.

## 2.3 பாணர் என்னும் சொல்லாக்கம்

பாண் என்ற சொல்லானது பண் என்னும் சொல்லின் அடியாகப் பிறந்தது. பாண் என்பது பாண்குடி, பாண்சேரி, பாண் கடன் எனப் பல சொற்களின் வேர்ச்சொல்லாகும். 'பாண் என்பது 'அர்' என்னும் பலர்பால் ஈறு பெற்றுப் 'பாணர்' என்றாயிற்று. 'பண்ணை இசைப்போர் 'பாணர் எனத் தொழிலாகு பெயராகவோ அல்லது பண்பாகு பெயராகவோ அமைந்துள்ளது. பாணர்களில் ஆடவரைச் "சென்னியர், வயிரியர், செயிரியர், மதங்கர், இன்னிசைகாரர், பாணரென்ப எனப் பிங்கல நிகண்டும் பெண்டிரைப் "பாடினி, விறலி, பாட்டி, மதங்கி, பாடல் மகடூஉ பாண்மகள்"[4] எனத் திவாகரமும் குறிப்பிடுவதாக இளங்குமரன் குறிப்பிடுகிறார்.

## 2.4 பாணர்களின் கலைச் சேவை

சங்ககாலத்திலும் ஒவ்வொரு திணையில் வாழ்ந்த மக்களின் கலைத்தாகத்தைப் பாணர் சமூகத்தினர் தீர்த்துவைத்துள்ளனர். "பாண் சமூகத்தைச் சார்ந்த ஒவ்வொருவரும் தனித்தனியான கலை சேவையைச் சங்க சமூகத்தில் செய்துள்ளனர். கூத்தர்களின் ஆடல் பாடல் நிகழ்ச்சிகளைக் கண்டுகளிக்கப் பக்கத்து ஊர்களைச் சேர்ந்த மக்கள் கூத்து நடக்கும் ஊரில் கூடினார்கள். கிராமப்புறங்களில் கழைக்கூத்தாடும் கலைஞர்கள் ஊர் ஊராகச் சுற்றித் திரிந்தார்கள். சமயம் சார்ந்த பொம்மலாட்டமும் ஊர்ப்புறங்களில் நிகழ்ந்துள்ளன. இவ்வாறு பல்வேறு வகையான கலைஞர்கள் ஐவகைத் திணைகளிலும் சுற்றி வந்துள்ளதை ஆற்றுப்படை நூல்கள் வழியும் பிற சங்க இலக்கியங்கள் வழியும் அறியமுடிகிறது."[5] என்று பாணர்கள் தமிழக நிலம் முழுமையும் சுற்றித்திரிந்து கலை சேவை செய்தமையைப் பக்தவச்சல பாரதி கூற்றின் வாயிலாக அறியலாம்.

பாணர்கள் தங்களின் கலை சேவைகளில் வேந்தர்களின் புகழை உலகம் முழுவதும் பரப்பி வந்துள்ளனர். ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் புகழைத் தரணியெங்கும் பாடுக என பாணர்களை நோக்கி நச்செள்ளையார் பத்துப்பாட்டில் குறிப்பிட்டுள்ளார். அதைப்போல் பிட்டங்கொற்றனுடைய புகழினைத் தமிழகம் எங்கும் கேட்குமாறு பாடுக எனக் கரூர் கதப்பிள்ளைச்சாத்தனார் பாணரை விழித்துப்பேசும் நிகழ்வை,

"கைவள் ஈகைக் கடுமான் கொற்ற
வையக வரைப்பில் தமிழகம் கேட்பப்
பொய்யாச் செந்நா நெளிய ஏத்திப்
பாடுப என்ப பரிசிலர் நாளும்
ஈயா மன்னர் நாண வீயாது
பரந்தநின் வசையில் வான் புகழே" (புறம். 168:1-6)

என்ற புறநானூற்று அடிகள் பதிவு செய்துள்ளது. எனவே, பாணர்கள் எப்பொழுதும் குழுவாகச் சென்று மன்னர்களையும் கிழார்களையும் வள்ளல்களையும் புகழ்ந்து பாடினார்கள். இவர்களின் கூத்துப் பாடலும் ஆடலுமாகிய கூட்டுப்படைப்பாகவும்

அனுபவம் சார்ந்ததாகவும் இசைக்கருவிகள் பல இயைந்த படைப்பாகவும் இருந்துள்ளது என்பதை,

"குழல் வழி நின்றது யாழே யாழ் வழித்

தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப்

பின் வழி நின்றது முழவே முழவொடு

கூடி நின்று இசைத்தது ஆமந்திரிகை" (சிலம்பு. அரங். 138-142).

என்ற சிலப்பதிகார அடிகள் எடுத்துரைக்கின்றன. இம்முறையானது குழு இசை சார்ந்ததாகவும் ஒருவகையான இனக்குழுச் சமூக வடிவத்தின் பிரதிபலிப்பாகவும் அமைந்துள்ளது. இம்முறையினை ஆமந்திரிகை என்று சிலம்பு குறிப்பிடுகிறது.

**2.5 பாணர்களின் நாடோடி வாழ்க்கை முறை**

பாணர்களின் வாழ்க்கை முறை நாடோடி வாழ்க்கை முறையைச் சார்ந்ததாகும். அவர்களின் ஊர் சுற்றும் வழிப்பயணம் பல தேசங்களைக் கடந்து சென்றதை ஆற்றுப்படை நூல்களிலும் சங்கத்தொகை நூல்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. பாணர்கள் சீறூர் முதல் பட்டினம் வரை, வேட்டுவர் முதல் உழவர் வரை அனைத்து தரப்பினர்கள் வாழும் பல இடங்களுக்கும் சென்று ஆடிப் பாடிப் பரிசில் பெற்றார்கள். 'பெருங்கல் நாடன்' எனப்படும் குறிஞ்சி நிலத்தலைவனிடமும் சென்றுள்ளதை,

"பெருங் கல் நாடன் வரவு அறிந்து, விரும்பி," (குறுந். 75:6)

"பெருங் கல் நாடனொடு இரும் புனத்து அல்கி," (குறுந். 84:4)

"மா மலைநாடன் கேண்மை" (நற். 10:2)

போன்ற நற்றிணை, குறுந்தொகை, பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. இதன் மூலம் பாணர்கள் காடுகள் வழியாக நெடுந்தூரம் பயணம் செய்துள்ளதை அறியமுடிகிறது. இத்தகைய காட்டு வழியில் விறலியோடு பாணர்கள் பயணப்பட்ட நிகழ்வை,

"கட்சி மஞ்ஞையின் சுரமுதல் சேர்ந்த,

சில் வளை விறலியும், யானும், வல் விரைந்து" (புறம். 60:8-9)

என்ற புறப்பாடல் குறிப்பிடுகிறது. மேலும், பாணர்கள் சீறூர் மன்னர்களையும் குறிஞ்சி நிலத்தலைவர்களையும் மட்டும் சாராது பேரரசர்களையும் சார்ந்து வாழ்ந்துள்ளனர். பாணர்கள் பேரரசர்களையும் தமது கலைத்திறத்தால் மகிழ்வித்துள்ளனர். பதிற்றுப்பத்தில் சேரநாட்டை வர்ணிக்கும் புலவர் கூத்தர்கள் தங்கள் முழவுகளோடு ஆடும் விழாக்கள் நிறைந்த வளமுடைய நாடு சேரநாடு எனப் புகழ்கின்றார். பொருநர்கள் அரசர்களிடம் நெருங்கி வாழ்வதற்குக் கிடைத்த வாய்ப்பு மற்றவர்களுக்குக் கிடைக்கவில்லை. பல பொருநர்கள் அரசர்களிடம் நெருக்கமான உறவினைக் கொண்டிருந்தார்கள். சிலர் தலைவர்களிடமும் கிழார்களிடமும் நெருக்கமான உறவினைக் கொண்டிருந்தார்கள். பாண் சமூகத்தார் பேரரசர்களிடமும் சீறூர் மன்னரிடமும் நெருக்கம் கொண்டிருந்தாலும் அவர்களின் வாழ்வானது நாடோடி வாழ்க்கையாகவே அமைந்திருந்தது. பருவ காலத்திற்கேற்பவும் பிரதேசங்களுக்கு ஏற்பவும் இந்த நாடோடிக் கலைஞர்கள் ஊர் ஊராகச் சென்றார்கள் என்பதை,

“பல்லூர் பெயர்வனர் ஆடி ஒல்லெனத்

தலைப்புணர்த்து அசைத்த பல்தொகைக் கலப்பையர” (அகம். 301:3-4)

என்ற அகநானூற்றுப் பாடல் இதன் மூலம் அறியலாம். மேலும்,

“நாடா கொன்றோ காடா கொன்றோ

அவலா கொன்றோ மிசையா கொன்றோ

எவ்வழி நல்லவர் ஆடவர்

அவ்வழி நல்லை வாழிய நிலனே” (புறம். 187:1-4)

இப்பாடலில் வருகின்ற நாடு, காடு, அவல், மிசை ஆகியவை முறையே மருதம், முல்லை, நெய்தல், குறிஞ்சி ஆகிய நான்கு திணை நிலங்களையே குறிக்கின்றன. இவற்றில் எந்தத் திணை நிலமாயினும், அதிலுள்ள ஆடவர் (ஆள்பவர்) நல்லவராயிருப்பதால் மட்டுமே அந்தத் திணை வாழ்வு நல்லதாக அமைய முடியும் என்பதையும் அதைப்பொறுத்தே தன்னுடைய வாழ்க்கைமுறையும் சிறப்பாக அமைய முடியும் என்பதையும் பாணர்கள் வாழ்வானது ஆள்பவர்களைப் பொறுத்தே அமைந்துள்ளது என்பதையும் ஔவையாரின் வாய்மொழி மூலமாக அவதானிக்க இயலுகிறது.

## 2.6 பாணர் கூட்டம்

பாணர் கூட்டங்கூட்டமாக இணைந்து வாழும் மரபினை உடையவர்கள். இவர்களின் கூட்டம் பெருங்கூட்டமாகவே இருந்துள்ளது. பாணர்கள் கூட்டமாக இணைந்து வாழும் மரபினை இருங்கிளை என்று மதுரைக் காஞ்சியும் இரும்போர் ஒக்கல் என்று புறநானூறும் குறிப்பிடுகிறது. ஒக்கல் என்பது சுற்றத்தைக் குறிப்பதாகும். பாணர் சுற்றத்தைக் கல்லென் சுற்றம் எனப் பெரும்பாணாற்றுப்படை கூறுவதிலிருந்து பாணர்கள் பெருங்கூட்டமாக இருப்பதால் எப்போதும் கூச்சல், சத்தம் உண்டாக்குபவர்கள் என்பது நன்கு விளங்குகிறது. எப்போதும் இவர்கள் பசியுடன் இருப்பார்கள் என்பதால் இக்கூட்டத்தார் பைதற் சுற்றம் என்றும் பெயர் பெற்றுள்ளனர். இவர்கள் பசியும் வறுமையும் துயரும் கொண்டவர்கள் என்பதால் இவர்கள் கடும்பின் கடும்பசி எனவும், கடும்பினது இடும்பை எனவும் புறநானூறு வருணிக்கிறது. பாணர்கள் பெரும்பாலும் கூட்டமாகச் செயல்படும் இயல்புடையவர்கள் என்பதை,

“பாணர் வருக! பாட்டியர் வருக!

யாணர்ப் புலவரொடு வயிரியர் வருகென

இருங்கிளை புரக்கும் இரவலர்க்கு எல்லாம்” (மதுரை. 749-751)

எனும் மதுரைக்காஞ்சி அடிகள் எடுத்துரைக்கின்றன. பாணர்கள் பெரும் சுற்றத்துடன் சென்று பொருள் ஈட்டினார்கள் என்பதை,

“கேடின்றாகப் பாடுனர் கடும்பு என” (புறம். 160:10)

“பாடுநர் கடும்பும் பையென் றனவே” (புறம். 238:7)

என்ற புறப்பாடல்கள் காட்டுகின்றன. பாணர்கள் எல்லாச் சூழலிலும் தம் சுற்றத்தாரோடு சென்று வள்ளல்களைச் சந்திப்பாகள் என்பதையும் புரவலர்களும் பாணருடன் வந்த சுற்றத்தார்க்கும் பொருள் வழங்கி மகிழ்வித்தனர் என்பதையும்,

“இன்றும் வரும்கொல் பாணரது கடும்பே” (புறம். 264:7)

எனும் அடியானது குறிப்பிடுகிறது. நாடோடிகளின் வாழ்வில் கூட்டமாக ஒருங்கமைந்து செல்லுதல் மிக முக்கியமான முறையாக இருந்துள்ளது. அம்முறையைப் பாணர்களும் கொண்டிருந்தனர் என்பதிலிருந்து பாணர் குடியினர் பழங்குடி சமூகத்தைச்சார்ந்தவர் என்பது இதன் மூலம் தெரிகிறது.

## 2.7 பாணர் வாழ்விடம்

நிலைகுடிகளான மன்னர்களையும் வள்ளல்களையும் அண்டி வாழ்ந்த பாண் சமூகத்தார் நிலைகுடிகளின் ஊருக்கு வெளியே பொதியில் (தற்காலிக உறைவிடம்) அமைத்து வாழ்ந்து வந்துள்ளனர். பாணர்கள் வாழும் பொதியிலைக் கவனிக்க போரில் சிறைபிடிக்கப்பட்ட மகளிர் பயன்படுத்தப் பெற்றுள்ளனர். அவர்கள் அதனைச் சாணத்தால் மெழுகித் தூய்மையாக வைத்திருந்த செய்தியை,

“அலங்குகதிர் சுமந்த கலங்கற் சூழி

நிலைதறர்வு தொலைந்த ஒல்குநிலைப் பல்காற்

பொதியில் ஒருசிறை பள்ளியாக” (புறம். 375: 1-3)

“கொண்டி மகளிர், உண்துறை மூழ்கி,

அந்தி மாட்டிய நந்தா விளக்கின்,

மலர் அணி மெழுக்கம், ஏறிப் பலர் தொழ,

வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில், (பட்டின.246-249)

என்ற புறநானூறு, பட்டினப்பாலை அடிகள் கூறுகின்றன. மன்னன் வாழும் அரண்மனைகளுக்குச் செல்லும் நீண்ட வெளியில் ஆங்காங்கு ஊரின் பொது மன்றங்களிலும் பாண் சமூகத்தார் தங்கிச் செல்லும் மரபைக் கொண்டிருந்ததை,

“மன்றில் வதியுநர் சேப்புலப் பரிசிலர” (மலைபடு. 492)

என்ற மலைபடுகடாம் பாடல் வரி எடுத்தியம்புகிறது.

## 2.8 பாணர் வறுமை

பாணர்கள் இயல், இசை, நாடகமெனப் பலதுறை வல்லுநர்களாக இருந்தாலும் அவர்களின் புலமைக்கேற்ற பொருள் வளமில்லாமல் வறுமையில் வாடினார்கள். பெரும்பாலான பாணர்கள் வறுமை நீங்காச் சூழலில் வாழ்ந்து வந்தார்கள் என்பதை,

"வறுமையர் பாணர்

பூஇல் வறுந்தலை போல" (குறுந்.19:2-3)

"பாணர் காண்க இவன் கடும்பினது இடும்பை" (புறம்.173:6)

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன. பாணர்கள் தாங்கள் செல்லும் இடங்களுக்கெல்லாம் மண்டையை (உண்கலம்) உடன்கொண்டு செல்வார்கள். பாரி வள்ளல் பாணர்களின் மண்டை நிறையக் கள் வழங்கி மகிழ்வித்தான் என்பதை,

"பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார" (புறம்.115)

எனும் அடி புலப்படுத்துகின்றது. பசியால் வாடிய பாணர்கள் மண்டை கொண்டு உணவு பெற்றுப் பசியாறியுள்ளனர். பாணர்களின் வாழ்விலிருந்த வறுமைப் பற்றியும் அதனைப் போக்கி கொள்ள அரச மரபினரை அவர்கள் நாடிச் சென்றதையும் அவர்களும் பாணர்களை முறையோடு உபசரித்ததையும் அம்மன்கிளி முருகதாஸ் "பாணர்களின் வாழ்வு வறுமை, வளம் என இரு துருவங்களையும் சந்திப்பதாக உள்ளது. அவர்களின் வாழ்க்கை ஏற்றமும் இறக்கமும் உடையது. உப்பு இல்லாத கீரையைச் சமைத்துண்ணும் வறிய வாழ்வையும் கொண்டிருந்தனர். அரசனோடு இருந்து இராச போக வாழ்வையும் அனுபவித்துள்ளனர்."[6] என்று அம்மன்கிளி முருகதாஸ் விளக்குகிறார். ஆயினும், வறுமையில் உழல்பவர்களாகக் கட்டிய கந்தையும் ஒட்டிய வயிறும் உடையவர் பாணர் என்பதற்கு பலப்பல சான்றுகள் உள்ளன. கையில் இலக்கண முறைமை நிரம்பிய யாழ் உடம்பின் கண் ஈத்தளிப்போர் இன்மையால் பசி இடுப்பின் கண் அற்றம் மறைத்தற்கு வேற்றிழை ஊடுபோன வியர்வையால் நனைந்த கந்தையாடை. இக்கோலத்துடன் காட்சியளிக்கும் வருத்தத்தை உடைய பாணனே! சோம்பலால் மேற்கோள் இல்லாதவன் உடம்பை ஒப்பப் பெரியதாகிய பொலிவற்ற மிகப்பெரிய சுற்றத்தையும் மிக்க பசியையும் உடைய இரவலனே! என்று புறநானூறு குறிப்பிடுகிறது. இதனை,

"காரென் ஒக்கல் கடும்பசி இரவல! (புறம். 141:4)

"பூட்கை இல்லோன் யாக்கை போலப்

பெரும் புல்லென்ற இரும் பேர் ஒக்கலை (புறம். 69:7-8)

என்று கூறுகிறது. மேலும் ஈரும் பேனும் கூடியிருந்து அரசாண்டு, வியர்வையால் நனைந்து, தைத்தற்குரிய நூலால் பல விடங்களில் தைக்கப் பட்ட கிழிந்த

கந்தைத்துணி உடுத்திக்கொண்டு பசி மிகுதியால் அரற்றும் சுற்றத்துடன் ஓரிடத்தில் இராமல் திரிதலைச் செய்யும் பொலிவற்ற வடிவினையும், கற்ற கல்வியை வெறுத்துக் கூறுகின்ற வாயினையும் உடையவர்கள் பாணர்கள். இதனை,

"துனிகூர் எவ்வமொடு துயர்ஆற்றுப் படுப்ப" (சிறுபாண். 39-40)

"கல்லென் சுற்றமொடு கால்கிறர்ந்து திரிதரும்

புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாணன" (பெரும்பாண்: 21-22)

"இரந்தூண் நிரம்பா மேனியொடு" (குறுந். 33)

என்ற பாடல் அடிகள் விதந்தோதுகின்றன. இவ்வாறெல்லாம் வறுமையால் வருந்துபவர்களாக இருந்த போதிலும் சமுதாய மக்களால், பெரும் பெயர் மன்னரால் பெருமதிப்போடும் மரியாதையோடும் பாண் குடியினர் நடத்தப் பட்டிருக்கின்றனர்.

**2.9 பாணரின் பொதுவுடைமை சித்தாந்தம்**

பாணர்கள் வாழ்வில் பொதுவுடைமை சித்தாந்தம் குடிகொண்டிருந்தது என்றால் அது மிகையாகாது. நாடோடி வாழ்க்கை மேற்கொள்ளும் அவர்களால் கொணரப்பட்ட பொருட்களைப் பொதுவுடைமையால் பகிர்ந்து கொள்ளப்பட்டுள்ளது. பொன்னையும் பொருளையும் அவர்கள் சேமித்து வைக்கவில்லை. அன்றாடத் தேவைக்கு மிஞ்சியதை மற்றவர்களுக்குக் கொடுத்து மகிழ்ந்தார்கள். உபரி, சேமிப்பு இரண்டுமற்ற ஒரு பழங்குடிப் பண்பைக் கொணடவர்களாக இவர்களுடைய வாழ்வு இருந்துள்ளது. எவ்வளவு பொருள் கிடைத்தாலும் தம் நுகர்வுக்குக் கூடுதலானவற்றை எல்லார்க்கும் வழங்கி மகிழ்ந்துள்ளார்கள். இதனை,

"பசித்த ஒக்கல் பழங்கன் வீட" (புறம். 389:7)

"இரும்பேர் ஒக்கல் பெரும்புலம்பு அகற்ற" (புறம். 390:4)

எனும் அடிகள் மூலம் அறியலாம். பாணர்கள் தாம் மட்டுமல்லாது தம் கூட்டத்தையே வாழ்விக்க வேண்டியவர்களாக இருந்துள்ளனர். எனவே, அவர்கள் எங்கு சென்றாலும் கூட்டமாகச் செல்லும் வழக்கம் கொண்டிருந்தனர். பழங்கள் நிறைந்த மரத்தைப் பறவைக் கூட்டங்கள் நாடிச் செல்வது போலப் பாணர்களும் கூட்டம் கூட்டமாகச் சென்றார்கள் என்பதை,

“கனிபொழி கானம் கிளையொடு உணீஇய

துனைபறை நிவக்கும் புள்ளினம் மான” (மலைபடு. 54-55)

என்ற மலைபடுகடாம் அடிகளும் பாணர்களில் பலர் தாம் துய்ப்பதற்கு மட்டுமின்றிப் பிறர்க்குக் கொடுப்பதற்காகவும் பரிசில் பெற்றனர் என்பதை,

“நிறன் உற்ற அராஅப் போலும்

வறன் ஒரீஇ - வழங்கு வாய்ப்ப

விடுமதி அத்தை, கடுமான் தோன்றல” (புறம். 382:6-8)

என்ற புறநானூற்று அடிகளும் எடுத்தோதுகின்றன. “பாணர்களின் வாழ்வு கவலையில்லாத பறவைகளின் வாழ்க்கை போன்றதாகும். சுற்றித் திரிந்தால் வாழ்ந்துவிடலாம் என்ற கொள்கையுடையவர்களாய் இருந்தார்கள் ‘யாதும் ஊரே’ என்று திரிந்தார்கள்.”[7] என்று பக்தவத்சல பாரதி குறிப்பிடுவதும் பாணரின் பொதுவுடைமை சிந்தனையைக் காட்டுகிறது.

### 2.10 பாணரின் கடவுள் கோட்பாடு

பாண் சமூகத்தினர் கடவுள் நம்பிக்கை கொண்டவர்களாகவும் அகவுநர்கள் செய்யும் வெறியாடல், வருவதுரைத்தல் போன்ற மந்திரம், சடங்கியல் சார்ந்த செயல்பாடுகளை உடையவர்களாகவும் இருந்துள்ளனர். வேலனும் (வெறியாட்டு நிகழ்த்துபவன்) கட்டுவிச்சியும் (குறி கூறுபவர்கள்) நிலைகுடிகளின் வாழ்வில் வெறியாடல், வருவதுரைத்தல், மாந்திரீகம் செய்தல் போன்ற சேவைகளைச் செய்து முக்கிய இடம் பெற்றிருந்தனர். என்பதை,

“வேலன் தைஇய வெறி அயர் களனும்,“ (முருகு. 222)

“செல்வன் பெரும் பெயர் ஏத்தி, வேலன்

வெறி அயர் வியன் களம் பொற்ப, வல்லோன” (அகம். 98:2-3)

“வேலன் புனைந்த வெறி அயர் களம்தொறும்” (குறுந். 53:4)

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம். இவ்வாறாகப் பாணர்கள் இயல்பிலேயே கடவுள் நம்பிக்கை கொண்டவர்களாகவும் சிவன், திருமால், முருகன், கானுறை

தெய்வங்கள் உள்ளிட்ட மற்ற திணைத் தெய்வங்களையும் தம் இசைக்கருவிகளையும் வழிபடும் இயல்புடையவர்களாகவும் இருந்துள்ளனர். "பாணருக்குக் கிடைத்த யாழ் மரபுவழிக் கருவியாகும். வழிவழி வந்த கருவியாதலால் அது வழிபடத் தக்கதாய் மாறியது. தம் கடமை புரிவதற்குக் குடிமையின்படி கிடைத்த கொடையாக இது இருந்தது. அதனாலேயே அது கடனிறை யாழ், கையது கடனிறை யாழே எனப்பட்டது. தாம் வழிபடும் பொருளை வைத்தே அவர்கள் சூள் செய்துள்ளனர்."[8] என்று பாணர்கள் தம்முடைய யாழை கடவுளாக மதித்து அதன் மீது சூள் உரைத்த செய்தியை ராஜ் கௌதம் குறிப்பிடுவது நோக்கத்தக்கது.

### 2.11 நன்நிமித்தம் பார்த்தல்

புரவலரைத் தேடிப் பாணர்கள் செல்லும் பயணமானது 'பாணர் செலவு' என வழங்கப் பெற்றது. அவ்வாறு வெளிப்பயணம் செல்லும் போது பாணர்கள் சொகினம் (சகுனம்) பார்த்துப் புறப்பட்டனர். போருக்குச் செல்லும் வீரர்கள் உருவிலி (அசரீரி) கேட்டுப் போவது போலப் பாணரும் நன்நிமித்தம் பார்த்துக் கிளம்புவார்கள். இன்றும் நாடோடி வாழ்க்கை வாழ்பவர்களில் சிலர் நன்நிமித்தம் பார்த்தல் அவர்கள் வாழ்வில் நீக்கமற நிறைந்திருப்பதை, "குடுகுடுப்பை நாயக்கர் (ஜாமகோடங்கி), பூம்பூம் மாட்டுக்காரர் போன்ற இன்றைய நாடோடிச் சமூகத்தாரும் விரிவான சகுன முறைகளைப் பின்பற்றுகின்றனர"[9] என்று கு.வெ பாலசுப்பிரமணியன் கூறியுள்ளார். பாணர்கள் புரவலரைக் காணும் விருப்பத்துடன் புறப்படும் போது நிமித்தம் பார்த்துச் செல்லும் வழக்கமும் அவர்களிடமிருந்தது என்பதை,

> "வளரத் தொடினும் வௌவுபு திரிந்து
> விளரி உறுகரும் தீந்தொடை நினையா
> தளரும் நெஞ்சம் தலைஇ, மனையோள்
> உளரும் கூந்தல் நோக்கி, களர
> கள்ளி நீழல் கடவுள் வாழ்த்தி" (புறம். 324:1-5)

என்ற பாடல் அடிகள் காட்டுகின்றன. ஓசை மிக வேண்டுமென்று அடித்தாலும் ஓசை தாழ்ந்து வேறுபட்டு, இரங்கற் பண்ணாகிய விளரியைச் சென்று அடைந்த நரம்புத் தொடையில் தீமையை நினைத்து, நெஞ்சத் தளர்ச்சியுடன் புறப்பட்ட அளவில்

தலைவிரித்த கோலத்துடன் வந்த ஒரு பெண்ணையும் வழியில் கண்டு மிக வருந்தினன் என்று பாணன் கூறுவதாக வடமோ தங்கிழார் கூறுகிறார். விரிந்த கூந்தலுடன் ஒருத்தி முன்னால்வரின் அதனைத் தீய நிமித்தம் என்று கருதுவதும், அந்த தீங்கை விலக்குதல் வேண்டிக் கள்ளி நீழல் கடவுளை வாழ்த்தி வணங்குவதும் பாணர்கள் இயல்பாகக் கொண்டிருப்பதை இதன் மூலம் அறியலாம்.

### 2.12 உயர்குடிப் பாணர்

சங்ககாலத்தில் பாணர்கள் வறுமையில் உழல்பவர்களாக இருந்த போதிலும் அவர்களில் சிலர் செல்வச் செழிப்புடன் இருந்துள்ளனர். பொன்னணி பூண்டு செல்வந்தர் போலப் பாணர்கள் காணப்பட்டதை

"மெய்வளம் பூத்த விழைதகு பொன்னனணி

ஐநைவளம் பூத்த நரம்பியைச்சீர்ப் பொய்வளம்

பூத்தன பாணநின் பாட்டு" (பரி. 18:6-9)

என்ற பரிபாடல் அடிகள் கூறுகின்றன.

### 2.13 கீழ்க்குடிப்பாணர்கள்

பாணர்களில் ஒரு சிலரே செல்வ வாழ்வு வாழ்ந்தவராகவும் மற்றவர்கள் வறுமையால் பெரிதும் துன்பப்பட்டுள்ளனர். அவர்களுக்கு தெரிந்த தொழிலைச் செய்து தம் வாழ்வை நடத்தி வந்துள்ளனர்.

#### 2.13.1 மீன்பிடிப் பாணர்

கடற்கரைப் பிரதேசத்துப் பரதவர்கள் போலப் பாணர்களில் ஒரு பிரிவினர் மீன்பிடி தொழிலில் ஈடுபட்டிருந்தனர். இவர்கள் மீன்களைத் தப்பாமல் பிடிப்பதில் வல்லவர்களாயிருந்தனர். மூங்கிலில் செய்த தூண்டில்களாலும் வலையைப் பயன்படுத்தியும் மீனைப் பிடிப்பதில் திறன் கொண்டிருந்தனர் என்ற செய்தியை

"துடி எறியும் புலைய!

எறிபோல் கொள்ளும் இழிசின" (புறம். 287:1-2)

"வலை வல் பாண்மகன் வால் எயிற்று மடமகள்

வராஅல் சொரிந்த வட்டியுள்," (ஐங். 48:3-4)

என்ற பாடல் அடிகள் விளக்குகின்றன. பாணர்கள் தம் மண்டைக் கலங்களில் மீன் வைத்திருந்து அவற்றைச் சீவிப் பதப்படுத்திப் பயன்படுத்திய முறையை

"பாணர் பசுமீன் சொரிந்த மண்டை போல

எமக்கும் பெரும் புலவு ஆகி" (குறுந். 169:2-3)

"சிறுசின் மீன் சீவும் பாண்சேரி" (புறம். 348:6)

என்ற பாடல் அடிகள் கூறுகின்றன. ஆதலின் பாணர்கள் மீன்பிடி தொழிலில் பெரிதும் ஆர்வங்காட்டியமையும் அவற்றைப் பதப்படுத்திப் பயன்படுத்தியமையும் இதன் மூலம் அறியலாம். பாணர்களில் ஒரு மரபினர் மீன் பிடித்தலை ஒரு தொழிலாகவும் செய்துவந்துள்ளனர் என்பதை இதன் மூலம் அவதானிக்க முடிகிறது.

### 2.13.2 கைவினைக் கலைஞர்கள்

பாணர்களில் சிலர் கைவினைக் கலைஞராகவும் திகழ்ந்துள்ளனர். பனைமரத்தின் நாராலும் பனங்குருத்து ஓலையாலும் பல்வேறு பழங்குப் பொருட்களைச் செய்து விற்றுப் பிழைத்து வந்துள்ளனர். என்பதை,

"நாரும் போழும் செய்துண்டு ஓராங்குப்

பசிதினத் திரங்கிய இரும்பேர் ஒக்கற்கு" (புறம். 370: 1-2)

"முழா அரைப் போந்தைபொருத்தி நின்று" (புறம். 85: 7)

என்ற புறநானூற்று அடிகள் எடுத்துரைக்கின்றன. முழவு போன்ற அடியினையுடைய பனைமரத்தில் அரம் போன்ற கருக்கினை உடைய பெரிய மட்டையிலிருந்து வழவழப்பான நார் எடுத்து (அகினி நார்) பனங்குருத்தையும் கிணையால் கட்டி ஏர் உழும் உழவர் குடியினர் வாழும் ஊர்களில் பாணர்கள் தம்முடைய புழங்குப் பொருட்களை விற்று வாழ்ந்தனர் என்பதை மேற்கூறிய புறநானூற்றுப் பாடல்கள் கூறுகின்றன.

### 2.14 பாணர் சமூகம்

சங்ககாலத்தில் பாண் சமூகம் என்பதற்குள் பல்வேறு சமூகக் குழுக்கள் இருந்தன. பாணர் தொடங்கி அகவுநர் வரை இக்குழுக்கள் ஒரு படிநிலையில் காணப்பட்டன. பாண் சமூகத்திற்கான அறிவுத் திறன், அவர் வைத்திருக்கின்ற

இசைக் கருவிகள், அவருடைய சுற்றத்தாரின் எண்ணிக்கை, பாடினி, விறலி போன்ற பெண்பாற் கலைஞரின் ஆட்டத்திறம், அவருடைய புரவலர்கள் முதலிய கூறுகளை முன்வைத்து அவருடைய சமூகக் குழுவில் அவருக்கான சமூக அடுக்கமைவு நிர்ணயிக்கப்பட்டிருந்தது.

"துடிய பாண பாடுவல் விறலி" (புறம். 280:4)

"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும" (தொல். புறத். 28)

என்ற அடிகள் பாண் சமூகத்தாரின் துல்லியமான வேறுபாடுகளைச் சுட்டுகின்றன. சங்ககாலப் பாண் சமூகத்தார் மிகவும் விரிவான சமூக அமைப்புக்குரியவர்கள். அவர்கள் பல்வேறு வகையான தொழில்களைச் செய்து வந்தனர். அவர்களுக்குள் தொழிற்பகுப்பும் படிநிலைகளும் தனித்த அடையாளங்களும் இருந்துள்ளன. அவற்றின் அடிப்படையில் அவர்கள் தொழில் செய்து வந்தனர். சங்ககாலத்தில் எண்ணற்ற ஊர்சுற்றும் கலைஞர்கள் வெவ்வேறு பணிகளைச் செய்து வந்தார்கள். அவர்களில் பாணர், பொருநர், கூத்தர், விறலியர், கோடியர், வயிரியர், கண்ணுளர், கிணைவர், துடியர், அகவுநர், கட்டுவிச்சியர், சென்னியர், குறுங்கூளியர், நகைவர், அகவலன், அகவர், இயவர் போன்றோர் முக்கியமானவர்களாக இருந்தனர். அவர்கள் இசைக் கருவியாலும், பாடும் பண்முறையாலும், உத்தி முறையாலும், இன்னும் பிற வகையான வினைநுட்பங்களாலும் பாண் குடியினர் பல்வேறுபட்ட சமூகத்தாராகக் காணப்பட்டனர் என்பதை, "பல்வேறு கலைத் தொழில்களில் ஈடுபட்ட பாண் சமூகத்தார் பாணர், கூத்தர், பொருநர், அகவுநர், இயவர், வயிரியர், கண்ணுளர் முதலான எட்டுக்கும் மேற்பட்ட குழுக்களாக வேறுபட்டு நிற்கின்றனர். இக்கலைச் சமூகத்தாரின் வாழ்வியல் பாங்கும் பொருளாதார நிலையும் சில பொதுடைமைகளைக் கொண்டிருப்பதால் இவர்களைப் 'பாண் சமூகத்தார்' என்று சுட்டலாம். ஆனால் ஒவ்வொரு சமூகத்தாரும் தாம் செய்யும் தொழிலால் வேறுபட்டுக் காணப்படுகின்றனர்."[10] என்று ராஜ் கௌதமன் குறிப்பின் மூலமாக அறியலாம்.

### 2.14.1 பாணர்

பாணர்களில் பெரும்பான்மையானவர்கள் பாடுவதிலும் இசைக் கருவிகள் கொண்டு இசைப்பதிலும் வல்லவர்கள். பாணர்களை இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப் பாணர் என மூவகையாக இருந்தனர். இதனை, "இசைக் கருவிகளைக் கொண்டு பண் இசைப்போரை இசைப்பாணர் என்றும் வாய்ப்பாட்டுக்காரர் என்றும் யாழ் வாசிப்போரை 'யாழ்ப்பாணர்' என்றும் 'மண்டை' என்னும் உண்கலம்

உடையோரை மண்டைப்பாணர"[11] என்றும் நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றார். இசைப்பாணர்கள் வாய்பாட்டு இசைப்பவர்கள் என்றும் யாழ்ப்பாணர் நரம்புக்கருவி இசைப்பவர்கள் என்றும் மண்டைப்பாணர் தோற்கருவி இசைப்பவர்கள் என்றும் அழைக்கப்பட்டனர்.

### 2.14.2 யாழ்ப்பாணர்

பாணர்களில் யாழ்ப்பாணர் ஒரு பிரிவினர். இவர்கள் யாழோர் எனவும் வழங்கப்பட்டனர். யாழ்ப்பாணர்களில் யாழ்க்கருவியின் அளவைப் பொறுத்துச் சிறுபாணர், பெரும்பாணர் என இருவகைப்பட்டனர். ஏழு நரம்புகளையுடைய சிறிய யாழ் கொண்டு பாடியவர்கள் 'சிறுபாணர்' அல்லது 'சீறி யாழ்ப்பாணர்' அல்லது செங்கோட்டியாழ் எனப்பட்டனர். அவ்வாறே, இருபத்தோறு நரம்புகளையுடைய பெரிய யாழைப் பயன்படுத்தியவர்கள் 'பெரும்பாணர்' அல்லது 'பேரி யாழ்ப்பாணர்' என்றழைப்பட்டனர். சிலப்பதிகார காலத்தில் பேரியாழ், மகரயாழ், சகோட யாழ், செங்கோட்டு யாழ், என்ற நான்கு யாழ்கள் பயன்படுத்தப்பட்டதையும் அவை முறையே நரம்பு கொள்ளுமிடத்துப் பேரியாழிற்கு இருபத்தொன்றும் மகர யாழிற்குப் பத்தொன்பதும் சகோட யாழிற்குப் பதினாறும் செங்கோட்டியாழிற்கு ஏழு நரம்புகளும் கொண்டிருந்தன. இதனை,

"பேரியாழ் பின்னும் மகரம் சகோடமுடன்

சீர்பொலியும் செங்கோடு செப்பினர்

ஒன்றும் இருபதும் ஒன்பதும் பத்துடனே

நின்றபதி னான்கும் பின்னேழும்-குன்றாத

நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்னமுறையே"(சிலம்பு. அரங்.26-29)

என்று சிலம்பு குறிப்பிடுகிறது. அவை முறையே பத்துப்பாடடில் உள்ள சிறுபாணாற்றுப்படை

"பொன்வாந்தன்ன புரி அடங்கு நரம்பின்,

இன்குரல் சீறியாழ் இடவயின் தழீஇ" (சிறுபாண். 34-35)

என்று சீறியாழைக் கொண்ட சிறுபாணனை ஆற்றுப் படுத்தியதாகவும் பெரும்பாணாற்றுப் படையில் தொண்டைமான் இளந்திரையனைச் சென்று கண்ட பாணனை

"இடனுடையப் பேரியாற் முறையுளிக் கழிப்பி" (பெரும்பாண். 482)

என்று பேரியாழையுடைய பெரும்பாணன் எனவும் சொல்லப்பட்டுள்ளது. யாழ்ப்பாணர்கள் யாழைத்தாம் வழிபடும் தெய்வமாகவே போற்றினர். யாழ்த்தெய்வமும் ஒன்றுண்டு என்பதையும் அதனை, மாதங்கி என்றழைப்பதாகவும் நச்சினார்க்கினியர் சீவகசிந்தாமணி உரையிலும் குறிப்பிட்டுள்ளார். யாழைப் பாணர்கள் தெய்வத்தன்மை உடையதாகக் கருதியதால் யாழ்ப்பாணர்கள் எங்குச் சென்றாலும் யாழைத் தம்கையிலேயே வைத்திருப்பது வழக்கமாகக் கொண்டிருந்தனர். இதனால் யாழைக் கைவழி என்றும் கேள்வி என்றும் குறித்தனர் இதனைப்,

"பொன் வாந்தன்ன புரியடங்கு நரம்பின்

தொடையமை கேள்வி" (பெரும்பாண். 15-16)

"ஈரேழ் தொடுத்த செய்முறைக் கேள்வி" (சிலம்பு. அரங். 70)

என்ற அடிகளின் மூலம் அறியலாம்.

#### 2.14.2.1 யாழ் மீது சூள் உரைத்தலும் பணயம் வைத்தலும்

பாணர்கள் யாழைத் தெய்வமாகக் கருதியதால் அந்த யாழின் மீது சூள் செய்தல் நம்புதற்குரிய செய்தியாகவும், புனிதமாகவும் கருதப்பட்டது. மருதக்கலியில் பரத்தையர் சேரிக்குச் சென்று வீடு திரும்பிய கணவனுடன் முரண்படும் தலைவி, 'உன் கணவன் தானே விரும்பிச் சென்றடையும் பரத்தையர் வீடு எதுவும் இல்லை இருந்தால் அதை உனக்கு மறையேன் என்று தன்யாழைத் தொட்டு அன்று சூளுரைத்த பாணன் இன்று வாரானோ?' எனத் தலைவனைப் பார்த்துத் தலைவி கேட்பதாக

"தேம் கமழ் கதுப்பினுள் அரும்பு அவிழ் நறு முல்லை

பாய்ந்து ஊதி, படர் தீர்ந்து, பண்டு தாம் மரீஇய

பூம் பொய்கை மறந்து, உள்ளாப் புனல் அணி நல் ஊர!

அணை மென் தோள் யாம் வாட, அமர் துணைப் புணர்ந்து நீ,

மண மனையாய் என வந்த மல்லலின் மாண்பு அன்றோ

பொதுக் கொண்ட கவ்வையின் பூ அணிப் பொலிந்த நின்

வதுவை அம் கமழ் நாற்றம் வைகறைப் பெற்றதை?

கனலும் நோய்த் தலையும், "நீ கனங் குழையவரொடு"(கலி.மரு. 6-13)

என்ற பாடல் தெரிவிக்கிறது. யாழ்ப்பாணர் தம் யாழைப் பணயமாக வைப்பதும் உண்டு. தலைவன் ஒருவனைக் கண்டு பொருள் பெற்றுவந்த பாணன் வழியிற் கண்ட பாணனை ஆற்றுப்படுத்தும் போது தலைவனின் நம்பிக்கைக்காகத் தன் யாழைப் பணயம் வைக்கின்றான். 'நேற்று சென்ற விருந்தினரை உபசரிக்கத் தன் பழைய வாளை அடகு வைத்தான். அவன் ஈயாதவன் என்று கருத வேண்டா. இன்று நீ செல்லினும் பூங்கொடி போன்ற இடையினையுடைய நின் விறலி ஒளிமிக்க அணிகலனை அணியும் வண்ணம் பொருள் பல ஈவான். இதற்கு என் கருங்கோட்டுச் சீறியாழ் பணயம்' என்றனன். இதனை,

"அவன் எம் இறைவன் யாம் அவன் பாணர்

நெருநை வந்த விருந்திற்கு மற்றுத் தன்

இரும் புடைப் பழ வாள் வைத்தனன் இன்று இக்

கருங் கோட்டுச் சீறியாழ் பணையம் இது கொண்டு

ஈவதிலாளன் என்னாது" (புறம். 316:5-10)

என்ற பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

### 2.14.3 மண்டைப்பாணர்

பண்டைக் காலத்தில் மண்டை எனும் பெயர் பறைக்கு வழங்கி வந்துள்ளது. எனவே, பறை கருவி வாசிப்போரையே மண்டைப்பாணர் என்று குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். அக்காத்தில் பறையானது மண்டையோடு போன்று காட்சியளித்ததால் அப்பெயர் வழங்கப்பட்டிருக்க வேண்டும். மேலும், முரம், பித்தளை முதலியவற்றால் வளையம் செய்து அதன் மேல் தோற்கட்டிய கருவியாகப் பறை காணப்பட்டது. "பிற்காலத்தில் மண், மரம், பித்தளை

முதலியவற்றால் செய்து தோற்கட்டிய பறைகளையும் பழைய பெயராலேயே மண்டை என்று வழங்கியது ஒருவகை உவமையொடு பெயராகும"[12] என்று இரா.இளங்குமரனும் "சங்க காலத்தில் 'மணப்பறை', 'பிணப்பறை', 'பறை சாற்றினான்' போன்ற வழக்குகள் இருந்ததைக் காணும் போது பறை என்பது பல்வேறு தோற்கருவிகளைக் குறித்து நிற்பதை அறியலாம். இப்பறைகளை அடிப்பவர் பறையர் எனப்பட்டனர். தொடக்கக் காலத்தில் தோற்கருவிகளுக்கு ஒரு பொதுப் பெயராகப் பறை வழங்கப்பெற்றது. அக்காலகட்டத்தில் ஏறக்குறைய எழுபது வகையான தோற்கருவிகள் இருந்துள்ளன என்று மு. வளர்மதியும் குறிப்பிடுகின்றார்."[13] இன்றும் தோற் கருவிகளுக்குப் பொதுப் பெயராகப் பறை வழக்கில் உள்ளது. எனவே, பறைகளை அடித்த பாணர்கள் 'மண்டைப் பாணர்கள்' எனப்பட்டனர். ஆனால், மண்டை என்னும் உண்கலம் உடையோரை மண்டைப்பாணர் என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றார். புறப்பாடல்களில் புலவர்களும் மண்டையைப் பயன்படுத்தியுள்ளனர். எனவே, நச்சினார்க்கினியரின் கூற்றுச் சற்று பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. இதே கருத்தை "மண்டை' என்னும் உண்கலம் உடைமையால் 'மண்டைப்பாணர்' எனப் பெயர் பெற்றனர் என்பது பொருத்தமாகப் படவில்லை. ஏனெனில் மண்டை என்னும் உண்கலத்தில் உண்டது ஒருசார் பாணர்கள் மட்டும் தான் என்பது பொருந்தாக் கூற்று புறப்பாடல்களில் புலவர்களும் மண்டையைப் பயன்படுத்தியுள்ளனர"[14] என்று வெ.வரதராசன் கூறுவது குறிப்பிடத்தக்கது.

"தெய்வம் உணாவே மாமரம் புள்பறை" (தொல். அகத். 20)

என்று தொல்காப்பியர் தோல் கருவிகளைக் கருப்பொருளாகக் கொள்ளுமிடத்து பறை என்னும் பொதுப்பெயரையேக் குறிப்பிட்டுள்ளார். மேலும், வள்ளுவரும் இதே கருத்தின் அடிப்படையில்

"அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசப்பிற்கு,
நல்ல படாஅ பறை" (குறள். 1115)

என்று தோற்கருவிகளுக்குப் பொதுப் பெயராகப் பறை விளங்கியதைச் சுட்டிக்காட்டியுள்ளார். பல்வேறு வகையான பறைகளையும் அடித்துக் கொண்டிருந்த பாணர்கள் சங்க காலக்கட்டத்தில் இசைக்கருவிகளுக்கேற்ற சமூகப் பிரிவுகளாகப் பிரிந்து, படிநிலையாலும் தரநிலையாலும் வேறுபட்டவர்களாகக் காணப்பட்டனர்.

### 2.14.4 இசைப்பாணர்கள்

சங்க காலத்தில் இசையானது வாயிசை, கருவியிசை என இருவகைப்படும். இவ்விரு இசைகளிலும் பாணர்கள் திறம்பெற்றுத் தேர்ந்த கலைஞர்களாய் இருந்துள்ளனர். வாயிசைப் பாணர்களை இசைப்பாணர் என்றழைத்தனர். இசைப்பாணர்களைக் குழற்பாணர் என்று சிலம்பு பகர்கிறது. இதனை,

"சிலம்பு பாடற்பாணர் என்றும" (சிலம்பு. அந்தி: 186)

"குரல்வாய்ப் பாணர் என்றும" (சிலம்பு: அந்தி: 200)

என்ற அடிகள் மூலம் அறியலாம். மேலும், சிலப்பதிகாரத்தில் வரும் 'பெரும்பாண் என்பதற்குக் குழலாமுதலோர்' என்று அரும்பத உரைக்காரர் குறிப்பிடுகிறார். பெரும்பாணர்கள் உயர்குடி மக்களுக்கும், இசை ஆர்வலர்களுக்கும் யாழிசை கற்பித்தனர். சிறுபாணர்களோ வேந்தர்கள், குறுநில மன்னர்கள், சீறூர் மன்னர்கள், நிலக்கிழார்கள், போன்றோர்களைப் போற்றிப் பாடிப் பரிசில் பெற்று வாழ்ந்தனர். இன்னும் சில பாணர்கள் சிற்றூர்களில் வாழ்ந்த பல குடும்பத்தாரோடு நெருக்கமான உறவுகொண்டு இருந்தனர். இப்பாணர்கள் புறநகர் பகுதிகளில் பாண்சேரி எனும் சிறு குடியிருப்புகளில் வாழ்ந்ததாக மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

#### 2.14.4.1 பாணர்களின் இசைக் கருவிகள்

சங்க இலக்கியங்களில் தடாரி, முழவு, பறை, துடி, ஆகுளி, எல்லரி, பதலை போன்ற தோற்கருவிகளும் குழல், கொம்பு, தூம்பு, நெடுவாக்கியம் போன்ற துளைக் கருவிகளும், சீறியாழ், பேரியாழ் போன்ற நரம்புக் கருவிகளும் பாணர் பண்பாட்டில் இருந்ததை,

"பிறை பிறந்தன்ன, பின்ஏந்து கவைக் கடை
நெடும் பணைத் திரள் தோள் மடந்தை முன்கைக்
குறுந்தொடி ஏய்க்கும், மெலிந்து வீங்கு திவவின்
..............................................
தொடை அமை கேள்வி இட வயின் தழீஇ,

வெந் தெறல் கனலியொடு மதி வலம் திரிதரும்

தண் கடல் வரைப்பில், தாங்குநர்ப் பெறாது,

“பொழி மழை துறந்த புகை வேய் குன்றத்துப”  (பெரும்பாண்.11-19)

“முல்லை சான்ற கற்பின் மெல் இயல்”  (சிறுபாண்.30).

என்ற அடிகளின் மூலம் அறியமுடிகிறது. பாணர்கள் கலப்பையெனும் பெரிய பையில் முழவு, ஆகளி, பாண்டில், உயிர்த்தூம்பு, குறும்பரந்தூம்பு, குழல், தட்டை, எல்லரி, பதலை (வடநாட்டில் இன்று தபேலா என்று வழங்கப்படுகிறது) போன்ற பலவகையான இசைக்கருவிகளைக் கட்டிக்தூக்கிச் சென்ற காட்சியானது வேரில் காய்த்துத் தொங்கும் பலாப்பழங்களைப் போல இருந்தது என்பதை,

“திரு மழை தலைஇய இருள் நிற விசும்பின்

விண் அதிர் இமிழ் இசை கடுப்ப, பண் அமைத்து,

திண் வார் விசித்த முழவொடு, ஆகுளி,

நுண் உருக்கு உற்ற விளங்கு அடர்ப் பாண்டில்,

மின் இரும் பீலி அணித் தழைக் கோட்டொடு,“  (மலைபடு. 1-5)

என்று மலைபடுகடாம் கூறுகிறது.

**2.14.5 பாடினி**

பாண் சமூகத்தில் பெண்டிர்கள் பாடினி, விறலி, பாட்டி, மதங்கி, பாடல் மகடூஉ, பாண்மகள் எனப் பலவாறு அழைக்கப்பெற்றனர். பாணர் கூட்டத்தில் பெண்கள் ‘பாடினி’ எனப்பட்டனர். பாணர்களைப் போல இவர்களும் பாடும் திறம் பெற்றிருந்தனர். மதுரைக் காஞ்சியில் ‘பாட்டியர்’ என்றும் பதிற்றுபத்தில் ‘பாடுமகள்’ என்றும் இவர்கள் கூறப்பட்டுள்ளனர். இதனை,

“பாணர் வருக! பாட்டியர் வருக!”  (மதுரை. 749)

“ஆடுநடை அண்ணனிற் பாடுமகள் காணியர”  (பதிற்.44)

என்ற அடிகளால் அறியலாம். “பாட்டியர், பாடமகள் என்போர் பாடினியே”[15] என்று கைலாசபதி கூறுவதாக அம்மன்கிளி முருகதாஸ் குறிப்பிட்டுள்ளார். சங்க

காலத்திலேயே விறலி என்பார்கள் பாடினி எனும் கலைஞர்களிடமிருந்து வேறுபட்டிருந்ததைக் காணமுடிகிறது. தொல்காப்பியர் கற்பியலில் பாடினி, விறலி இருவரும் தனித் தனியானவர்கள் எனக் கூறியுள்ளார். பாடினியர் விறலியரைவிட இனிய குரலெடுத்துப் பாடுவதில் வல்லவர்களாக இருந்துள்ளனர். விறலியர் பாடுவதோடு ஆடுவதிலும் திறன் பெற்றிருந்தனர். சமூகப் படிநிலையில் பாடினி, விறலி இருவரும் ஏற்றத் தாழ்வுகளைக் கொண்டிருந்தமையைச் சங்க இலக்கியங்களில் காண முடிகிறது.

### 2.14.6 பொருநர்

பாணர்களில் ஒரு பிரிவினராகிய பொருநர்களில் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் எனும் மூவகையினர் இருந்தனர். இவர்கள் பாடிய வீரயுகக் கவிதைகளில் அந்நாட்டு வயல்வெளிகளின் சிறப்பையும் அறுவடைத் திருநாள் சிறப்பையும் அறியமுடிகின்றது. பொருநர்கள் பிறவகைக் கலைஞர்களிடமிருந்து சற்று வேறுபட்டவர்களாக இருந்தனர். இவர்கள் அரசர்களோடும் தலைவர்களோடும் நெருக்கமான உறவுகொண்டிருந்தனர். போரிலும் அரண்மனையிலும் அரசர்களுடன் அருகில் இருந்தனர். மற்ற கலைஞர்களைவிட பொருநர்கள் குறைவாகவே வெளியிடங்களில் அலைந்து திரிந்துள்ளனர் என்பதை,

“கடல்படை அடல் கொண்டி,
மண்டுற்ற மலிர் நோன் தாள்,
தண் சோழ நாட்டுப் பொருநன்,
அலங்கு உளை அணி இவுளி
நலங்கிள்ளி நசைப் பொருநரேம்
பிறர்ப் பாடிப் பெறல் வேண்டேம்
அவற் பாடும், “அவன் தாள் வாழிய!“ என்” (புறம். 382:1-7).

என்றபாடலில் நான் வளமான சோழநாட்டுப் பொருநன். கடலில் பகைவரை வென்று அவர்கள் கலங்கிலிருந்து கொண்டுவந்த பொருள்கள் எங்களிடம் உள்ளன. தலையணி உடைய நல்ல குதிரைகளின் தலைவனாகிய நலங்கிள்ளியின் பொருநராவோம். நாங்கள் பிறரைப் பாடுவதில்லை. பிறரிடமிருந்து பரிசில்

பெறுவதில்லை. எங்கள் அரசனின் புகழை மட்டுமே நாங்கள் எப்போதும் பாடுவோம் என்று ஒரு பொருணன் கூறுவதாகப் புறப்பாடல் தெரிவிக்கிறது.

### 2.14.7 விறலியர்

விறலியர் ஆடுதல், பாடுதல், கிணை கொட்டுதல், தாளமிடல், வேடமிட்டு ஆடுதல், மெய்ப்பாடு தோன்ற நடித்தல், பாட்டியற்றிப் பாடுதல் போன்ற பலத்திறமைகளைக் கொண்டவர்களாகத் திழ்ந்துள்ளனர். சங்க காலத்திலேயே விறலி என்பார்கள் பாடினி எனும் கலைஞர்களிடமிருந்து வேறுபட்டிருந்ததைக் காணமுடிகிறது. தொல்காப்பியர் கற்பியலில் பாடினி, விறலி இருவரும் தனித் தனியானவர்கள் எனக் கூறியுள்ளார். விறலியர் பாடுவதோடு ஆடுவதிலும் திறன் பெற்றிருந்தனர். சமூகப் படிநிலையில் பாடினி, விறலி இருவரும் ஏற்றத் தாழ்வுகளைக் கொண்டிருந்தமை சங்க இலக்கியங்களில் காண முடிகிறது. விறலியர் 'பாண்மகள்' என்றும் அழைக்கப்பட்டனர்.

"செல்லா மோதில் பாண்மகள" (பதிற். 60)

என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. விறலியர் முழவு, யாழ், தூம்பு, எல்லரி, ஆகுளி, பதலை முதலான அனைத்து இசைக் கருவிகளையும் இசைக்க வல்ல ஆற்றல் படைத்தவர்கள் என்பதை

"வேழம் வீழ்த்த விழுத் தொடைப் பகழி

பேழ் வாய் உழுவையைப் பெரும்பிறிது உறீஇ,

..........................................

சாரல் அருவிப் பய மலைக் கிழவன்,

ஓரி கொலோ? அல்லன்கொல்லோ?

பாடுவல், விறலி!" (புறம். 152:4-11)

என்ற புறப்பாடல் மூலம் அறியலாம். கூத்தர், பொருநர் ஆகியோரின் பெண்பால் மக்களே விறவியர் எனப்பட்டனர். தடாரிப் பறை, முழவு ஆகியவற்றின் இசைக்கேற்ப விறலியர் ஆடியதையும் கதை தழுவிய 'நாடகம்' ஆடுவதிலும் விறலியர் வல்லவர்களாக இருந்ததையும்

"புகழா வாகைப் பூவின் அன்ன

வளை மருப்பு ஏனம் வரவு பார்த்திருக்கும்" (பெரும்பாண்.109-110)

"நாடகமகளிர் ஆடுகளத்து எடுத்த

விசிவீங்கு இன்னியங் கடுப்பக் கயிறுபிணித்து" (பெரும்பாண்.55-56)

எனும் பெரும்பாணாற்றுப்படை அடிகள் வழி அறிகிறோம். விறலியர் நல்ல நடன மங்கையராகவும் இசை இலக்கணத்துடன் பாடும் திறனையும், அதற்கிணங்க ஆடும் திறனையும் பெற்றவர்கள் என்பதை

"ஆடுக விறலியர் பாடுக பரிசிலர" (பதிற். 58)

"ஒருதிறம் பாடல் நல் விறலியர் ஒல்குடி நுடங்க" (பரி. 17)

எனும் பாடல் அடிகளின் மூலம் தெளியலாம். எல்லாவற்றுக்கும் மேலாக இவ்விறலியர் பிழையறப் பாடவும் ஆடவும் வல்லவர்களாய் இருந்த அதே நேரத்தில் யாழ் இசைப்பதிலும் திறன் படைத்தவர்களாய் இருந்தனர் என்பதை

"சுகிர் நரம்பின் சீறியாழ் பண்ணி

விரையொலி கூந்தல்நும் விறலியர" (புறம். 109)

என்ற புறநானூறு பாடலடிகள் காட்டுகின்றன. மேலும் போரில் மன்னன் வெற்றி பெற்று வீதி உலா வருகையில் அவனது தேரின் பின்பு விறலியர் குரவைக் கூத்தாடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதை

"வஞ்சமில் கோலானை வாழ்த்தி வயவரும்

அஞ்சொல் விறலியரு மாடுபவே வெஞ்சமரில்

குன்றேர் மழகளிறுங் கூந்தற் பிடியும்போற்

பின்றேர்க் குரவை பிணைந்து." (புற.வெண்.162)

என்ற புறப்பொருள் வெண்பாமாலை குறிப்பிடுகிறது.

### 2.14.8 இளையர்

பாணர் குழுவில் விறலியரக்கு உதவியாக இருந்தவர்கள் ‘இளையர்’ எனப்பட்டனர். இவர்கள் ஆடல் தொழிலைக் கற்று முடிக்காததால் ‘கல்லா இளையர்’ எனப்பட்டனர்.

“மடமா னோக்கின் வாணுதல் விறலியர்

நடைமெலிந்த தரையே நன்மென் சீறடி

கல்லா இளையர் மெல்லத் தைவர” (சிறுபாண்.31-33)

மேற்கூறிய கல்லா இளையர் கலைகளில் தேர்ச்சி பெற்றவுடன் நாடகத்தின் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்துப் பாடும் பணியைச் செய்வார்கள். அத்தகு தகுதி நிலையானது ‘கைவல் இளையர்’ எனப்பட்டது. இதற்குக்

“கைவல் இளையர் கடவுள் பழிச்ச” (பதிற். 41)

எனும் பதிற்றுப்பத்து அடி சான்று பகர்கிறது.

### 2.14.9 கூத்தர்

கூத்து ஆடிய கலைஞர் கூத்தர் எனப்பட்டனர். தொல்காப்பியர் கூறும் நால்வகை இசைக் கலைஞர்களில் கூத்தரும் ஒருவர். இவர்கள் பாடுவதோடு ஆடவும் செய்தனர். சங்க காலத்தில் கலைஞர்கள் பலரும் பல்வேறு இசைக்கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். யாழ், முழவு, ஒருகண் கிணை, பெருவெங்கியம், குழல், மத்தளம், சல்லிகை, கரடிகை உள்ளிட்ட பல கருவிகள் கூத்தர்களின் பைகளில் கட்டப்பட்டிருந்தன. இவற்றில் முழவு என்னும் கருவியையே பெரிதும் பயன்படுத்தினர். பெரும்பான்மையான கலைஞர்களைப் போலவே கூத்தர்களும் புதிய புரவலர்களையும் அவையோர்களையும் நாடித் திரிந்துள்ளனர். கடையெழு வள்ளல்களான பேகன், காரி, பாரி, ஆய், அதிகன், நள்ளி, ஓரி ஆகியோர் அவர்களை ஆதரித்துள்ள செய்திகள் சிறுபாணாற்றுப்படையில் இடம்பெற்றுள்ளன.

"துளி மழை பொழியும் வளி துஞ்சு நெடுங் கோட்டு

நளி மலை நாடன், நள்ளியும் நளி சினை

நறும் போது கஞலிய நாகு முதிர் நாகத்துக்" (சிறுபாண்.107-109)

என்ற பாடல் அடிகள் மூலம் இதனை அறியலாம். கூத்தர்கள் சிற்றூர்களில் பொது இடமாகிய 'மன்று' அல்லது 'மன்றம்' எனும் ஆடுகளத்தில் ஆடிப்பாடி ஊர் மக்களை மகிழ்வித்துள்ளனர். கூத்தர்களில் சிலர் கயிற்று நடனம் நிகழ்த்தியதை

"சாறு கொள் ஆங்கண் விழவுக் களம் நந்தி,

அரிக் கூட்டு இன் இயம் கறங்க, ஆடு மகள்

கயிறு ஊர் பாணியின் தளரும் சாரல்,

வரைஅர மகளிரின் சாஅய், விழைதக," (குறிஞ். 192)

"கழை பாடு இரங்க, பல் இயம் கறங்க,

ஆடு மகள் நடந்த கொடும் புரி நோன் கயிற்று," (நற். 95: 1-2).

என்ற பாடல் அடிகள் வாயிலாக அறியமுடிகிறது. கூத்தர்கள் பெருஞ்சுற்றத்துடன் குழுக்குழுவாகச் சென்று கிராமங்களில் திருவிழாக்கள், விளையாட்டுக்கள், படைவீரர்களின் பாசறைகள் ஆகியவற்றில் பங்கேற்றனர். நாட்டுப்புறக் கூத்து, சடங்குசார் கூத்து, தெய்வக் கூத்து, போர்க் கூத்து எனப் பலநிலைகளில் இவர்கள் கூத்துக்களை நிகழ்த்தியுள்ளனர். மக்களின் வாழ்வியலோடு இவர்களின் கூத்து மிகவும் நெருக்கமாகப் பிணைந்திருந்தது. சமயஞ்சார்ந்த பொம்மலாட்டமும் கூத்தர்களால் நிகழ்த்தப்பட்டதைப்

"வல்லோன் தைஇய வரி வனப்பு உற்ற

அல்லிப் பாவை ஆடு வனப்பு ஏய்ப்ப," (புறம். 33:3-4)

என்று புறநானூறு கூறுகிறது. கூத்தர்கள் சங்ககால மக்களின் அக வாழ்விலும், சமூக வாழ்விலும், நாட்டு வாழ்விலும், சமய வாழ்விலும், புற வாழ்விலும் இன்றியமையாத இடம்பெற்றிருந்தனர். கூத்தர்கள் தங்கிய இடங்கள் அம்பலங்கள் என்று அழைக்கப்பட்டன. இவர்கள் ஓரிடத்தில் தங்கிவிட்டுப் புதிய இடத்துக்குக்

கிளம்பும்போது தம்முடைய இனத்தார் பின்பற்றி வருவதற்காகத் தாம் செல்லும் வழிகளில், சந்திகளில் ஊகம் புல்லை முடித்து வைத்தனர் என்பதை,

"பண்டு நற்கு அறியாப் புலம் பெயர் புதுவிர்

சந்து நீவிப் புல் முடிந்து இடுமின்" (மலைபடு. 392-393).

மலைபடுகடாம் தெரிவிக்கிறது.

### 2.14.9.1 கூத்தரும் பல்வகைக் கூத்தும்

கூத்தர்கள் பண்டைக் காலத்தில் கோடியர், வயிரியர், கண்ணுளர் என்னும் பெயர்களால் சுட்டப்பட்டுள்ளனர். இதனை,

"இரும்பேர் ஒக்கல் கோடியர" (அகம்: 301)

"..............கோடியர்

விழவுகொள் மூதூர்விறலி பின்றை

முழவன் போல" (அகம். 352:5-7)

"விரியுளை மாவும் களிறும் தேரும்

வயிரியர் கண்ணுளர்க் கோம்பாது வீசி" (பதிற். 18:6-7)

"கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ" (மலைபடு. 50)

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம். 'கண்ணுளர்' என்பாரைச் 'சாந்திக் கூத்தர்' எனச் சிலப்பதிகார அரும்பதவுரைகாரரும், 'மதங்கர்' என்பாரும் உளர் என அடியாாக்கு நல்லாரும் கூறியுள்ளனர். கூத்தர்கள் சங்க காலத்தில் காந்தள், கருங்கூத்து, வள்ளிக் கூத்து, கழனிலைக் கூத்து, பிள்ளையாட்டு, குரவைக் கூத்து, துணைங்கைக் கூத்து போன்ற கூத்து வகைகளை நிகழ்த்தியுள்ளனர்.

### 2.14.10 கோடியர்

வளைந்த ஊது கொம்பு போன்று அமைந்த இசைக்கருவியைக் கோடு என்று அழைப்பர். அத்தகைய இசைக்கருவியை இசைத்து ஆடிய கலைஞர் கோடியர் எனப்பட்டனர். "கோடி என்பது 'கோல்' என்ற பொருளைத் தரும். சங்க காலத்தில் கோடியர்கள் முதுவாய்க் கோடியர், சுமம்செல் கோடியர், கடும்பறைக்

கோடியர், பல்இயக் கோடியர் என அழைக்கப் பெற்றனர். கோடியர்களின் பங்குபணிகள் வேறுபட்டதாலேயே இவ்வாறு அழைக்கப்பெற்றனர். எனினும், கோடியர் நாடகக்காரர்கள்"[16] என்று சிவத்தம்பி குறிப்பிடுகிறார். சங்க காலத்தில் யாழ்த் தண்டு, ஊது கொம்பு ஆகியவற்றை கோடு என்ற பெயரால் அழைத்தனர். கோடு என்ற இசைக் கருவி இக்காலத்தில் வழக்கிலிருக்கும் நாதஸ்வரம் போல நீண்ட மரத்தாலான குழல் கருவியையும் வாயில் வைத்து ஊதி இசைக்கும் தூம்பு என்ற இசைக்கருவியையும் ஒத்திருக்கும். கோடியர்கள் விழாக்களின் போது கொம்பை ஊதுவார்கள். முருக வழிபாட்டின்போது எண்ணற்ற கொம்புகள் ஊதப்பட்டதைத் திருமுருகாற்றுப்படை கூறுகின்றது. வேலன் குழலை ஊதிக் கொம்பை இசைப்பதும் திருமுருகாற்றுப்படை வழி அறியமுடிகிறது. கோடியர்கள் ஆடுவதிலும் இசைப்பதிலும் வல்லவர்கள். மூதூர்களிலும் சிற்றூர்களிலும் நிகழும் விழாக்களின்போது விறலியர் முழவினை இசைக்கக் கோடியர் கூத்தாடுவர் என்பதை

"ஆடுமயில் முன்னது ஆக கோடியர்
விழவுகொள் மூதூர் விறலி பின்றை
முழவன் போல அகப்படத் தழீஇ" (அகம். 352:6-9)

"ஆடுகளம் சிலம்பப் பாடிப் பலவுடன்
கோடுவாய் வைத்துக் கொடுமணி இயக்கி" (திருமுருகு.245-246)

"கோடுவாய் வைம்மின் கொடுமணி இயக்குமின" (சிலம்பு.வேட்டு. 24)

"விழவு வீற்றிருந்த வியலுள் ஆங்கண்
கோடியர் முழவின் முன்னர் ஆடல" (பதிற். 56:8-9)

எனும் பாடலடிகள் மூலம் அறியலாம். கோடியர் யாழ், முழவு, பறை முதலான இசைக்கருவிகளைச் சிறப்பாக இசைப்பதிலும் ஆடுகளம் அமைத்துச் சிறப்பாக ஆடுவதிலும் வல்லவராக இருந்துள்ளனர். அரசனை வாழ்த்திப் பாடி பல ஊர்களைப் பரிசுகளாகப் பெற்றுள்ளனர். இதனை,

"முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த" (பட்டின. 253)

"சுரம் செல் கோடியர் முழவின் தூங்கி" (மலைபடு. 143)

“கடும்பறைக் கோடியர் மகாஅர் அன்ன” (மலைபடு. 236)

“பல்இயக் கோடியர் புரவலன் பேர் இசை” (சிறுபாண். 125)

“கொடும் பறைக் கோடியர் கடும்பு உடன் வாழ்த்தும” (மதுரை. 523)

“நறும் போது கஞலிய நாகுமுதில் நாகத்து
குறும்பொறை நல்நாடு கோடியர்க்கு” (சிறுபாண். 109-110)

என்ற அடிகள் பகர்கின்றன. மேலும், கோடியர்களின் கலையில் நெடுவங்கியம் போன்று மிக நீண்டிருந்த தூம்பும் ஓர் இன்றியமையாத இசைக் கருவியாக இருந்துள்ளது.

### 2.14.11 வயிரியர்

கோடு போலவே ஊதி இசைக்கும் ஒரு குழல் கருவியே ‘வயிர்’ எனப்பட்டது. இது மூங்கில், பிரம்புகளைக் கொண்டுச் செய்யப்பட்ட ஊதுகொம்பு ஆகும். இக்கருவியினை இசைத்தவர்கள் வயிரியர் ஆவர். இதன் இசை மயிலின் அகவல் ஓசை போல ஒலிக்கும் என்பதை,

“கலிமயில் அகவும் வயிர்மருள் இன்னிசை” (நெடுநல். 99)

என்று நெடுநல்வாடை குறிப்பிடுகிறது. இவர்கள் பாணர்களோடு இணைந்தே இக்கருவியை இசைத்துள்ளனர் என்பதை

“பாணர் வருக பாட்டியர் வருக
யாணர்ப் புலவரொடு வயிரியர் வருக” (மதுரை. 749-50)

என்று மதுரைக்காஞ்சி கூறுகிறது. வயிரியர் பண்ணமைந்த பாடலைப் பாடுவதிலும் முழவினை இசைப்பதிலும் வல்லவர்களாக இருந்துள்ளனர். என்பதை

“பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணமை முழவின் வயிரியர” (புறம். 164:6-7)

எனப் புறநானூற்று வழி அறிகிறோம். முருகனை வாழ்த்திப் பாடும் இசைக்கருவியை இவர்கள் பயன்படுத்தினார்கள் என்பதைத் திருமுருகாற்றுப்படையில் வரும்

"திண்காழ் வயிர் எழுந்து இசைப்ப" (திருமுருகு.120)

எனும் அடி கூறுகிறது. வெற்றி முழக்கத்தையும், மங்கள நிகழ்வையும் கூறுபவர்களாக வயிரியர்கள் விளங்கினார்கள். மன்னன் நிகழ்த்தும் போரில் போர் வீரர்கள் மன எழுச்சி கொள்ளவும், போர் குண வெறியைத் தூண்டவும் வயிரியர் கொம்பு, முழவு என்னும் வாத்தியங்களை இசைத்தார்கள். வயிரியர் பாணர்களோடும், பாடினிகளோடும், கண்ணுளரோடும், பொருநரோடும் வெவ்வேறு சூழல்களில் இணைந்து இயங்கினர் என்று சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

### 2.1412 கண்ணுளர்

கண்ணுளர் என்பார் இசையோடு கூத்து நிகழ்த்துபவர்கள். கதை கூறும் நாடகக் கலைஞர்களான கூத்தரைச் சங்ககாலத்தில் 'கண்ணுளர்' என்றே அழைத்தனர். கண்ணுளர் குழுவானது கதை தழுவிக் கூத்து நிகழ்த்திய முறையினை மலைபடுகடாம்

"வானத்து அன்ன வளம் மலி யானை,

தாது எருத் ததைந்த, முற்றம் முன்னி,

மழை எதிர் படு கண் முழவு கண் இகுப்ப,

கழை வளர் தூம்பின் கண் இடம் இமிர,

..............................................................................

இடைத் தெரிந்து உணரும், பெரியோர் மாய்ந்தென,

கொடைக்கடன் இறுத்த செம்மலோய்" என,

வென்றிப் பல் புகழ் விறலோடு ஏத்தி," (மலைபடு. 530-544)

என மிக விளக்கமாகக் கூறுகின்றது. இவர்கள் நடனம், ஆடல் இரண்டிலும் வல்லவர்களாகத் திகழ்ந்துள்ளனர். தொல்பழங்காலச் சடங்கு நடனமாகச் சாந்திக் கூத்தைக் கண்ணுளர் நிகழ்த்தினர். இவர்கள் ஆடும் சாந்திக் கூத்தினை வரிச்சாந்துக் கூத்து என்றும், வினோதக் கூத்து என்றும் இரண்டாகப்பகுப்பர். இவர்கள் சிற்றூர்களுக்குச் சென்று இருபுறமும் வீடுகள் அமைந்த தெருக்களில் பாடியுள்ளனர். மன்னர்கள், வள்ளல்கள் ஆகியோரிடம் நெருங்கிப் பரிசில் பெற்றுள்ளதை,

"வயிரியர், கண்ணுளர்க்கு ஓம்பாது வீசி,

கடி மிளை, குண்டு கிடங்கின்," (பதிற். 20: 15-16)

"கலம் பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ!" (மலைபடு. 50).

என்ற பாடல்அடிகள் சான்று பகர்கின்றன.

**2.14.13 இயவர்**

போர்க்களத்திற்குச் செல்லும் முன்னர் முரசிற்கு வழிபாடு செய்யும் முறைமையை இயவர்கள் செய்தனர். இயவர்கள் போர்க்களத்தில் ஆம்பல் பண்கொண்டு குழலில் இசைப்பார்கள் என்பதை,

"இம்மென் பெருங் களத்து இயவர் ஊதும்

ஆம்பல்அம் குழலின் ஏங்கி," (நற். 113).

என்ற அடியும் அவ்வாறே பகைவரை வென்று கொண்டுவரும் முரசிற்குக் குருதிப் பலி கொடுத்து முதலாவதாக இசைக்கும் தகுதியையும் இயவர்கள் கொண்டிருந்தனர் என்பதை,

"மண்ணுறு முரசம் கண் பெயர்த்து, இயவர்,

கடிப்புடை வலத்தர், தொடித் தோள் ஓச்ச," (பதிற். 19).

என்ற அடியும் கூறுகின்றன. மேலும், மன்னருக்கு அருகிலிருந்து இசைக் கருவிகளை இசைக்கும் தகுதியைப் பெற்றவர்களாகவும் இருந்துள்ளனர். இயவர்களின் இசை யானைகள் மூங்கிலை உடைத்துச் செல்லும் ஒலியைப் போல இருந்தது என்பதை,

"நிழத்த யானை மேய் புலம் படர,

கலித்த இயவர் இயம் தொட்டன்ன," (மதுரை. 303-304)

என்ற மதுரைக்காஞ்சி அடிகள் குறிப்பிடுகின்றன. ஆகவே இயவர்கள் பல்வேறு இசைக் கருவிகள் இசைக்கும் திறனையும், முரசுக்குப் பலியிடவும், முரசு அடிக்கவும், அரசனுக்கருகில் நின்று இசைக்கவும், போர்க்களங்களில் இசைக்கவும் உரிமை பெற்றவர்களாகவும் விளங்கியுள்ளனர்.

### 2.14.14 கிணைவர்

கிணைப்பறையை இசைப்பவர்கள் கிணைவர்கள் என்றழைக்கப்பட்டனர். இவர்கள் கிணையர், கிணைமகள், கிணைவன் என்று சங்க இலக்கியங்களில் குறிக்கப்பட்டுள்ளனர். வள்ளல்களைப் பாடித் துயில் எழுப்பவும், போர் வீரர்களுக்கு ஊக்கமூட்டவும் இவர்கள் கிணைப்பறை அடித்தனர். மலைநிலத்தில் யானையை விரட்டக் கிணையர்கள் பறையினை முழங்கியுள்ளனர் என்பதை,

"கணையர், கிணையர், கை புனை கவணர்,

விளியர், புறக்குடி ஆர்க்கும் நாட!" (நற். 108).

என்று நற்றிணை கூறுகிறது.

### 2.14.15 துடியன்

போரின் தொடக்கத்தைத் தெரிவிப்பதற்குத் துடி என்னும் கருவியை இசைப்பவன் துடியன் என்றழைக்கப்பட்டான். துடியன் போர்க்களத்தில் துடியினை இசைத்து வீரர்களுக்கு வீர உணர்வு ஏற்றுபவன். துடியன், பாணன், விறலி எனப் பாண் மக்கள் ஒன்று சேர்ந்து வள்ளல்களைக் கண்டு பரிசில் பெற்றுள்ளனர். துடியன்கள் போர்க்களத்தில் மன்னனின் மார்பில் துளைத்த வேல் துடியனின் கையிலிருந்தது என்று புறநானூறு சுட்டுகிறது. இதிலிருந்து துடியர்கள் பெரிதும் போர்க்களத்தோடும் அரசர்களோடும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார்கள் என்பதை,

"துடியன் கையது வேலே" (புறம். 285: 2)

"உவலைக் கண்ணித் துடியன் வந்தென" (புறம். 269:6)

"சிறாஅ அவர் துடியர் பாடுவல் மகாஅ அர" (புறம். 269:1)

மேற்கண்ட புறப்பாடல் மூலம் அறியலாம். முல்லை நிலத்துச் சிறப்பைப் பாடும் மாங்குடி கிழார்,

"துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று

இந்நான் கல்லது குடியும் இல்லை" (புறம். 335: 7-8)

என்று துடியன், பாணன், பறையன், கடம்பன் எனும் நான்கு தொல்குடிகளைச் சுட்டிக் காட்டுகின்றார். அதில் துடியனை முதலிடத்தில் வைத்துப் பேசுகின்றார். துடியன்கள் தொல்குடிகளில் ஒருவர் என்றும், மன்னர்களின் நேரடி ஆதரவைப் பெற்றவர்கள் என்றும் இதன் மூலம் அறிய முடிகிறது.

### 2.14.16 கட்டுவிச்சி

கட்டுப் பார்த்தல் என்பது தொடக்கக் காலத்தில் அகத்துறைக்குரியதாக இருந்தது. இக்காலத்தில் புறத்துறைக்குரியதாக மாறிவிட்டது. கட்டுப் பார்த்தல் தொழிலைக் கட்டுவிச்சியே அக்காலத்தில் மேற்கொண்டுள்ளனர். பண்டைக் காலத்தில், நற்றாய், தலைவியினுடைய காம நோயைத் தீர்க்கவும் தலைவியின் வேறுபாட்டை ஆராயும் பொருட்டும் கட்டுவிச்சியை அழைத்துக் கட்டுப் பார்ப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். கட்டுப் பார்க்கும் வழக்கத்தினைத் தொல்காப்பியம்,

> "அவள் விலங்குறினும் களம் பெறக் காட்டினும்
> பிறன் வரைவு ஆயினும் அவன் வரைவு மறுப்பினும்
> முன்னிலை அறன் எனப்படுதல் என்று இரு வகைப்
> புரை தீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்" (தொல்.களவி. 24)

என்று கூறுகிறது. அதாவது "கட்டுவிச்சியும் வேலனும் தாம் பார்த்த கட்டினாலுங் கழங்கினாலும் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்யாக்கால் இம்மையல் தீராதென்று கூறுதலின் அவ்விருவரும் தம்மின் ஒத்த திறம் பற்றியதனையே செய்யும் செய்தியிடத்தும"[17] என நச்சினார்க்கினியர் உரை வகுத்துள்ளார். கட்டுவிச்சியர் நெல் பரப்பிக் குறிசொல்வார்கள். இம்முறைப்படி கட்டுவிச்சி முறத்தில் நெல்லை இட்டு அதனை எண்ணுவர். எண்ணுமுன் தெய்வங்களை அழைத்துப்பாடுவர். பின் அந்நெல்லை இரட்டை இரட்டையாக எண்ணும்போது ஒற்றைப்படையாக வந்தால் நலம் உண்டாகும் என்று அவர்கள் நம்பினர்.

### 2.14.17 அகவன் மகள்

கட்டுவிச்சியைப் போன்று அகவன் மகளும் குறி பார்க்கும் செயலில் ஈடுபட்டு வந்துள்ளனர். இதனை, தெய்வங்களை அழைத்துப் பாடும் கட்டுவிச்சியே சங்கின் மணிகளால் ஆன மாலையைப் போன்ற வெண்மையான கூந்தலையுடைய அகவன் மகளே! பாட்டுக்களைப் பாடுவாயாக. அவருடைய நல்ல நெடிய

குன்றத்தைப் புகழ்ந்து பாடும் பாட்டை மீண்டும் பாடுவாயாக என்று குறுந்தொகை குறிப்பிடுகிறது. இதனை,

“அகவன்மகளே! அகவன்மகளே!

மனவுக் கோப்பு அன்ன நல் நெடுந் கூந்தல்

அகவன்மகளே! பாடுக பாட்டே

இன்னும், பாடுக, பாட்டே-அவர்

நல் நெடுங் குன்றம் பாடிய பாட்டே” (குறுந். 23)

என்ற அடிகள் மூலம் அறியலாம். இப்பாடல் அகவன் மகளைக் கொண்டு குறிபார்ப்பதைக் கூறுகிறது. இன்று குற்றாலம் தொடங்கித் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் வாழும் குறி கூறும் மலைக்குறவர், அகவன் மகளிரின் வழிவந்தவர்கள் ஆவர். அகவன் மகளிர் பாட்டுப்பாடும் முது மகளிராக இருந்துள்ளனர்.

### 2.14.18 அகவர்

அகவர்கள் மன்னர்களின் போர்த்திறம், படைபலம், வீரம், புகழ், ஆட்சித்திறம் முதலானவற்றைப் புகழ்ந்து பாடிப் பரிசில் பெறும் பாண் சமூகத்தைச் சார்ந்தவர் ஆவர். மேலும், இவர்கள் விடியற்காலையில் அரண்மனை வாயிலில் நின்று துயிலெழுப்பும் பணியினையும் செய்துள்ளனர். இச்செய்தியை மதுரைக் காஞ்சியின்

“மறம் கலங்கத் தலைச் சென்று,

வாள் உழந்து, அதன் தாள் வாழ்த்தி,

நாள் ஈண்டிய நல் அகவர்க்குத்

தேரோடு மா சிதறி,” (மது.காஞ்சி. 221-24)

எனும் அடிகள் மூலம் அறியலாம். அகவர்கள் முல்லை நிலத்து உழவர்களாவும் சங்கப் பாடல்களில் காட்சிப்படுத்தப்பட்டுள்ளனர். இதைப் பொருநராற்றுப்படை

“கானவர் மருதம் பாட அகவர்

நீள்நிற முல்லைப் பல்திணை நுவல” (பொருந. 220-21)

எனும் அடிகள் கூறுகின்றன.

### 2.14.19 அகவுநர்

அகவுநர் பண் பாடுவதோடு இசைக்கருவிகளையும் இசைக்கக் கூடியவர்கள். இவர்கள் கிணை, பறை, குழல், முழவு, யாழ் போன்ற இசைக்கருவிகளை இசைத்துள்ளனர். இச்செய்திகளை

“விசிபிணித்து யாத்த அரிகோல், தெண்கிணை

இன்குரல் அகவுநர் இரப்பின” (அகம். 249: 3-4)

“பகர்குழல் பாண்டில் இயம்ப அகவுநர்

நா நவில் பாடல் முழவு எதிர்த்தன்ன” (பரி. 15: 42-43)

எனும் பாடலடிகள் சுட்டுகின்றன. பாடும் திறம் கொண்ட அகவுநர் மன்னர்களைப் புகழ்ந்து பாடி யானைகளைப் பரிசாகப் பெறும் தகுதியுடையவர்கள் என்பதை,

“நுண்கோல் அகவுநர் வேண்டின் வெண்கோட்டு

அண்ணல் யானை ஈயும் வண் மகிழ” (அகம். 208:6-7)

எனும் அடிகள் விளக்குகின்றன. அகவுநர் என்போர் கையில் நுண் கோல் கொண்டு குறிசொல்பவர்களாகவும் வள்ளல்கள், நிலக்கிழார்கள் முன் நல்வாழ்த்துப் பாடி ஆடுகின்ற கலைஞராகவும் இருந்துள்ளனர். இதனை,

“நுண்கோல் அகவுநர்ப் புரந்த பேரிசை” (அகம். 152)

என்பதன் மூலம் அறிகிறோம். மேலும், அகவுநர்க்கு நுண்கோல் முக்கியமான கருவியாக இருந்துள்ளது. அகவன் மகளிர் நுண்கோல் கொண்டு குறிசொல்வார்கள்.

### 2.14.19.1 வரிக் கூத்து

பாண் குடியைச் சேர்ந்த அகவுநர், அகவர், அகவன்மகள் பாடும் தொழிலைச் செய்து வந்தாலும், அகவன்மகள் என்னும் கட்டுவிச்சியும், வெறி அயரும் வேலனும் வரிக் கூத்தினை நிகழ்த்தியுள்ளனர். இதனை,

"சொல்லாற்றுக் கவலைப் பல்லியங் கறங்க" (குறுந். 263)

எனவும்

"கூடுகொள் இன்னியம் கறங்க களன்இழைத்து

ஆடு அணி அயர்ந்த அகன்பெரும் பந்தர் " (அகம். 98)

எனவும் வந்துள்ள அடிகள் மூலம் வேலன் வெறி அயருங்கால் இசைக் கருவிகளை இசைத்து ஆடிய வழக்கத்தை அறிகிறோம்.

### 2.14.19.2 வருவதுரைப்போர்

சங்ககாலத்தில் வேலன். அகவுநர், அகவலன், கட்டுவிச்சி, அகவன் மகளிர், முதுவாய்ப் பாணன் போன்றோர் பல்வேறு இடங்களுக்குச் சென்று வருவதுரைத்துள்ளனர். வேலன் வெறியாட்டு மூலம் தம் மக்களுக்கு ஏற்பட்ட நோயை அறிந்துகொண்டனர் மேலும், விரிச்சி, கட்டு, கழங்கு, கன்னம், குறிசொல்லுதல் போன்ற நிகழ்வுகளைச் செய்வதற்காகத் தொல்குடியினர் பல்வேறு இடங்களுக்கும் சென்று வந்துள்ளனர். இவர்கள் தெருக்கள் தோறும் சென்று கட்டுப்பார்த்த செய்தியை அறியமுடிகின்றது. இசையோடு பாடும் மகளாகிய அகவன் மகளும், அகவிப்பாடும் ஆண் மகனாகிய அகவலனும் சங்ககாலத்தில் பல ஊர்களுக்கும் சென்று சடங்கியல் சார்ந்த குறிசொல்லிகளாக வாழ்ந்துள்ளனர். கண்டிரக்கோல் கொண்டு களம் வாழ்த்தும் அகவலனும் இசையோடு பாடும் அகவன் மகளும் வருவதுரைக்கும் தொழிலில் பெயர்பெற்றிருந்தனர். குறிஞ்சித் திணையில் விரிச்சி கேட்டல், நற்சொல் கேட்டல் இரண்டும் நன்நிமித்தமாகக் கருதப்பட்டன. வேலன் தெய்வமேறி ஆடும்போது கூறிய வாய்ச்சொல் விரிச்சியாக, நற்சொல்லாக அமைந்தது. ஊரின் புறத்தே சென்று நெல்லையும் நீரையும் மலரையும் தூவித் தெய்வத்தை வணங்கிப் பெருமுது பெண்டிர் நற்சொல் நிமித்தம் கூறினர் என்பதை

"துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கும்

அஞ்சுவரு குராஅல் குரலும் தூற்றும்

...........................................................................

என் ஆகுவிர்கொல்? அளியிர் நுமக்கும்" (புறம். 280:3-9)

"அருங் கடி மூதூர் மருங்கில் போகி,

யாழ் இசை இன வண்டு ஆர்ப்ப, நெல்லொடு,

..................................................................

கொடுங் கோற் கோவலர் பின் நின்று உய்த்தர,

இன்னே வருகுவர், தாயர்" என்போள்

நன்னர் நல் மொழி கேட்டனம்: அதனால்,

நல்ல, நல்லோர் வாய்ப்புள் தெவ்வர்" (முல்லை. 7-18)

"பெரும்பாண் காவல் பூண்டென, ஒரு சார்,

திருந்துஇழை மகளிர் விரிச்சி நிற்ப,

வெறி உற விரிந்த அறுவை மெல் அணைப்

புனிறு நாறு செவிலியொடு புதல்வன் துஞ்ச," (நற். 40).

என்ற பாடல் அடிகள் காட்டுகின்றன. தன் மகளின் மேனி ஏன் வேறுபாடு கண்டது என ஏங்கிய தாய் வேலன், கட்டுவிச்சியை (பெண் பூசாரி) அழைத்து கட்டும், கழங்கும் வைத்துக் குறிகேட்டு அதன் பின்னர் வெறியாட்டம் நிகழ்த்தியதைத் தொல்காப்பியம்

"களனும் பொழுதும் வரை நிலை விலக்கி,

காதல் மிகுதி உளப்படப் பிறவும்" (தொல். களவு. 24).

என்ற நூற்பாவில் குறிப்பிடுகிறது. வேலனை (ஆண் பூசாரி) அழைத்து முற்றத்தில் புதுமணல் பரப்பி வெறிக்களம் அமைத்துக் கழங்குக் குறிபார்ப்பது சங்ககால வழக்கமாக இருந்தது. கழற்காய்களை முருகன் முன்வைத்து அள்ளியெடுத்துக் கூறும் ஒருவகை குறிசொல்லுதலே கழங்காகும். இவ்வாறாகச் சங்ககாலத்தில் விரிச்சி, கட்டு, வெறியாட்டு போன்ற தெய்வம் சார்ந்த சடங்கியல் நிகழ்வுகளில்

ஈடுபட்ட தொல்குடி மாந்தர்கள் பல்வேறு ஊர்களுக்கும் சென்று ஊழியம் செய்தார்கள் என்பதை,

"பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப (முல்லை. 11)

"திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப (நற்றி. 40)

"நெல்நீர் எரிந்து விரிச்சி ஓர்க்கும்
செம்முது பெண்டின் சொல்லும் நிரம்பா" (புறம். 280)

"இளந்துணை ஆயமொடு கழங்கு உடன் ஆடினும்" (அகம். 17)

"கழங்கு ஆடு ஆயத்து" (அகம். 66)

"சென்றனள் மன்ற என்மகளே
பந்தும் பாவையும் கழங்கும் எமக்கொழித்தே" (ஐங். 377)

"பொய்யா மரபின் ஊர்முது வேலன்
கழங்கு மெய்ப்படுத்துக் கன்னந்தூக்கி
முருகென மொழியும" (ஐங். 245)

போன்ற பாடல் அடிகளால் அறியலாம். விரிச்சி, கட்டு, கழங்கு, கன்னம், வெறியாட்டு இவற்றின் வழி முதுவாய்ப் பெண்டிர், செம்முது குறத்தியர், முதுவாய்ப்பாணர், வெறியாடும் வேலன் ஆகியோர் பண்டைத் தமிழரின் மனநோய் கூறுகளைத் தனித்து நலம் பேணினார்கள் என்பதை அறியலாம்.

### 2.14.20 சென்னியர்

சென்னியர் பற்றி மிகக் குறைவான குறிப்புகளே கிடைக்கின்றன. சோழ நாட்டு மன்னர்களையும் சென்னியர் என்று அழைக்கும் வழக்கம் அக்காலத்திலிருந்தது குறிப்பிடத்தக்கது. ஆனால் "சென்னியர் என்பது மதத் தேவைகளுக்காகப் பாடும் பாடகனைக் குறிக்கிறது"[18] என்று சிவத்தம்பி குறிப்பிடுகிறார். அருவியில் மலர்ந்த நல்ல ஆம்பல் சூடியவர் சென்னியர் என்று பதிற்றுப்பத்து கூறுகிறது.

"அருவி ஆம்பல் மலைந்த சென்னியர" (பதிற். 62:17)

"தம்மலது இல்லா நம்நயந்து அருளி

இன்னும் வாரார் ஆயினும் சென்னியர" (நற். 189:2)

எனும் அடிகள் உண்கலத்தைக் கொண்ட சீறி யாழ்ப்பாணர்களே சென்னியர் என்று அழைக்கப்பட்டனர் என்பதை விளக்குகின்றது.

**2.14.21 நகைவர்**

நகைவர் ஒருவகை இரவலர்க் கலைஞர்கள் வகையைச் சேர்ந்தவர்கள். இவர்களை நகைவேழம்பர் என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.

"பயில் தொழில் குயிலுவர், பல் முறைக் கருவியர்,

நகை-வேழம்பரொடு வகை தெரி இருக்கையும்"(சிலம்பு. இந்திர. 52-53)

இதனை என்ற வரிகளின் மூலம் அறியலாம். நகைவர்களை "நகைக்சுவைக் கலைஞர்கள் என்றும், அரசவைக் கோமாளிகள் என்றும், விகடகவி என்றும"[19] ஷாஜகான்கனி குறிப்பிடுவதாக பக்தவத்சலபாரதி கூறுகிறார்.

**2.14.22 குறுங்கூளியர்**

குறுங்கூளியர் ஒருவகைக் கூத்துக் கலைஞர்களாகவும் ஒருவகை இரவலர்க் கலைஞர்களாகவும் இருந்துள்ளதை,

"மரம் பிறங்கிய நளிச் சிலம்பில்,

குரங்கு அன்ன புன் குறுங் கூளியர்

பரந்து அலைக்கும் பகை ஒன்று என்கோ?" (புறம். 136)

"வேறு பல் உருவின் குறும் பல் கூளியர்,

சாறு அயர் களத்து வீறு பெறத் தோன்றி," (திருமுருகு. 282-283)

"காய் சின முன்பின் கடுங் கண் கூளியர்

ஊர் சுடு விளக்கின், தந்த ஆயமும்,

நாடுடை நல் எயில் அணங்குடைத் தோட்டி" (மதுரை. 690-692).

என்ற பாடல் அடிகள் இயம்புகின்றன. இவர்கள் 'பல்கூளியர்', 'குறும்பல் கூளியர்' என்று அழைக்கப்படுகின்றனர். உருவெழு கூளியர், கவர்கால் கூளியர் எனும் பிரிவினர்களும் இவர்களில் இருந்துள்ளனர்.

## 2.15 புறத்துறையில் பாணர்களின் செயல்பாடு

### 2.15.1 பாணர்கள் முரசறைதல்

பாண் சமூகத்தின் ஒரு பிரிவினர் முரசறையும் தொழிலைச் செய்து வந்துள்ளனர். பாண் சமூகத்தாரில் ஒரு பிரிவினர் அக்காலத்தில் 'முதுகுடியினர்' என்று சிறப்பாகப் போற்றப்பட்டுள்ளனர். பாணர் இனத்தைச் சார்ந்தோர்களில் சிலர் முரசறைவோனாக இருந்துள்ளனர்.

"வச்சிறக் கோட்டத்து மணங்கெழு முரசம்

கச்சை யானைப் பிடர்த்தலை ஏற்றி

..............................................

முரசுககடிப் பிகூஉம் முதுகுடிப் பிறந்தோன" (மணி.விழா. 27-37)

என்ற திருவிழாச் செய்தியைப் பல்வேறு சிறப்புகளைக்கொண்ட முரசு மூலம் ஊராருக்குப் பழைய முதுகுடியைச்சேர்ந்த பறையறைவோன் தெரிவித்தான் என்று மணிமேகலை குறிப்பிடுகிறது. முதுகுடியில் பிறந்த ஒருவன் குறுந்தடியால் முரசடித்துத் திருவிழாச் செய்தியை ஊராருக்கு அறிவித்தான் என இதன்மூலம் அறிகிறோம். இந்த முரசானது வென்ற காளையின் தோலினால் செய்யப்பட்டது, இடிபோன்ற முழக்கத்தைக் கொண்டது, எமனை அழைக்கவல்லது, இரத்தப்பலி கொள்கின்ற விருப்பமுடையது என மணிமேகலை வருணிக்கிறது. ஆனால் சங்க காலத்தில் நொச்சி மாலையணிந்து கொண்டு குயவர்களே தெருத் தெருவாகச் சென்று விழாச் செய்தி உரைத்ததை

"திருநாள் படைநாள் கடிநாள் என்றிப்

பெருநாட் கல்லது பிறநாட் கறையாச்

செல்வச் சேறை வள்ளுவ முதுமகன" (நற். 200)

என்ற நற்றிணை பாடல் வரிகள் மூலம் அறியலாம். அரசனுடைய பிறந்தநாள், போரில் வெற்றிபெற்ற நாள், மணநாள் போன்ற பெருநாட்களை வள்ளுவ பெருங்குடியினர் முரசறைந்து தெரிவித்துள்ளனர் என்பதைப் பெருங்கதையும் குறிப்பிடுகிறது. இவர்களும் சங்ககாலப் பாண்குடியின் வழிவந்தவர்களே ஆவர். மேற்கூறிய பாடல்களில் பாண் குடியினர் முதுகுடியினர் என்று சிறப்பிக்கப்படுவது அவர்களுடைய உயர்ந்த சமூகத் தகுதியைக் காட்டுகிறது.

### 2.15.2 நாடாளும் பாணர்கள்

பாணர்கள் ஒரு காலத்தில் நாடாளும் மன்னர்களாகவும் இருந்துள்ளனர். பாணன் ஆட்சிக்கு உட்பட்டிருந்த நாடு ஒன்று இருந்ததை,

"விழவுஅயர்ந் தன்ன கொழும்பல் திற்றி

எழாஅப் பாணன் நன்னாட் டும்பர" (அகம். 113)

என்று அகநானூறு கூறுகின்றது பாணன் நாடு தமிழகத்திற்கு வடபுலம் சார்ந்திருந்தது. அந்நாடானது பாலியாற்றின் வடகரையிலிருந்ததென்று பாண் மலை கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. "பாணர் நாட்டினர் வாணர், வாணாதிராயர், வாணதரையர் எனறெல்லாம் பெயர்பெற்றுப் பின்னர் தமிழகமெங்கும் பரவியள்ளனர். இதற்கான கல்வெட்டுச் சான்றுகள் வல்லம் கோயிலில் இருப்பதாக"[20] இரா.இளங்குமரன் குறிப்பிடுகிறார். உறையூர் வெளியன் தித்தன் என்பான் நாட்டில் பாணன் ஒருவன் இருந்தான். கங்க நாட்டுக் கட்டி என்பான் அப்பாணனோடு மோத வந்துள்ளான். ஆனால் தித்தனும் பாணனும் கட்டிய பறையார்ப்பு, படையார்ப்பு இரண்டையும் கண்ட கட்டி தோற்று ஓடிவிட்டான் என்ற செய்தியை ,

"வலிமிகு முன்பின் பாணனொடு

மலிதார்த் தித்தன் ஆர்ப்பு" (அகம். 226)

என்று அடிகளின் மூலம் அகநானூறு குறிப்பிடுகின்றது. பாணர்கள் வீரத்திலும் சிறப்புற்றிருந்துள்ளனர் என்பதை,

"பாணன், மல்லடு மார்பின் வலியுற வருந்தி

எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன" (அகம். 386:4-6)

ஆரிய நாட்டைச் சேர்ந்த பொருநன் ஒருவனும் குட்ட நாட்டைச் சேர்ந்த கணையன் ஒருவனும் ஒன்றுகூடி அப்பாணனோடு போருக்கு வந்தனர். இருவரும் பாணனிடம் தோற்றுள்ளனர் என்பதை இப்பாடல் அடிகள் காட்டுகின்றன. பாணர்கள் தம்முடைய திறனாலும் சிறப்பாலும் வேந்தர்களிடமிருந்து நாடுகளைப் பெற்றுள்ளனர். பாண்டிய மன்னன் ஒருவன் சோழநாட்டை வென்று அதனைப் பாணனுக்கு வழங்கியுள்ளான். அந்நாட்டுத் தலைவன் வாணன் மதுரையைக் கைப்பற்றி அதனைப் பாணன் ஒருவனுக்கு வழங்கிய குறிப்பையும் கல்வெட்டுகள் வழி அறிய முடிகின்றது. இதனை,

"பொன்னி வளநாடு பாணன் பெறப் புரிந்தான்

பாணன் மதுரைப் பதியினை வைத்த பிரான" (பெருங். 188-91)

என்ற பெருங்கதை வரிகள் குறிப்பிடுகின்றன. "பாணன் என்பான் பாலியாற்றின் வடகரையில் உள்ள நாட்டில் அரசு புரிந்து வந்தான். அந்நாட்டில் பலியாற்றின் கரையில் உள்ள பெரும்பாணப்பாடியும் பாண் மலையும் அப்பகுதியிலுள்ள கல்வெட்டுக்களால் குறிக்கப்படுகின்றன. அவன் வழி வந்தோர் வாணர் எனவும் வாணாதிராயர் எனவும் வாண தரையர் எனவும் நிலவினர். வடார்க்காடு வட்டத்துத் திருவல்லம் கோயிலில் அவர்களுடைய கல்வெட்டுக்கள் மிகுதியாக உள்ளன. பிற்காலத்தே அவர்கள் தமிழகம் முழுவதும் பரவியிருந்தனர். வாணகோவரையர் என்பாரும் பண்டைய பாணன் வழி வந்தோரே யாவர்."[21] என்று இளங்குமரன் குறிப்பிடுகிறார்.

### 2.15.3 அரசியல் பணி

பாண் குடியைச் சார்ந்தவர்களான காக்கையூர்ப் பாடினியான நச்செள்ளையார் ஆடுகோட் பாட்டுச் சேரலாதனிடமும் ஔவையார் அதியமானிடமும் அறிவுத்துறையிலும், அரசுத் துறையிலும் பணியாற்றினர் என்பதைப் பதிற்றுப்பத்தும் புறநானூறும் கூறுகின்றன. காக்கையூர்ப் பாடினியார் பதிற்றுப்பத்தில் ஆறாம் பத்தைப்பாடியவர். அவர் பாட்டை ஏற்று மகிழ்ந்த சேரலாதன் நச்எசள்ளையார்க்கு அணிகலனுக்காக ஒன்பது காப்பொன்னும் இலட்சம் பொற்காசும் வழங்கியதோடு, தன் அரசவைப் புலவராகவும் அமைச்சராகவும் தம் பக்கத்தே இருக்க வேண்டுமெனவும் கேட்டுக் கொண்டான். நச்செள்ளையாரும் அதற்கிசைந்து அரசியல் பணி ஆற்றிவந்தார்.

ஒருகால் சேரலாதன் ஆடுகள மகளிர் ஆடல் பாடல்களில் பெரிதும் ஈடுபட்டுக் கழிகாமத்தனாய் இருக்கக் கண்டார். அச்செயல் அவனின் அரசியல் தலைமைக்கு அவலம் விளைவிக்குமென்பதைக் கருதி 'வேந்தே! ஒளி திகழும் நெற்றியினையும் மடப்பம் பொருந்திய பார்வையினையும் ஒளிவீசும் பற்களையும் அமுதம்போன்ற சொற்களையும் ஒசிந்து அசைந்த நடையினையும் உடைய விறலியரின் ஆடல்பாடல்களில் அளவுகடந்து ஈடுபடுகின்றாய். இதனால் ஒளி தங்கும் வேலேந்திய அண்ணலாகிய ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் சிற்றின்பத்துறையில் சிக்கிக் கொள்ளும் மெலியன்போலும் என எண்ணுவர் உன்னை உணராதவர். அதனால் தீமை உண்டாகும் என்பதை நயக்கும் முறையில் நச்செள்ளையார் உணர்த்தியுள்ளார்.

"ஈர் இதழ் மழைக்கண், பேர் இயல் அரிவை

ஒள் இதழ் அவிழகம் கடுக்கும் சீறடி,

பல் சில கிண்கிணி சிறு பரடு அலைப்ப,

கொல் புனல் தளிரின் நடுங்குவனள் நின்று, நின்

எறியர் ஓக்கிய சிறு செங் குவளை," (பதிற். 52:10-15)

என்ற பாடல் அடிகள் தொண்டைமான் தன்படைப் பெருமையினைத் தூதுவந்த மாதிடம் காட்டினான். தம் அரசனின் மேம்பாட்டை அரசியல் விரகுடன் அயல் வேந்தனிடம் எடுத்துக்கூறியவன்மை மிகவும் போற்றத்தக்கதாய் உள்ளது. அப்படைக் கருவிகளைக் கண்ட ஔவையார் இவை பீலி அணியப்பட்டு, மாலை சூட்டப்பட்டு, அழகுபடச் செய்யப்பட்ட வலியக் காம்பை உடையன. நெய் பூசப்பட்டுக் காவலை உடைய கோயிலில் அடுக்கி வைக்கப்பட்டுள்ளன. ஆனால் அதியனின் கருவிகளோ பகைவரைக் குத்தியதால் கங்கும் நுனியும் முரிந்து கொல்லனது 'பணிக்களரி' யில் எந்நாளும் கிடக்கின்றன. எம்தலைவனாகிய அதியமான் வறியவர்களின் சுற்றத்திற்குத் தலைவன் (இல்லோர் ஒக்கல் தலைவன்). செல்வமுள்ள போது அனைவர்க்கும் உணவு படைத்து, இல்லையாயின் உள்ளதனைப் பலரொடு கூட உண்ணும் பண்பாளன் என நயம்படப் பேசி அவனைச் சிந்திக்கத் தூண்டினார். நிகழவிருந்த போர் கைவிடப்பட்டது. இந்நிகழ்வை

"இவ்வே, பீலி அணிந்து, மாலை சூட்டி,

கண் திரள் நோன் காழ் திருத்தி, நெய் அணிந்து,

கடியுடை வியல் நகரவ்வே அவ்வே,

பகைவர்க் குத்தி, கோடு, நுதி, சிதைந்து,

..............................................

இல்லோர் ஒக்கல் தலைவன்,

அண்ணல் எம் கோமான், வைந் நுதி வேலே." (புறம். 95)

என்ற புறப்பாடல் எடுத்தோதுகிறது.

### 2.15.4 சூதர் பணி

அதிகாலைப் பொழுதில் மன்னனைத் துயிலெழுப்புதல் பணியைப் பாணர்களில் ஒரு சாரராகிய சூதர்கள் செய்துவந்துள்ளனர். இதனை,

"தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்

சூதர் ஏத்திய துயிலெடை நிலையும" (தொல். புறத். 36)

என்னும் நூற்பா வாயிலாகத் தொல்காப்பியர் உணர்த்துகிறார். "தமது வலியாலே பாசறைக்கண் ஒரு மனக்கவற்சியின்றித் துயின்ற அரசர்க்கு நல்ல புகழைக் கொடுத்தலைக் கருதிய சூதர் அத்துயிலெடுப்பின் ஏத்தின துயிலெடை நிலையும்"[22] என்று இளம்பூரணர் விளக்கம் தருகிறார். நின்றேத்துவார் வாழ்த்த, இருந்தேத்துவார் புகழைச் சொல்ல, வைதாளிகர் தத்தம் துறைக்குரியனவற்றை இசைப்ப, நாழிகை சொல்வார் நாழிகை சொல்ல, ஒலிக்கின்ற பள்ளியெழுச்சி முரசு ஒலிப்ப மன்னர் காலையில் எழுவர் என்பதை மாங்குடி மருதனாரும்,

"சூதர் வாழ்த்த மாகதர் நுவ

வேதா ளிகரொடு நாழிகை இசைப்ப

இமிழ் முர சிரங்க............." (மதுரை. 670-72)

என்ற வரிகளில் குறிப்பிட்டுள்ளார். உறையூர் முதுகண்ணன் சாத்தனார், சோழவேள் தன் நலங் கிள்ளியைப் பாராட்டிய போது

"வெங்கள் தொலைச்சியும், அமையார், தெங்கின்

இளநீர் உதிர்க்கும் வளம் மிகு நல் நாடு

பெற்றனர் உவக்கும் நின் படை கொள் மாக்கள்

பற்றா மாக்களின் பரிவு முந்துறுத்து,

கூவை துற்ற நாற் கால் பந்தர்ச்

சிறு மனை வாழ்க்கையின் ஒரீஇ, வருநர்க்குபுறம" (புறம். 29)

அரசே நாட்காலை மகிழ்ந்திருக்கும் நினது திருவோலக்கத்தைப் பொன்னால் செய்யப்பட்ட தாமரைப் பூச்சூடிய பாண் மகனும் பொன்னரிமாலை அணிந்த விறலியுமாகிய பாண் சுற்றம் சூழ்க! பின்பு நின் சந்தனம் பூசிய மார்பினை நின் உரிமை மகளிர் தோள் சூழ்க என்று புறநானூறு சுட்டுகிறது. எனவே, அதிகாலையில் மன்னனைத் துயில் எழுப்பும் பணியைப் பாணர் இனத்தைச் சார்ந்த சூதர்கள் மேற்கொண்டுள்ளனர் என்பது அறியப்படுகிறது.

### 2.15.5 மறத்துறையிலும் பாணர்கள்

போருக்குச் செல்லும் முன்பாக துடியன், துடிப்பறையைக் கொட்டி அனைவரையும் போருக்கு அழைக்கும் பொறுப்பு அவனிடம் கொடுக்கப்பட்டிருந்தது. துடியன், பசியதழையை விரவித் தொடுத்த கண்ணியைச் சூடித் துடியைக் கொட்டி வெட்சிப் போர்க்கு எழுதல் வேண்டுமென்று தெரிவிப்பது வழக்கம் என்று தொல்காப்பியர் கூறுகிறார். இதனை,

"மறங்கடை கூட்டிய துடிநிலை சிறந்த

கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே!" (புற.வெண். கரந்தை. 19)

என்ற நூற்பாவில் அவர் குறிப்பிட்டுள்ளார். மேலும், நிரை கொள்ளுதற்கும் நிரை மீட்டற்கும் துடிகொட்டிச் செல்லுதல் வழக்கம் என்பதை,

"முந்தை முதல்வர் துடிய ரிவன்முதல்வர்

எந்தைக்குத் தந்தை யிவனெனக்கு - வந்த

குடியொடு கோடா மரபினோற் கின்னும்

வடியுறு தீந்தேறல் வாக்கு.” (புற.வெண்.கரந்தை. 24)

என்று புறப்பொருள் வெண்பாமாலை இயம்புகிறது. அது மட்டுமன்றி, நிரை கவரும்போதும் தோற்றவர்க்கு வெற்றி வேண்டியும் வென்றோர்க்கு மீண்டும் செல்லும் போது வெற்றி வேண்டியும் கொற்றவைக்குக் குருதிப்பலி கொடுத்து வழிபாடு செய்துள்ளனர். அப்போது பாடினி பாடுவதுண்டு என்பதை,

“ஆடிப்பண் பாடி அளவின்றிக் கொற்றவை

பாடினி பாடல் படுத்துவந்தாள் - நாடிய

தோளுழலை ஆடுவோன் தோளிலும் தூக்கமைந்த

தாளிழலை ஆடுவோன் தான்.” (புற.வெண். தும்பை. 27)

என்று புறப்பொருள் வெண்பாமாலை இயம்புகிறது. பாணர்களில் பலர் நேரடியாக மறத்துறையிலும் மாண்புற்று விளங்கியுள்ளனர். மற்போர் செய்வதில் வல்லமை பெற்ற பாணன் ஒருவன் பண்டைக்காலத்திலிருந்தான் என்பதை அகப்பாடலில் பரணர் குறிப்பிட்டுள்ளார். ஆற்றலும் வலிமையும் உடைய பாணன் என்பானோடு போர் உடற்றும் வல்லமை உடைய கட்டி என்பான், தித்தன் வெளியன் என்பானின் உறையூரிலுள்ள நாளோலக்கத்தின்கண்ணே மற்போர் புரிதற்கு வந்தான். அப்போது அங்கு ஒலித்த தெளிவான கிணையினது இனிய ஓசையைக் கேட்டுப் பாணனது பெருமையை உணர்ந்து அஞ்சிப் போர் செய்யாது ஓடினான். இதைக் கண்ட மக்கள் பேராரவாரம் செய்தனர். என்பதை,

“நாணினென், பெரும! யானே பாணன்

மல் அடு மார்பின் வலி உற வருந்தி,

எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்

நிறைத் திரள் முழவுத் தோள் கையகத்து ஒழிந்த

திறன் வேறு கிடக்கை நோக்கி, நல் போர்க்

கணையன் நாணியாங்கு மறையினள” (அகம். 386:1-6)

என்று அகநானூறு குறிப்பிடுகிறது. ‘இப்பாணன், ஆரியப் பொருநன் ஒருவனுடன் மற்போர் புரிந்த ஞான்று, பொருநனது முழவு போன்ற திரண்ட தோள்கள்

அப்பாணனது கையில் அகப்பட்டுத் திறன் ஒழிந்து கிடந்த கிடக்கையைப் பார்த்த, போரில் வல்ல கணையன் என்பான் நாணியது போல, மறைந்து மெல்ல வந்து முகமன் கூறி, ‘கரிய பெரிய கூந்தலை உடையளே, யானும் நின் சேரியில் உள்ளவளே! உனக்குத் தங்கையாவேன் என்று சொல்லி மோதிரம் அணிந்த தன் மெல்லிய விரலால் என் நெற்றியையும் கூந்தலையும் தடவிப் பகலில் வந்து மீண்ட நின் பரத்தையைக் கண்டு யான் நாணினேன்.’ எனத் தோழி கூற்றாக அமைந்துள்ள மற்றொரு பாட்டிலும் பாணர்கள் போர்த் தொழிலிலும் வன்மை பெற்று வாழ்ந்தனர் என்பதை இதன் அறியலாம்.

### 2.15.6 போர்களம் பாடும் பாணர்

பாணர்களில் சிலர் அரசுத் துறையில் பணிபுரிவதோடு மன்னர்கள் போருக்குச் செல்லும் போது தானும் அவர்களோடு போர்களம்சென்று போர் நிகழ்வுகளைப்பாடுவதைத் தம் தொழிலாகக் கொண்டுள்ளனர். இதனை, புறப்பொருள் வெண்பாமாலையில் தும்பைப்படலத்தில் ‘பாண்பாட்டு’ என்னும் துறை விரிவாகப் பேசுகிறது.

“வெண் கோட்ட களிறெறிந்து செங்களத்து வீழ்ந்தார்க்குக்

கைவல் யாழ்பாணர் கடனிறுத் தன்று” (புற.வெண்.தும்பை.5)

என்று புறப்பொருள் வெண்பாமாலை விவரிக்கிறது. வெண்மையான கொம்பினை உடைய யானையை எறிந்து பறந்தலையில் பட்டார்க்கு யாழ் வாசிக்கும் கைத் தொழிலில் வல்ல பாணர் உரிமை செய்தது என்று பொருள் விளக்கம் தருகிறது.

போர்க்களம் சென்று போர் நிகழும் போது அதைப் பார்த்த வண்ணம் அந்நிகழ்ச்சிகளைப் பாணர் பாடுவதை, ‘தலைவன் தண்ணளி செய்த நாட்கள் மிகச் சிலவேயாகும். ஆயினும் ஊரவர் அலரோ விற்களைக் கொண்ட படைகளை உடைய விச்சியர்களுக்குத் தலைவன் வேந்தரொடு பொருதக் காலத்தில் பாணர் சிங்க நோக்கு போல் இரு படைகளையும் பார்த்துப் பாடிய தன்மை ஆரவாரம் மிக்க குறும்பூரில் உள்ளார் செய்த முழக்கத்தினும் பெரிய முழக்கத்தை உடையதாயிற்று என்று குறுந்தொகையில் பரணர் குறிப்பிட்டுள்ளார்.

போர் முனையில் வெற்றி கொண்டு வாகை சூடிய மன்னன் வரும்போது அவன் தேரின் முன்னும் பின்னும் ஆடல் பாடல் வல்ல வீர மகளிர் அவன் வெற்றியைப் பாடிப் புகழ்தலும், கூத்தாடுவதை மரபாகவும் கொண்டுள்ளனர்.

அவ்வாறே, அரசன் படையெடுத்துப் போகும் போது பாடினி படையெடுப்பைப் பாடுவதும் அரசன் பாசறையில் தங்கி இருக்கும் போதும் பாடினி அவன் வேற்படையைப் புகழ்ந்து பாடுதலும் உண்டு. இதனை,

“உரவுக் களிற்றுப் புலாஅம் பாசறை,

நிலவின் அன்ன வெள் வேல் பாடினி” (பதிற். 61)

என்ற பாடல் அடிகளில் காணலாம். மேலும் போர்க்களத்தில் புண்பட்டுத் துன்புறும் வீரர்களுக்கு இசைபாடி அத்துன்பத்தை மறக்கும் படியும் செய்தனர். போரில் உடலில் புண், ஏற்பட்டால் அதனை உண்ணப் பேய்கள் வரும் என்றும் அவற்றை விரட்டக் காஞ்சிப்பண்ணைப் பாடி யாழையும் குழலையும் பாணர்கள் இசைத்தார்கள் என்பதை,

“தீங்கனி இரவமொடு வேம்புமனைச் செரீஇ

வாங்குமருப்பு யாழொடு பல்லியம் கறங்கக்

…………………………………………

இசைமணி எறிந்து காஞ்சி பாடி

நெடுநகர் வரைப்பில் கடிநறை புகைஇக்

காக்கம் வம்மோ காதலங் தோழி

வேந்துறு விழுமம் தாங்கிய

பூம்பொறிக் கழற்கால் நெடுந்தகை புண்ணே!” (புறம். 282)

என்ற புறப்பாட்டு கூறுகிறது.

### 2.15.7 பாணர்கள் நிலைக்குடிகளுடன் கொண்டிருந்த தொடர்பு

பாணர்கள் நிலைக்குடிகளிடமும், கிழார்களிடமும், குறுநில மன்னர்களிடமும், வேந்தர்களிடமும் நெருங்கிய உறவுகொண்டிருந்தனர். பாண் சமூகத்தினர் சேர, சோழ, பாண்டியர் எனும் மூவேந்தர்களைக் காட்டிலும் குறுநில மன்னர்களையும், சீறூர்த் தலைவர்களையும், ஊர்க் கிழார்களையுமே மிகுதியாக நாடியுள்ளனர். சீறூர் மன்னர்கள் வன்புலச் சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள். ஏறக்குறைய அனைத்து வல்லாண்முல்லைப் பாடல்களும் சீறூர் மன்னர்களைப்

பற்றியே பாடப்பட்டுள்ளன. இப்பாடல்கள் வழி வன்புலச் சமுதாயத்தின் வாழ்க்கை முறையை அறியமுடிகிறது. பாணர்கள் கானவர், குறவர், கொடிச்சியர், எயினர் போன்ற பல வன்புலச் சமூகத்தாரின் வாழ்விடங்கள் வழியாகச் செல்லும்போது அங்கு உண்டு உறங்கியிருக்கிறார்கள் என்பதை,

"எயினர் தந்த எய்ம் மான் எறி தசைப்

பைஞ் ஞிணம் பெருத்த பசு வெள் அமலை,

வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய,

இரும் பனங் குடையின் மிசையும" (புறம். 177)

என்ற புறநானூற்று அடிகள் தெரிவிக்கின்றன. "சங்க காலத்துச் சமூக முறையைப் பார்க்கும்பொழுது பாண் சமூகத்தார் சங்கச் சமூகத்தில் இரண்டறக் கலந்துவிட்டார்கள். அரசவையானாலும், அகத்துறையானாலும், பாசறையானாலும், பரத்தையர் இல்லமானாலும் எல்லாத் திசைகளிலும் எல்லா இடங்களிலும் இவர்கள் நீக்கமற இடம் பெற்றிருந்தார்கள்."[23] என்று பழனிவேல் கூறுவது இங்கு குறிப்பிடத்தக்கது. மேலும், பாணர்கள் தம் நாட்டு மன்னர்களோடு நெருங்கி செயல்பட்டுள்ளனர். அவர்களுக்காக அரசியல் தூதுவராகவும் இருந்துள்ளனர். இதனை ஔவையார் அதியமானுக்காகத் தொண்டைமானிடம் தூது சென்ற நிகழ்வு உறுதிப்படுத்துகிறது.

### 2.16 அகத்திணையில் பாணரின் பங்கு

மன்னர்களின் புறவாழ்க்கையில் பல நிலைகளில் பாணர்கள் தொடர்புகொண்டிருந்ததைப்போல தலைவன், தலைவியர் அகவாழ்க்கையில் (குடும்ப உறவில்) மிக முக்கிய பங்கு வகித்துள்ளனர். இதனைத் தொல்காப்பியர் பின்வருமாறு எடுத்தக்காட்டியுள்ளார்.

"பாணன் கூத்தன் விறலி பரத்தை

யாணஞ்சான்ற அறிவர் கண்டோர்

பேணுதகு சிறப்பின் பார்ப்பான் முதலா

முன்னுறக்கிறந்த அறுவரொடு தொகைஇத்

தொன்னெறி மரபிற் கற்பிக்குரியர" (தொல். பொருள். 491)

அவர்களுக்குரிய வாயில்கள் எவையெவை என்பதையும் பின்வருமாறு விளக்குகிறார்

"தோழி, தாயே, பார்ப்பான், பாங்கன்,
பாணன், பாடினி, இளையர், விருந்தினர்,
கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர்,
யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப" (தொல். பொருள். 439)

தோழி, தாய், முதலான பன்னிரு வாயில்களில் பாண் குடியைச் சார்ந்த பாணரும் கூத்தரும் தலைவன் தலைவியர் வாழ்க்கையில் தொடர்புடைய வாயில்களாகச் செயல்பட்டிருப்பதைத் தொல்காப்பியர் சுட்டிக்காட்டியுள்ளார். தலைவன், தலைவி ஆகியோருக்குமிடையே இல்வாழ்க்கை சிறப்புற்று அமையச் சங்ககாலப் பாணர்கள் தூது செல்லுதல், வாயில்களாகச் செயல்படுதல் என்பன போன்ற பல்வேறு பணிகள் மூலம் நிலைகுடிகளுடன் நெருக்கமாக உறவுகொண்டிருந்தனர்.

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் மீறாது நிற்கும் காலத்தில் தலைவனிடம் தூது செல்லும் வாயில்களாகப் பாணர்கள் இருந்துள்ளனர். பரத்தமை ஒழுக்கத்தால் பிரிந்த தலைவன் சார்பாகப் பாணர்கள் தலைவியிடம் தூதாக சென்றுள்ளனர். தொல்காப்பியர் இலக்கணத்தின்படி பாசறையில் தங்கியிருக்கும் தலைவனிடம் சென்று அவனை விரைந்து திரும்புமாறு வினை முடுக்குதலும் பாணரின் பணியாக இருந்துள்ளது.

"நிலம் பெயர்ந்து உரைத்தல், அவள் நிலை உரைத்தல்,
கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய." (தொல்.பொருள். 167)

"அருமைக் காலத்துப் பெருமை காட்டிய
எளிமைக் காலத்து இரக்கத்தானும்
பாணர், கூத்தர், விறலியர், என்று இவர்
பேணிச் சொல்லிய குறைவினை எதிரும்" (தொல்.பொருள். 148).

மேலும், தொல்காப்பியர் விதிப்படி விறலியும் தூது போதல் பணியை மேற்கொண்டுள்ளனர். தூதுபோதல் மட்டுமின்றிப் பாணர்கள் சிலர் செல்வக்குடியில் பிறந்த இளைஞர்களைப் பரத்தையரிடம் அழைத்துச் செல்லுதலிலும் ஈடுபட்டுள்ளனர். இதனால், குடும்ப பெண்கள் பாணர்களை விரும்பாமல் வெறுத்து ஒதுக்கிய வர்ணனைகளையும் சங்க இலக்கியங்களில் காண முடிகின்றது.

"நினக்கியாம் பாணரே மல்லே மெமக்கு

நீயுங் குருசிலை யல்லை மாதோ" (ஐங். 480)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலில் தலைவியின் வருத்தத்தைக்கண்ட பொழுது தோழி பாணனைப் பழித்துப்பேசும் செயலைக் காணலாம்.

### 2.16.1 செல்வர் மனையில் யாழ்ப் பாணர்

யாழ்ப்பாணர்களில் பலர் செல்வர்களின் இல்லங்களில், குடும்ப உறுப்பினர்களில் ஒருத்தராகவோ வாழ்ந்து, குடும்பத்தினர்க்கு யாழிசையின் இன்பத்தை அளித்து வந்தனர். அவர்களின் இல்லற வாழ்க்கை இனிது நடக்க உதவி புரிந்தனர் எனவும் சங்க இலக்கியப் பாக்கள் தெரிவிக்கின்றன.

தென்றல் இழைந்து வரும் மாலை நேரத்தில் இல்லத் தலைவன் தனது தலைவி, புதல்வனுடன் மனையில் அமர்ந்திருக்கும்போது யாழைக் கொண்டு பாணன் பாட்டிசைக்கும் நிகழ்வை

"மாலை முன்றில் குறுங்கால் கட்டில்

மனையோள் துணைவி ஆக, புதல்வன்

மார்பின் ஊரும் மகிழ்நகை இன்பப்

பொழுதிற்கு ஒத்தன்று மன்னே.

மென் பிணித்து அம்ம பாணனது யாழே!" (ஐங். 410)

என்ற அடிகளில் காணலாம். மேலும், பாசறையில் தங்கியிருக்கும் தலைவனிடம் சென்று அவனை விரைந்து வருமாறு சொல்லி வினை முடுக்குதலும் பாணரின் பணியாகச் சங்க காலத்தில் இருந்துள்ளது. நின்னையே விரும்பி உறையும் காதலி தன்மனைக்கண்ணே நின் பரிவாற்றாது புலம்புற்றுக் குளிர்ந்த மலர்போலும் கண்கள் கலுழ்ந்து சொரிந்த கண்ணீரை யாமும் பிறரும் கூறக்கேட்டும் நீ விரைந்து

மீளுதலைக் கருதாது இருக்கின்றாய். ஆதலால் எமக்கு நீ தலைவனும் இல நினக்கு யாம் பாணரும் ஆகோம்! 'என்று பாணன் தலைவிக்காகத் தலைவனிடம் சினம் கொள்ளும் நிகழ்வை

"நினக்கு யாம் பாணரேம் அல்லேம் எமக்கு
நீயும் குருசிலை அல்லை மாதோ
நின் வெங் காதலி தன் மனைப் புலம்பி,
ஈர் இதழ் உண்கண் உகுத்த
பூசல் கேட்டும் அருளாதோயே!" (ஐங். 480)

என்ற பாடலில் காணமுடிகிறது.

### 2.16.2 பாணரும் தூதும்

பாணர்களில் சிலர் செல்வக் குடும்பத்து இளைஞர்களுடன் நட்புகொண்டு அன்னார் புறத்தொழுக்கத்திற்குத் துணைபுரிந்து வந்தனர். அதனால் தலைவனின் பரத்தமை கண்டு தலைவி ஊடியபோது பாணர்கள் வாயிலாகச் சென்று அத்தலைவியின் சினத்தைத் தணித்தனர். 'தலைவனின் புறத்தொழுக்கம் பெறாத தலைவி மனவெறுப்புடன் இருக்கின்றாள். இதைக் கண்ட தலைவன் சொல் வன்மைமிக்க இளம் பாணன் ஒருவனைத் தலைவியிடம் தூதாக அனுப்புகின்றான். அந்த இளம் பாணன் தலைவியிடம் சென்று தலைவனின் பெருமைகளை வாக்கு வன்மை புலப்பட பாராட்டிப் பேசினான். அவனது சாதுரியத்தையும் கல்விச் சிறப்பையும் கண்ட தலைவி 'தோழி! இப்பாணன் ஓர் இளமாணாக்கன் போலும். அயலூரில் உள்ள நம்மிடம் இவ்வளவு அழகாகவும் நயமாகவும் பேசுபவன் தன்னூர் மன்றத்தில் எங்ஙனம் பேசுவானோ இரந்து பெறும் உணவினால் பொலிவிழந்த மேனியோடு காட்சியளிக்கும் இவன் விருந்து பெறுதற்குரியன்' என்றாள். தோழியை நோக்கி இவ்வாறு தலைவி கூறியதால் அவள் தலைவனை வரவேற்கத்தன் இசைவினைத் தெரிவிக்கும் நிலையையும் இதற்குப் பாணன் தூதாகச்சென்ற நிகழ்வையும் அவதானிக்க முடிகிறது.

"அன்னாய்! இவன் ஓர் இள மாணாக்கன்
தன் ஊர் மன்றத்து என்னன்கொல்லோ?

இரந்தூண் நிரம்பா மேனியொடு

விருந்தின் ஊரும் பெருஞ் செம்மலனே.”                    (குறுந். 33)

விறலியும் தூதாக செல்லும்வழக்கம் அக்காலத்தில் நிகழ்ந்துள்ளதைத் தொல்காப்பியர் என்ற நூற்பாவில் சுட்டியுள்ளார். விறலி தூது சென்ற நிகழ்வை, விளக்கின் ஒளிபோன்ற மலர்களை உடைய தாமரையின், யானைக்காது போன்ற இலைகள் அலைய நீர்பருகும் துறையின் கண் இறங்கிய மாதர் அஞ்சி ஓட, ஆழமானதும் நீர் மிகுதியும் உடைய பொய்கையில் வாளை மீன் வெடிபட ஓடும் ஊரனுக்கு நாளையும் ஒரு பரத்தையைக் கொணர்ந்து விட உடன்பட்ட அறியாமையை உடைய விறலியே! உண்மையை ஒரு சிறிதும் அறியாத உன் நாவினால் நிலைகுலைந்த தாழ்மையை உடைய உன்சொல்லுக்கு உடன்பட்ட அப்பரத்தையரின் தாயாரை அடைந்து தன் உணவிற்காக யானையையே பரிசிலாகப் பெறும் பாணன் கையிலுள்ள ஒலித்தலை உடைய தண்ணுமை வாச்சியம்போல உள்ளீடற்ற சொற்களை விரைந்து சொல்லுகின்றிலையோ? ஆங்ஙனம் சொல்லி அத்தாயாரையும் முயங்க விடுக்கலாமன்றோ? என்று தூதாக வந்த தலைவி கூற்று நிகழ்த்திய நிகழ்வை

“விளக்கின் அன்ன சுடர் விடு தாமரை,

களிற்றுச் செவி அன்ன பாசடை தயங்க,

............................................

களிறு பெறு வல்சிப் பாணன் கையதை

வள் உயிர்த் தண்ணுமை போல,

உள் யாதும் ,ல்லது ஓர் போர்வைஅம் சொல்லே?”     (நற். 310)

என்ற நற்றிணைப் பாடல் பதிவு செய்துள்ளது.

### 2.17 பாணர் பெற்ற பரிசில் வகை

பாண் குடியினர் மூவேந்தர்களை நாடிச் சென்று அவர்தம் புகழ்களைப்பாடினர். குறுநில மன்னர்களும் குன்றனைய செல்வர்களும் தம்மை நாடி வந்த பாணர்களைச் செல்வர்களாக மாற்றினர். தம்மிடம் வந்து இரந்த பாணர் மீண்டும் பிறரிடம் சென்று இரக்கக் கூடாது என்ற உயர்ந்த எண்ணத்துடன் ‘பிறன்

கடை மறப்ப நிறைந்த செல்வத்தை வழங்கி அன்னாரை வளப்படுத்தினர். புறநானூறும், பதிற்றுப்பத்தும், பத்துப்பாட்டில் பொருநர், சிறுபாண், பெரும்பாண், கூத்தர் ஆற்றுப்படைகளும், மதுரைக் காஞ்சியும் பாணர்க்கு வள்ளல்கள் அளித்த பரிசில் வகைகளைத் தெளிவாக விளக்குகின்றன.

### 2.17.1 புறநானூற்று குறிப்பிடும் பாணர் பெற்ற பரிசில்கள்

பாணர்கள் வேந்தர்களில் வீரம் மிகுந்து வெற்றியால் மேம்பட்டவர்களைப் பாராட்டிப் பாடினர். பாணன் மட்டுமின்றிப் பாடினியும் கூட புறம் பெற்ற வேந்தர்களின் மறம் பாடி மகிழ்ந்தனர். இதனைப் பதிற்றுப்பத்தும் 'மின்னிழை விறலியர் நின் மறம்பாட என்று கூறுகிறது. அங்ஙனம் பாடியவர்க்கு அரசர்கள் தோற்றப் பொலிவுடைய உயர்தரமான பலகழஞ்சால் செய்யப்பட்ட அழகிய பொன்னணிகளை வழங்கி மகிழ்ந்தனர். விறலியோடு சென்ற பாணனுக்குப் பொற்றாமரைப் பூவை வெள்ளி நாரில் தொடுத்துக் கொடுத்தனர். 'பாணர் தாமரை மலையவும்' எனப்புறப்பாட்டும் கூறுகிறது. இப்பொற்றாமரைப் பூவிற்குரிய பொன்னானது பகைவரின் யானைகளைக் கொன்று, அன்னாரைப் போர்க்களத்தில் தோற்கடித்துக் கொண்டு வரப்பட்ட நெற்றிப்பட்டத்திலிருந்து கிடைத்ததாகும் என்கிறது பின் வரும் பாடல்

"துயில் மடிந்தன்ன தூங்கு இருள் இறும்பின்,

பறை இசை அருவி, முள்ளூர்ப் பொருந!

தெறல் அரு மரபின் நின் கிளையொடும் பொலிய" (புறம். 126)

எனக் கூறியுள்ளது.

### 2.17.2 பதிற்றுப்பத்து குறிப்பிடும் பாணர் பெற்ற பரிசில்கள்

சேர வேந்தர்களும் கலைவாணர்களாகிய பாண் குடியினர்க்குப் பரிசில் அளிப்பதைத் தம்கடமையாகக் கருதினர். பாணர்களுக்கு இமயவரம்பன் பரிசில் வழங்கும் திறத்தைக் குமட்டூர்க் கண்ணனார் 'விரிந்த தலையாட்ட மணிந்த குதிரைகளையும், யானைகளையும் தேர்களையும் தனக்கு வேண்டுமென்று கருதாமல் மிகுதியாய் நல்கினான்' எனக்குறிப்பிட்டுள்ளார். இதனை,

"வயிரியர், கண்ணுளர்க்கு ஓம்பாது வீசி,

கடி மிளை, குண்டு கிடங்கின" (பதிற். 20)

இசைக் கருவிகளைத் தொகுத்துக் கட்டிய பையினை உடையவராய் ஊர்மன்றத்தை அடைந்து அங்குத் தம்கருவிகளைச் செம்மை செய்து பாடிப்பின் மறுகுகளின் சிறைக் கண்ணே நின்று பாடும் பாணர்க்கும் ஆடும் கூத்தர்க்கும் பொன்னாற் செய்யப்பட்ட அழகிய இழைகளையும் பெருவிலையினை உடைய அணிகலன்களையும் வழங்கும் குட்டுவன்' எனப் பாலைக்கௌதமனார் பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாராட்டியுள்ளார். இதனை,

"வருநர் வரையாச் செழும் பல் தாரம்

கொளக் கொளக் குறையாது தலைத்தலைச் சிறப்ப,

ஓவத்து அன்ன உரு கெழு நெடு நகர்," (பதிற். 88)

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

### 2.17.3 நற்றிணை குறிப்பிடும் பாணர் பெற்ற பரிசில்கள்

பாணர் குதிரைகளைப் பரிசிலாகப் பெற்றுள்ளனர். 'பாணர் பரிசிலாகப் பெற்ற விரிந்த புறமயிரையுடைய நல்ல குதிரையின் கவிந்த குளம்பு மோதுதலாலே செப்பமாகிய மலைமேலுள்ள சிறிய வழியில், வருத்தமின்றி இரவலர் ஏறும் பொறையனது புகழமைந்த கொல்லிமலை என்று நற்றினை குறிப்பிடுகிறது. இதனை,

"ஆனா நோயோடு அழி படர்க் கலங்கி,

காமம் கைம்மிக, கையறு துயரம்

காணவும் நல்காய் ஆயின்-பாணர்

பரிசில் பெற்ற விரி உளை நல் மான்

..........................................

பறவை இழைத்த பல் கண் இறாஅல்

தேனுடை நெடு வரை, தெய்வம் எழுதிய

வினை மாண் பாவை அன்னோள்

கொலை சூழ்ந்தனளால்-நோகோ யானே." (நற். 185)

என்ற பாடல் அடிகள் குறிப்பிடுகிறன. ஊர்தோறும் கூத்தரும் விறலிக்கு மன்னர்களின் அரண்மனையில் கொடுப்பதுபோலச் செல்வச் செழிப்புடைய ஊர்களில் நன்கலத்தைப் பரிசிலாகப் பெறுவர் என்றும் 'விறலியர், எள்ளினின்று எடுக்கப்படும் எண்ணெயையும் வெண்கிழியையும் விரும்பிப் பரிசாகப் பெறுவது வழக்கம் என்றும் நற்றிணைக் குறிப்பிடுகிறது. இதனை,

"கிழங்கு கீழ் வீழ்ந்து, தேன் மேல் தூங்கி,

சிற்சில வித்திப் பற்பல விளைந்து,

தினை கிளி கடியும் பெருங் கல் நாடன்

பிறப்பு ஓரன்மை அறிந்தனம்: அதனால்,

............................................

சாந்து தலைக்கொண்ட ஓங்கு பெருஞ் சாரல்,

விலங்கு மலை அடுக்கத்தானும்,

கலம் பெறு விறலி ஆடும் இவ் ஊரே." (நற். 328)

என்ற பாடல் அடிகள் குறிப்பிடுகிறன. இதனால் விறலியரின் ஏழ்மை வாழ்வை ஒருவாறு உணர முடிகிறது. யாழின் இசையைப் போலப் பாடும் விறலியர் தம்வறிய கைகளில் செறிய அணியும் வண்ணம் பொன்வளையல்களையும் யானைகள் பலவற்றையும் பகை நாட்டில் பற்றிய பல பொருள்களையும் பாணர்களுக்கும் தேருடன் குதிரைகளை அகவர்க்கும் அருளியவன் நெடுஞ்செழியன் என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. மேலும், அவன் பாணரும் ஆடல்மகளும் எட்டாயிரம் பொன்னை வழங்கினான் என்பதை

"முட்டில் பாணரும் ஆடியல் மகளிரும்

எட்டொடு புணர்ந்த ஆயிரம் பெறுப" (சிலம்பு. அரங். 162-163)

என்ற அடிகள் விளக்குகின்றன. பாணர் சமூகத்தை அக்காலப் புரவலர் சமூகம் பேணிப் பாதுகாத்து வந்தமையை இதன் மூலம் நன்கு அறியலாம்.

## முடிவுரை

வாய் மொழி இலக்கியத்தின் தோற்றமாகப் பாணர்களின் காலம் வரையறை செய்யப்படுகிறது. பாணர்களின் வாழ்வியலைச் சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு ஆற்றுப்படை நூல்கள் விரிவாகப் பேசுகின்றன. பாண் என்னும் சொல்லோடு அர் என்னும் சிறப்பு விகுதி சேர்ந்து பாணர் என்ற சொல் உருவானதாக அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். பாண் என்பது பாட்டு என்று கொண்டால் பாடல் பாடுவதை மட்டும் தொழிலாகக் கொண்டவர்கள் பாணர் என்பதும் பாடலின் மூலம் அக்காலச் சமூகத்தை மகிழ்வித்த கலைஞர்கள் பாணர்கள் என்பதும் தெரியவருகிறது.

அத்தகைய பாணர்கள் ஓர் இடத்தில் நிலைப் பெற்றிராத நாடோடி வாழ்வை மேற்கொண்டுள்ளனர். மேலும், அவர்கள் தனித்து வாழாது கூட்டமாக ஒருங்கிணைந்து வாழும் முறைமையை மேற்கொண்டுள்ளனர். பாணர்கள் நாடோடிகளாகத் திரிவதினால் நிலையான குடியிருப்பைப் பெற்றிலர். அவர்களது வாழிடம் தற்காலிகமானதாக அமைந்துள்ளது. பாணர்களில் ஒருவர் ஈட்டிய பொருளைப் பலரும் பகிர்ந்துள்ளமையைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

பாணர்களின் வாழ்வானது எப்பொழுதும் வறுமை சூழ்ந்த வாழ்வாக அமைந்துள்ளது. வள்ளல்களிடம் வெகுமதியைப் பெற்றே தம் வாழ் நாளைக் கழிப்பவர்களாகப் பாணர்கள் விளங்கியமையால் பெரும் பொழுதுகள் வறுமையோடு போராடும் வாழ்வாகப் பாணர்கள் வாழ்வு அமைந்துள்ளது.

பாணர்கள் தங்களுக்கென தனியுடைமை இல்லாதிருப்பதினால் அவர்களுடைய சிந்தை எப்பொழுதும் பொதுவுடைமைச் சிந்தையாக இருந்துள்ளது. அதனை அவர்களது பாடல் வழி அறியலாம்.

பாணர்களின் கடவுள் கொள்கையானது எந்த ஒரு சமயத்தையும் பின்பற்றி அமையாமல் செய்யும் தொழிலை மையமாகக் கொண்டுள்ளது. அவர்கள் எப்பொழுதும் தம்முடைய யாழ் போன்ற தொழில் கருவிகளையே போற்றும் அமைவில் கடவுள் கொள்கை அமைந்துள்ளது.

பாணர்களில் சிலர் உயர்குடிகளாகவும் கீழ் குடிகளாகவும் மதிப்பிடப்படும் சூழலைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. இத்தகையப் பகுப்பு பெரும்பான்மை அவர்கள் பெற்றிருக்கும் செல்வத்தின் அளவைக் கொண்டு மதிப்பிடப்பட்டுள்ளது. நிலையான ஓர் அரசவையில் தங்கியிருந்து பாடல் இயற்றும்

பொறுப்பில் உள்ள பாணர்களை உயர் குடியினர் என்றும் நாடோடிகளாக வாழும் பாணர்களைக் கீழ்க் குடியினர் என்றும் இலக்கியங்கள் சுட்டுகின்றன. இத்தகைய கிழ் குடிப்பாணர்கள் கைவினைக் கலைஞராகவும், மீன்பிடித் தொழிலைச் செய்பவர்களாகவும் இருந்துள்ளனர்.

பாணர்களை அவர்கள் வைத்திருக்கும் இசைக் கருவியின் அடிப்படையில் யாழ்ப்பாணர்கள், மண்டைப்பாணர்கள், இசைப்பாணர்கள் என்று வகைப்படுத்தலாம். பாணர் இனத்தைச் சார்ந்த பெண்களைப் பாடினி என்றும் விறலி என்றும் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

பாடல் பாடும் தொழிலை மேற்கொள்ளும் பெண் பாணர்களைப் பாடினி என்றும் ஆடற் கலை நிகழ்த்தும் பெண் பாணர்களை விறலி என்றும் நடிப்புக்கலையில் வல்லவர்களாகத் திகழும் ஆண் பாணர்களைப் பொருநர் இசைக் கலையில் வல்லவர்களான பாணர்களைக் கூத்தர் என்றும் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

மேலும், அகத்துறையில் குறிப்பிடப்படும் இளையர், கோடியர், கிணைவர், துடியர், வரியர், கண்ணுளர், இயவர், கட்டுவிச்சி, அகவன் மகள், அகவர், அகவுநர், வருவதுரைப்போர், சென்னியர், வரிக் கூத்து பாடுவோர், வருவதுரைப்போர், நகைவர், குறங்கூளியர் ஆகியோர் பாணர் இனத்தைச் சார்ந்தவர்கள் என்பதையும் அவர்களது வாழ்வியல் முறைமைகளையும் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன.

புறத்துறையில் பாணர்கள் முரசறைவோர்களாகவும், அரசியல் அமைப்பில் அரசுப் பணியிலும் சூதர் பணியிலும் மறத்துறையிலும் ஈடுபட்டவர்களாகவும் இருந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. போர்க்களங்களுக்குச் சென்று பாடும் பாணர்கள் போர்ப் பாணர்கள் என்று அழைக்கப்பட்டுள்ளனர்.

பாணர்கள் அகத்துறையில் தலைவன் தலைவியிடையே ஏற்படும் ஊடலைத் தீர்த்துவைக்கும் வாயில்களாகச் செயல்பட்டு பல்வேறு பரிசுகளைப் பெற்றுள்ளதைச் சங்க அக இலக்கியங்கள் காட்டுகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. ராஜ்கௌதமன் - பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ் சமூக உருவாக்கமும் ப. 161
2. இரா.இளங்குமரன் - பாணர் ப. 75
3. வெ.வரதராசன் - தமிழ்ப் பாணரின் வாழ்வும் வரலாறும் ப. 3
4. இரா.இளங்குமரன் - பாணர் ப. 76
5. பக்தவச்சல பாரதி - பாணர் இனவரைவியல் ப. 56
6. அம்மன்கிளி முருகதாஸ் - சங்கக் கவிதையாக்கம் பக். 138-140
7. பக்தவச்சல பாரதி - பாணர் இனவரைவியல் ப. 67
8. ராஜ்கௌதமன் - பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ் சமூக உருவாக்கமும் ப. 177
9. கு.வெ.பாலசுப்பிரமணியன். - சங்க இலக்கியத்தில் சமூக அமைவுகள் ப. 186
10. ராஜ்கௌதமன் - பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ் சமூக உருவாக்கமும் ப. 71
11. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - தொல்காப்பியம் பொருளதிகாரம் ப. 255
12. இரா.இளங்குமரன் - பாணர் ப. 84
13. மு.வளர்மதி - தமிழர் கலை வரலாற்றின் முகம் ப. 16
14. வெ.வரதராசன் - தமிழ்ப் பாணரின் வாழ்வும் வரலாறும் ப. 7
15. அம்மன்கிளி முருகதாஸ் - சங்கக் கவிதையாக்கம் ப. 140
16. கா.சிவதம்பி - பண்டை தமிழ்ச் சமூகத்தில் நாடகம் ப. 84
17. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - தொல்காப்பியம் பொருளதிகாரம் ப. 254
18. சிவதம்பி. கா - பண்டை தமிழ்ச் சமூகத்தில் நாடகம் ப. 204
19. பக்தவச்சல பாரதி - பாணர் இனவரைவியல் ப. 107
20. இரா.இளங்குமரன் - பாணர் ப. 141
21. மேலது. ப. 142
22. இளம்பூரணர் (உ.ஆ) - தொல்காப்பியம் பொருளதிகாரம் ப. 356
23. பழனிவேல் - பாட்டு மரபும் எழுத்து மரபும் ப. 124

# இயல் மூன்று

## வேளிர் மரபு

சங்ககாலப் படைப்புகளான பாட்டும் தொகையும் குறிப்பிட்ட ஒரே காலத்தில் எழுந்த இலக்கியங்கள் அன்று. அவை பல நூற்றாண்டு காலமாகப் படைக்கப்பட்டுத் தொகுக்கப்பட்ட வரலாற்று ஆவணங்களாகத் திகழ்கின்றன. சங்க இலக்கியங்கள் இனக்குழு வாழ்க்கையிருந்து விடுபட்டு மெல்ல மெல்ல அரசு உருவாக்கத்தில் முகிழ்ந்த சீறூர் சமூகம் முதல் வேந்தர் கால சமூகம் வரையிலான பதிவாகத் திகழ்கின்றன. சங்க இலக்கியத்தில் சீறூர் சமூகத்தின் பதிவானது இனக்குழுச் சமூக அமைப்பின் இறுதி நிலையையும் வேந்தர் சமூகத்தின் தொடக்க நிலையையும் உள்ளடக்கி காணப்படுகிறது.

சங்க காலத்தில் தனித்தனிக் குழுக்கள் தங்களுக்கான அரசை உருவாக்கிய போது சிறிய நிலப்பரப்பை மையமாகக் கொண்டும் வேந்தர்களுக்கு ஆட்பட்டும் ஆட்சி செலுத்தியவர்களை மன்னர், முதுகுடி மன்னர், சீறூர் மன்னர் அல்லது குறுநில மன்னர்கள் என்ற பல நிலைகளில் குறிப்பிடப்பட்டுள்ளனர். இவர்கள் தமிழகத்தின் பழமையான ஆட்சியாளர்களாக வழிவழி நின்று ஆட்சி செலுத்தி வந்துள்ளனர். இவர்கள் பேரரசு உருவாக்கத்தில் பேரரசுக்கு உட்பட்டு அரசு புரிந்தும் சில காலங்களில் பேரரசை எதிர்த்துத் தனித்தும் அரசு புரிந்துள்ளனர். இவர்கள் முடிவேந்தர்களுக்குப் போர்க்காலங்களில் படை உதவி புரிந்தும் சில சமயங்களில் படைத் தளபதிகளாகவும் செயல்பட்டு வந்துள்ளனர்.

இலக்கியச் சான்றுகளின் அடிப்படையில் பெரும் நிலப்பரப்பை ஆண்டு வந்த வேந்தர்களுக்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றப்படும் பெருமைக்குரியவர்கள் குறுநில மன்னர்கள். இவர்களைச் சங்க இலக்கியங்கள் வேளிர்கள் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. இருப்பினும் சில குறுநில மன்னர்கள் மட்டும் தங்களை 'வேளிர்' என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளனர். உதாரணமாக, வேள் பாரி, வேள் ஆவி போன்றோரைக் குறிப்பிடலாம். வேளிர் என்பார் தனிப்பிரிவினர் என்று குறிப்பிடுவாரும் உண்டு. இருப்பினும் வேந்தர் அல்லாத சீறூர் மன்னர்களை வேளிர் என்ற பொதுப்பெயரால் அழைத்தல் பொருத்தமுடையதாகும். இவ்வேளிர்கள் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் சிறப்புற ஆண்டு வந்துள்ளனர். இவர்களின் நாட்டு வளத்தினையும் ஆட்சி அமைப்பினையும் சங்கப் புலவர்கள் சிறப்பித்துப் பாடியுள்ளனர். முடிவேந்தர்களைப் போலவே வேளிர்களும் தமது குடிமக்களைச் சிறப்புறப் பாதுகாத்து வந்தனர். வேளிர்களில் பலர் கொடை

வள்ளல்களாகவும் போர்த்திறம் மிக்கவர்களாகவும் திகழ்ந்துள்ளனர். இத்தகைய வேளிர்களின் இயல்பை ஆராயும் விதமாக வேளிர் மரபு என்னும் இவ்வியல் அமைகிறது.

### 3.1 வேளிர் சொல்லாட்சி

வேளிர் என்ற சொல்லாட்சி 'வேள்' என்னும் அடிச் சொல்லிலிருந்து உருவானதாகும். 'வேள்' என்னும் அடிச்சொல்லுடன் 'இர்' என்னும் விகுதி இணைந்து 'வேளிர்' என வழங்கப்பட்டிருக்க வேண்டும். வேளிருக்கான அடிச்சொல்லாக வேள் என்னும் சொல்லே அமைந்துள்ளது. இதனைப் புறப்பாடலில் சில மன்னர்களின் பெயரொட்டாக வரும் வேள் என்னும் சொல்லாடலைக் கொண்டு உறுதி செய்யலாம். மேலும், வேளிர்களை பெரும் கொடை வள்ளல்களாகவே சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இவர்களின் வள்ளல் தன்மையை அடியொற்றியே இவர்களுக்கு வேளிர் என்ற பெயர் தோன்றிருத்தல் இயலும். மேலும்,

> "தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
>
> வேளாண்மை செய்தல் பொருட்டு" (குறள். 212)

என்ற வள்ளுவர் கூற்றில் வரும் வேளாண்மை என்பதற்குத் "தகுதியுடையோர்க்குப் பல்வகையிலும் உதவி செய்தல் பொருட்டேயாம்"[1] என்று தேவநேய பாவணர் விளக்கம் தருகிறார். எனவே, பிறருக்குப் பொருள் வழங்குதலையே அடிப்படையாகக் கொண்டுள்ளமையால் வேளாண்மை என்ற பொருள் படும் வேளிர் என்ற சொல் அவர்களுக்கு வழங்கப்பட்டிருக்க வேண்டும்.

### 3.2 வேளிர்கள்

வேந்தர்களின் ஆட்சிக்குட்பட்டு விளங்கிய சீறூர் மன்னர்களே வேளிர்கள் என அழைக்கப்பட்டனர். பண்டைய சமூகத்தில் வேளிர்கள் முடியுடை மன்னர்க்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றப்பட்டனர். இவர்கள் பழந்தமிழகத்தின் பெரும்பகுதியை ஆட்சி செலுத்தி வந்தனர். வேளிர்களின் குடிப்பெருமையைப் பரணர், 'தொன்முதிர் வேளிர்' என்று பாடிச் சிறப்பிக்கின்றார். சங்கப்பாடல்களில் வேளிர் குறித்த செய்திகள் பல இடங்களில் பேசப்பட்டுள்ளது.

''நாற்பத்தொன்பது வழிமுறை வந்த வேளிர்'' (புறம்.201)

''இருபெரு வேந்தரொடு வேளிர் சாய'' (மதுரை.55)

''வேந்தரும் வேளிரும் பின்வந்து பணிய'' (புறம்.7)

என்று வரும் பாடலடிகளால் வேளிர்களின் சிறப்பு அறியப்படுகிறது. பெண்பாற்புலவர்களின் பாடல்களில் பாண்டிய நாட்டைச் சார்ந்த வேள்பாரி, சோழநாட்டைச் சார்ந்த அழுந்தூர் வேள் திதியன், வேள் எவ்வி, வேள் எழினி ஆகிய மூவர் பற்றிய குறிப்புகள் புறநானூற்றில் காணக்கிடைக்கின்றன. மேலும், "சங்க காலத்தில் பழங்காலச் சிற்றரசு முறையின்று விடுபட்டு பலவகை அமைப்புகளுடன் பொருந்திய பேரரசு முறை தழைத்திருந்தது. அத்தகைய ஆட்சி முறையைக் 'குடிதழுவிய கோனாட்சி முறை' என்று குறிப்பிடலாம். மக்களால் விரும்பப்பட்டு மக்களுக்காக அரசோச்சிய மன்னர்களே ஆண்டு வந்தனர்."[2] என்று அரங்க. இராமலிங்கம் குறிப்பிடுவதிலிருந்து சிற்றரசு முறையிலிருந்து விடுபட்டு பேரரசு உருவாக்கத்தின் போது பல வேளிர்களையும் முதுகுடி மன்னர்களையும் ஒருங்கிணைத்து பேரரசு முறை தோற்றம் பெற்றதையும் அதில் மக்கள் நலனே போற்றப்பட்டதையும் இதனால் வேளிர்களுக்கு மக்கள் மத்தியில் பெரிய அளவிலான ஆதரவும் இருந்துள்ளதையும் மூலம் அறியலாம்.

இத்தகைய வேளிர்களைப் பற்றிய நிலைப்பாடு தமிழ்ச் சான்றோரிடையே இருவித கருத்துக்கள் காணப்படுகின்றன. தமிழகத்தின் தொன்மை தொழிலான வேளாண்மைத் தொழிலை அடிப்படையாகக் கொண்ட பூர்வக் குடிகள் என்றும் வடதிசையிலிருந்து புலம்பெயர்ந்த கண்ணன் குடியினர் என்றும் சுட்டுவர்.

### 3.2.1. புலம்பெயர்ந்த வடநாட்டவர்

வேளிர் பற்றிய புராணக் குறிப்புகளை நச்சினார்க்கினியரும் கபிலரும் சங்க இலக்கியப் பதிவு வாயிலாகத் தருகின்றனர். சிவபெருமானின் திருமணத்தின் போது வடதிசை நிலமானது தாழ்ந்து தென்திசை நிலம் உயர்கிறது. நிலனைச் சமன் செய்வதற்காக இறைவன் அகத்தியரிடம் வேண்டுகிறார். அதன்படி அவர் தென்திசை நோக்கி வருகின்றார். அவ்வாறு அவர் வரும் போது அவருடன் சிற்றரசர் பதின்மரும் உடன் வந்து தென்திசையில் உள்ள காடுகளைத் திருத்தி தங்களின் ஆட்சியை நிறுவுகின்றனர் இதனை "யாம் சேரவிருத்தலின் மேருந் தாழ்ந்து தென்றிசை உயர்ந்தது, இதற்கு அகத்தியனாரோடு ஆண்டிருந்தர்குரியர் என்று

அவரை வேண்டிக்கொள்ள அவரும் தென்றிசைக்கட்போதுகின்றவர் துவராபதிப்போந்து நிலங்கடந்த நெடுமுடியண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும் பதினெண்குடி வேளிர் உள்ளிட்டாரையும் அருவாளரையுங் கொண்டு போந்து காடுகெடுத்து நாடக்கி"[3] என்ற புராணச் செய்தியை நச்சினார்க்கினியர் தொல்காப்பிய பாயிரவுரையில் எடுத்தியம்புகிறார். இக்கருத்தினைக் கபிலரும் இருகோவேளனைச் சிறப்பிக்கும் போது இருங்கோவேளிடம் வடபக்கத்து முனிவர்களின் ஓமகுண்டத்தில் தோன்றி நாற்பத்தொன்பது ஆண்டுகள் செம்பால் புனைந்து செய்ததையொத்த நெடிய மதிலையுடைய துவாரபதியை ஆண்ட வெறுப்பில்லாத கொடைத்தன்மை உடைய வேளிர் மரபில் வந்தவன் நீ எனப் புகழ்ந்து கூறுகிறார். இதனை,

> "உவரா ஈகைத் துவரை ஆண்டு
>
> நாற்பத்து ஒன்பது வழிமுறை வந்த
>
> வேளிருள் வேளே! விறற்போர் அண்ணல்" (புறம்.201)

என்ற அடிகளின் மூலம் உரைக்கிறார். இவ்விருவரின் கருத்தை அடியொற்றி மு.இராகவையங்காரும் வேளிர் என்பவர்கள் வடதிசையிலிருந்து தமிழகம் வந்தவர்கள் என்று தம் ஆய்வுரையில் சுட்டுகிறார். மேலும், வேளிர் என்பவர் யாதவர் குடியில் தோன்றிய கண்ணபிரானின் வழித்தோன்றல்கள் என்பதை, "வேளிரென்பவர் துவாரகாபதியாகிய கண்ணன்வழியினராயின், அவரை நாம் யாதவர் என்றே அழைக்கலாம்"[4] என்று கூறுகிறார். மேலும், வேளிர்களின் காலம் கி.மு10 ஆம் நூற்றாண்டு என்றும் அவர் குறிப்பிடுகிறார்.

### 3.2.2 வேளிர்கள் பூர்வக்குடிகளே

வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்ட தமிழ் மண்ணின் பூர்வ குடிகளே வேளிர்கள் ஆவர். அவர்கள் தமிழ் மண்ணின் மைந்தர்கள் வழி வந்தவர்கள். அவர்களின் மூதாதையர்கள் இனக்குழுச் சமூகமான பொதுவுடைமைச் சமூகத்தைச் சார்ந்தவர்கள். பொதுவுடைமைச் சமூகத்தில் உழுதுண்போரும் உழுதுவித்துண்போரும் ஒரு நிலையில் வைத்துப் போற்றப்பட்டனர். அவ்வகையில் இனக்குழு அரசு உருவாக்கத்தில் தலைமை நிலையிலிருந்த வேளிர்கள் உழுதுண்போராகவும் உழுதுவித்துண்போராகவும் அதாவது வேளாண்மைத் தொழிலில் நேரடியாகவும் பிறரை ஈடுபடுத்தி அதன் மூலம் உணவுப் பண்டங்களைப்

பெறும் நிலக் கிழாராகவும் இருந்துள்ளனர். வேந்தர் சமூகத்தில் இவர்கள் (வேளிர்கள்) வேந்தர்களின் படைத்தலைமையையும் ஏற்று அவர்களின் தண்ணடைத் தொழிலையும் ஏற்று செயல்பட்டு வந்தனர். இவர்களே வேந்தர்களுக்குப் பெண் கொடுக்கும் மரபினராகவும் இருந்துள்ளனர். இதனை, "தமிழ் வேந்தர்கள் என்போரும் தொடக்கக் காலத்தில் இனக்குழுத் தலைவராகவும் குறுநில மன்னராகவும் விளங்கியோர்களின் வழித் தோன்றல்களே ஆவர். அவர்களுக்குப் பெண் கொடுக்கும் மரபு வேளிர்களுக்கு உண்டு என்ற நச்சினார்க்கினியரின் உரைச் சான்று பகர்கிறது."[5] மேலும்,

"மன்னர் பாங்கிற் பின்னோ ராகுப" (தொல்.அகத். 30)

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு விளக்கம் தரும் நச்சினார்க்கினியர் "மன்னர் பின்னோரென்ற பான்மையான் முடியுடையோரும் முடியில்லாதோரும் உழுவித்து உண்போரும் உழுது உண்போருமென மன்னரும் வேளாளரும் பலரென்றார். வேளாண் மாந்தர்க்கு வேந்துவிடு தொழிலில் என்னும் மரபிற் சூத்திரங்களான வேளாளர் இருவகையரென்ப அரசரேவுந் திறமாவன பகைவர்மேலும் நாடுகாத்தான் மேலுஞ்சந்து செய்வித்தன்மேலும் பொருள்வருவாய் மேலுமாம்"[6] என்று குறிப்பிடுகிறார். இவர் கூற்றுபடி வேளிர் என்போர் உழுதுவித்துண்போராக அதாவது வேளாண் தொழில் செய்து செய்வித்து வாழ்பவரான வேளாண் குடியைச் சார்ந்தவர்கள் என்பது புலப்படுகிறது.

வேளிர்கள் மற்றும் அவர்களின் வழித்தோன்றல்கள் வேந்தர் ஆட்சி விரிவடைந்த போது அவர்களின் ஆட்சிக்குட்பட்ட நிலக் கிழாராகவும் காவிதி பட்டம் எய்தி வேந்துவிடு தொழிலில் ஈடுபட்டும் வேந்தர்களுக்கு மகட்கொடை கொடுப்போருமாகவும் இருந்துள்ளனர். இதனை, "உழுவித் துண்போர் மண்டிமாக்களும் தண்டத் தலைவருமாய்ச் சோழ நாட்டுப் பிடவூரும் அழுந்தூரும் நாங்கூரும் நாவூரும் ஆலஞ்சேரியும் பெருஞ்சிக்கலும் வல்லமும் கிழாரும் முதலிய பகுதியில் தோன்றி வேள் எனவும் அரசு எனவும் உரிமை எய்தினோரும் பாண்டியனாட்டுக் காவிதியப்பட்ட மெய்தினோருங் குறுமுடி குடிப்பிறந்தோர் முதலியோருமாய் முடியுடைவேந்தர்க்கு மகட்கொடைக்கு உரிய வேளாராகுப"[7] என்று தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினார்க்கினியர் குறிப்பிடுகிறார். எனவே, வேளிர்கள் தமிழகத்தின் பூர்வக் குடிகள் மட்டுமின்றி அவர்களின் முக்கியத் தொழிலாக உழுவித்தலும் உழுதலும் இருந்துள்ளதை அறியலாம். எனவே இவர்கள்

தமிழகத்தின் ஆதிக் குடிகள் என்பதையும் வேளாண் மரபைச் சார்ந்தவர்கள் என்பதையும் அனுமானிக்கலாம்.

### 3.3 இனக்குழுச் சமுதாய எச்சங்களும் வேளிர் சமூகமும்

வேளிர் சமுக மரபானது சங்க இலக்கியங்களில் சீறூர் மன்னர் சமுகமாகவும் இனக்குழு வாழ்வின் எச்சங்களாகவும் பதிவு செய்யப்பட்டுள்ளது. இனக்குழு வாழ்வின் எச்சங்களைக் குறிஞ்சி, முல்லை நிலம் சார்ந்த பகுதிகளில் காணமுடிகின்றது. புறநானூற்றில் காலத்தால் முந்தியனவாக வரும் பாடல்கள் பலவும் பேரளவில் இவ்விரு திணைகள் சார்ந்தனவாகவே உள்ளன. இனக்குழுச் சமூகம் முடிவில் சீறூர் மன்னர்களின் தலைமையில் புதிய அரசு அமைவதற்கான சூழல்கள் தோற்றம் பெறுகின்றன. இந்தச் சூழலை மையமாகக் கொண்ட பல பாடல்கள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. “இனக்குழு வாழ்வு முறை அழிந்து நிலவுடைமையாக மாறுகின்ற சூழலில் பழைய சமுதாயத்தின் எச்சங்களும் நிலவுவது இயல்பே - இனக்குழு அழிவு முழுமையாக இராமல் அரைகுறையாக இருந்தால் இனக்குழு மக்களின் சிந்தனைகள், நம்பிக்கைகள், பண்பாட்டு எச்சங்கள் அதற்கடுத்து உருவாகும் சமுதாயத்தில் எஞ்சி நிற்கும்”[8] என்று தேவி பிரசாத் சட்டோபாத்யாயா கூறுவது குறிப்பிடத்தக்கது. இந்த வகையில் இனக்குழுச் சமுதாயத்தின் எச்சங்களைத் தாங்கிய சங்கச் சமுதாயமாகச் சீறூர் மன்னரின் சமுதாயங்கள் உள்ளன.

இந்த இனக்குழுச் சமுதாய எச்சங்களை ஆராய்ந்த கா.சுப்பிரமணியன் “உணவு சேகரித்தலும் வேட்டையாடுதலும் முதலில் உலகெங்கும் நிலவிற்று. ஆனால், அதைத் தொடர்ந்த மாறுதல்கள் அந்தந்தச் சூழல்நிலையைப் பொறுத்ததாயிற்று. சில இடங்களில் கால்நடைப் பொருளாதாரத்திற்கும், விவசாயப் பொருளாதாரத்திற்கும் மாறியது. இவற்றின் முன்னேற்றம் இனக்குழு முறை அழிய வழி செய்தன”[9] என்று கூறுகிறார். “சங்க இலக்கியம் காட்டும் சமுதாயம், மன்னர் எனும் அரசியல் தலைவனுக்குரிய இயல்புகள் அற்ற, சீறூர் மன்னர் எனக் குறிப்பிடப்படும் இனக்குழுத் தலைவரின் தம் செயற்பாடுகளாகப் பொதுவாழ்வில் ஈடுபட்டு விருந்து பேணுதல், அறமாண்பினராக, வீரம் செறிந்த முதுகுடி மகளிராக விளங்கிய தலைவியரின் அறமறம் சார்ந்த சமுதாய செயற்பாடுகளையும் கொண்டனவாகவே உள்ளன. ஓரி, அதியமான், ஆயண்டிரன், பேகன், போன்றவர் பற்றிய பாடல்கள் இதற்குச் சான்று”[10] என்று பெ.மாதையன் கூறுவதும் குறிப்பிடத்தக்கது. எனவே, சீறூர் மன்னர்கள் வாழ்வில் இனக்குழு சமூகத்தின்

தாக்கம் பெரிய அளவில் இருந்ததும் அவை அரசு உருவாக்கத்தை முதன்மையாகக் கொண்ட வேந்தர் சமூக அமைப்பிற்குள் ஆட்படும் போது இனக்குழு வாழ்வின் கூறுகள் குறைந்து காணப்படுவதையும் சீறூர் சமூக வாழ்க்கை எடுத்தோதுகிறது.

### 3.4.1 சீறூர் இயல்பு

சீறூர் மன்னரின் சமுதாயம் முழுக்க முழுக்க வானம் பார்த்த பூமியான புன்செய் நிலத்தை அடிப்படையாக உடையது. அதிலிருந்து கிடைக்கக்கூடிய வேளாண் பொருட்களான அவரை, கொள், தினை, வரகு போன்றவையே அவர்களின் முக்கிய உணவாக இருந்துள்ளது. இந்தச் சமுதாய நிலம் வன்புலச்சீறூர், புன்புலம் தழீஇய அம்குடிச் சீறூர் எனப் புறநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. சிறுவர்கள் உடைவேல மரத்தின் முள்ளை ஊகம் புல்லின் கோலில் செருகி அதை வில்லில் வைத்து எய்து காட்டெலியை வேட்டையாடும் நெல் விளையாத புன்செய் நிலமாகவே இருந்துள்ளதாக அவர்களின் நிலம் காட்சிப் படுத்தப்பட்டுள்ளது. இதனை,

“ஊக நுண் கோல் செறித்த அம்பின்,

வலாஅர் வல்வில் குலாவரக் கோலி,

பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும்

புன் புலம் தழீஇய அம் குடிச் சீறூர்” (புறம். 324)

என்ற பாடல் அடிகளின் மூலம் அறியலாம். பாடிச் செல்லும் பரிசிலர்க்கு வழங்குவதற்கு அன்றிப் புலவு வரி செலுத்துதற்கும் இயலாத வருவாயை உடையதாக அவர்களின் வாழ்விடம் அமைந்துள்ளது. தமது உணவுத் தேவையை நிறைவுசெய்து கொள்வதற்கான நீர்வளமோ நிலவளமோ இல்லாத இந்தச் சமுதாயத்தில் கிணறே நீர்த்தேவைக்கான ஆதாரமாக இருந்துள்ளது.

“பூவல் படுவில் கூவல் தோண்டிய

செங்கண் சில்நீர் பெய்த சீறில்

முன்றில் இருந்தமுதுவாய்ச் சாடி” (புறம்.319)

என்ற பாடல் அடிகள் கிணற்று நீரே சீறூர் சமூகத்தின் நீர்த்தேவையின் ஆதாரமாக இருந்துள்ளதை உணர்த்துகிறது. மேலும், நீர்நிலைகள் களிறுகள் கலக்கியதால் உண்ணுதற்கு அரிதான நீரையுடையதாகவும் மழை பெய்ததால் தேங்கியுள்ளதும் பசுக்கள் உண்ட பின்னர் எஞ்சியுள்ளதுமான சேற்று நீரை உண்ணும் இயல்புடையவர்களாக இவர்கள் புறநானூற்றில் காட்டப்பட்டுள்ளனர்.

### 3.4.2 சீறூர் மன்னர் இயல்பு

புன்செய் வேளாண்மையையும் வில் கொண்டு வேட்டையாடும் தன்மையையும் அடிப்படையாகக் கொண்ட சீறூர்த் தலைவன் சமூகம் மிகவும் வறுமையுற்றதாகவும் மிகப் பின்தங்கிய சமுதாயமாகவும் சங்கப் பாடல்களில் காட்டப்பட்டுள்ளன. சீறூர் மன்னர்கள் தங்கள் குடிகளின் அல்லது குழுக்களின் நலனையும் அவர்களது பழமையான பண்பாட்டைப் பெரிதும் பேணுபவர்களாகவும் இருந்துள்ளனர். “இனக்குழுச் சமுதாய எச்சங்களைத் தாங்கிய, வன்புலச் சமுதாயத் தலைவர்களான சீறூர் மன்னர்களின் இயல்பும் சீறூர்த் தலைவியரின் சமுதாயத் தொடர்பும் இச்சமுதாய வழிபாட்டுமுறைகளும், உணவு முறைகளும், போர் நோக்கங்களும் சமுதாய நலம் பேணுதல் என்பதை மட்டுமே மையமாகக் கொண்டிருந்தன. புலவர்களால் வரவேற்கத்தக்க பண்புடையவராயச் சீறூர் மன்னர் இருந்துள்ளார். சங்க பாடல்களில் இவர்கள் வீரம் சார்ந்த பெயர்களாலும் மன்னர் எனும் பெயராலும் மட்டுமே குறிப்பிடப்பெற்றுள்ளனர்”[11] என்று சீறூர் மன்னர்களின் இயல்புகளாகப் பெ.மாதையன் கூறுவது குறிப்பிடத்தக்கது. இதனை,

“புன் காழ் நெல்லி வன் புலச் சீறூர்க்

குடியும் மன்னும் தானே கொடி எடுத்து

நிறை அழிந்து எழுதரு தானைக்குச்

சிறையும் தானே தன் இறை விழுமுறினே” (புறம்.314)

எனும் இப்பாடல் வரிகள் சுட்டுகின்றன. மேலும், ‘குமிழம் பழங்களை உண்ணும் வெள்ளாட்டின் புழுக்கைகள் பரந்து கிடக்கின்ற வலியக் கால்களை உடைய பந்தலின்கீழ் இடையன் கொளுத்திய சறுதீயின் வெளிச்சத்தில் பாணர் குழாத்துடன் வீற்றிருந்த நாணமாகிய நற்பண்பை உடைய தலைவன்’ என்று சீறூர் மன்னர் பாணரொடு இருந்த நிலையைக் காட்டுகிறது. சீறூர் தலைவர்கள் எப்பொழுதும் தன் சுற்றத்தார்கள் வீற்றியிருக்கும் பொதுவான இடத்திலேயே இருந்துள்ளனர்.

அவர்களுக்கென தனி இடமோ தனி இருக்கையே இல்லாமல் இருந்துள்ளனர். இதனை

“குமிழ் உண் வெள்ளை பகு வாய் பெயர்த்த

வெண் காழ் தாய வண் கால் பந்தர்,

இடையன் பொத்திய சிறு தீ விளக்கத்து,

பாணரொடு இருந்த நாணுடை நெடுந்தகை” (புறம்.324)

என்ற பாடல் அடிகள் காட்டுகின்றன. சீறூர் மன்னர்கள் எதன் மீதும் பற்றற்ற நிலை உடையவராகவும் தன்னிடமுள்ள உணவுப் பொருட்கள் மிகச் சிறிதளவாக இருந்தாலும் வந்தவர்களுக்கு அளிக்கும் இயல்பு உடையவனாகவும் தன் குடிக்காகத் தன்னிடமுள்ள பொருளைப் பணயம் வைத்து அவர்களுக்கு உபசரிப்பு நிகழ்த்த வேண்டும் என்ற சீரிய நோக்கம் கொண்டவர்களாகவும் இருந்துள்ளனர். இக்கருத்தினை “உளநிலையில் மிக உயர்ந்த பண்புடைய தலைவனை உடைய சமுதாயமாகச் சீறூர் மன்னரின் சமுதாயத்தில் உடைமையாளரும் இருந்ததற்கான சான்றுகளையும் இந்தச் சமுதாயம் சார்ந்த பாடல்களில் காணமுடிகின்றது”[12] என்று ராஜ் கௌதமன் குறிப்பிடுகிறார். இதனை

“கைப்பொருள் யாதொன்றும் இலன்” (புறம்.313)

“வரகு கடன் இரக்குமி நெடுந்தகை” (புறம்.327)

“.....................................குறிப்பின்

இல்லது படைக்கவும் வல்லன் உள்ளது

தவச் சிறிது ஆயினும் மிகப் பலர் என்னாள்,

நீள் நெடும் பந்தர் ஊண் முறை ஊட்டும்” (புறம்.331)

என்ற பாடலடிகள் காட்டுகின்றன. மேலும், வேளிர்களைச் சீறூர் மன்னர் என்றழைக்கும் போக்கு சங்க இலக்கியப்பதிவுகளில் காணப்படுகின்றன

"பாணரொடு இருந்த நாணுடை நெடுந்தகை

வலம் படு தானை வேந்தர்க்கு

உலந்துழி உலக்கும் நெஞ்சு அறி துணையே." (புறம். 324)

என்ற பாடலில் பாடப்பட்டோர் குறிப்பு கிடைக்காத போதும் வேளிர்களின் இயல்பான பாணர்களைப் போற்றுதலையும் வேந்தர்களுக்கு உறுதுணை புரிதலையும் சுட்டப்பட்டுள்ளது. எனவே இப்பாடல் வேளிரைப் பற்றிய பாடலாகக் கருதலாம். இப்பாடலில் சீறூர் மன்னரின் இயல்பு சுட்டப்பட்டுள்ள நிலையில் சீறூர் மன்னர் என்போர் வேளிர்கள் என்பதை அனுமானிக்க இப்பாடல் இடம் தருகிறது.

### 3.4.3 வழிபாடு

வீரவணக்கம் சங்க இனக்குழுச்சமுதாயத்தின் பெருவழக்குடைய முனைப்பான வழிபாட்டு முறையாய் இருந்துள்ளது. மாடுபிடி சண்டையில் இறந்து பட்டவர்க்கு நடப்பட்ட நடுகற்களே இவ்வீர வழிப்பாட்டிற்கான அடிப்படைகளாய் இருந்துள்ளன. கால்நடைப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்ட இச் சமூகத்தில் நடந்த வெட்சி, கரந்தை போர்கள் மிக முக்கியமான அல்லது தவிர்க்கமுடியாத போர்களாக இருந்துள்ளன. இப்போரில் வீர மரணம் அடைந்த அனைவருமே அச்சமுதாயத்தினரால் மதிக்கப் பெற்று அவர்களுக்கு நடுகல் எழுப்பி வழிபடவும் செய்தனர். இதனை, "உடைமை காத்த கரந்தை வீரரை இறப்புக்குப் பின்னும் நடு கல்லாய்த் தம்மோடு வாழ்பவராகக் கருதியுள்ளனர். அதனால் நடுகல் வழிபாடு பெருவழக்காய் இருந்துள்ளது"[13] என்று பெ.மாதையன் குறிப்பிலிருந்து பெறப்படுகிறது. ஆரியப் பண்பாடு நுழையாத தூய்மையான தமிழ்ச் சமூகமான சீறூர் மன்னர் சமூகத்தில் நடுகல் வழிபாடு வழிபாட்டுமுறை மட்டுமே இருந்துள்ளது. இதனை,

"வீளை அம்பின் விழுத் தொடை மழவர்

நாள் ஆ உய்த்த நாம வெஞ் சுரத்து

நடை மெலிந்து ஒழிந்த சேண் படர் கன்றின்

கடைமணி உகுநீர் துடைத்த ஆடவர்

பெயரும் பீடும் எழுதி, அதர்தொறும்

பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்
வேல் ஊன்று பலகை வேற்று முனை கடுக்கும்
வெருவரு தகுந கானம், நம்மொடு” (அகம். 131:6-13)

என அகநானூறும்

“அரிது உண் கூவல், அம் குடிச் சீறூர்
ஒலி மென் கூந்தல் ஒள் நுதல் அரிவை
நடுகல் கை தொழுது பரவும், ஒடியாது
என்னையும்” (புறம்.306)

“ஒன்னாத் தெவ்வர் முன் நின்று விலங்கி,
ஒளிறு ஏந்து மருப்பின் களிறு எறிந்து வீழ்ந்தென,
கல்லே பரவின் அல்லது,
நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே.” (புறம்.335)

ஆகியவாறு புறநானூறும் சீறூர் சமூகதின் நடுகல் வழிப்பாட்டை எடுத்தியம்புகிறது.

### 3.4.4 உடைமைப்பண்பு உருவாக்கம்

சங்க காலம் பொதுவுடைமை நிலையிலிருந்து நிலவுடைமைச் சமுதாயமாக மாறுகிற காலம். எனவே, சங்க இலக்கியங்களில் பொதுவுடைமைச் சமூகப் பண்புகள் மிகுதியாகவும் உடைமைப் பண்புகள் குறைவாகவும் காணப்படுகிறது. இனக்குழுச் சமுதாயத்தின் எச்சங்களைத் தாங்கிய சீறூர் மன்னர் சமுதாயத்தில் உடைமைப் பண்பின் தோற்றுவாய் மட்டுமே காண முடிகிறது. அது முதுகுடி மன்னர், குறுநில மன்னர் வாழ்க்கைமுறையில் நிலைத்து வேந்தர் மரபில் முழுமையான உடைமைச் சமூகமாகத் தோற்றம் பெறுவதைக் காணமுடிகிறது.

சீறூர் மன்னர் சமூக அமைப்பானது இனக்குழுவின் பொதுமை சமூகத்தையும் அதிலிருந்து மாறுபடும் உடைமைச் சமூகத்தை நோக்கிய முதல்நிலை அமைப்பாக இருந்துள்ளது. “சீறூரமன்னர்களிடம் உடைமையோ கைப்பொருளோ இல்லாதவர்களாகவும் மிகவும் வறுமைப்பட்டவர்களாகவும்

பொருளைக் கடனாகப் பெற்று இரவலர்களைப் பேணுபவர்களாகவும் இரவலர்க்கு வரகையும் தினையையும் வழங்குபவர்களாகவும் விருந்து பேணுவதற்காக வாளையும் யாழையும் பணையமாக வைப்பவர்களாகவும், படலை உடைய சிறிய இல்லங்களில் வாழ்பவராகவும் காட்டப்பட்டுள்ளனர். ஊர்மக்களோடு பசித்திருத்தல், பொதுவாழ்வில் ஈடுபட்டு வந்த விருந்தினரைப் பேணி உணவளித்தல், விதைத்தினையைக் கூட உணவாக்கிப் போடுதல், விருந்தினரை வேண்டியும் தலைவன் வேந்துவிடுதொழில் பெற வேண்டியும் நடுகல்லை வழிபடுதல் எனும் இயல்பினராகச் சீறூர்த்தலைவியர் காட்டப்பட்டுள்ளனர்"[14] என்ற ராஜ் கௌதமன் கூற்று வாயிலாகத் தெளியலாம்.

சீறூர் மன்னர் கடன் பெறுதலும் பணையம் வைத்தலும் தனியுடைமைகளின் தோற்றத்திற்கான சான்றுகளாய் அமைந்துள்ளது. தண்ணடை அளித்தலும் பெறுதலும் இவர்களை உடைமையாளர்களாகவே மாற்றிவிட்டதைக் காட்டுகின்றன. இதனை,

"எருதுகால் உறாஅது இளைஞர் கொன்ற

சில்விளை வரகின் புல்லென் குப்பை

தொடுத்த கடலர்க்குக் கொடுத்த மிச்சில்

..........................................

வரகுகடன் இரக்கும் நெடுந்தகை" (புறம்.327)

"குறித்து மாறு எதிப்பை பெறாஅ மையின்

குரல் உணங்கு விதைத்திளை உரல்வாய்ப் பெய்து

சிறிது புறப்பட்டன்றோ இலளே" (புறம்.333)

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம். பொருளை அடகாகப் பெற்றுப் பொருளைக் கடனாகத் தரும் உடைமையாளர்கள் சீறூர் சமூகத்திலிருந்ததை இது காட்டுகின்றது. மேலும், கடன் கேட்பவர், அதைத் தருபவர் (கடவர்) எனும் இருவகை நிலையினர் இருந்த உடைமைச் சமுதாய இருப்பை இது காட்டுகின்றது. "பண்டமாற்று என்பதிலிருந்து வேறுபட்டுப் பொருளைக் குறிப்பிட்ட அளவு பெற்று அதே அளவு திருப்பித் தரும் 'குறியெதிர்ப்பு' எனும் சமுதாயச் செயற்பாடு

இருந்ததை இவை வெளிப்படுத்துகின்றன. பிறரிடம் பொருளைக் கடனாகக் கேட்டுப் பெறுவது எனும் இந்தச் செயற்பாடும் உடைமை இருந்ததை, இன்னும் குறிப்பாகத் தனி உடைமை இருந்ததை வெளிப்படுத்துகின்றது."[15] என்று ராஜ் கௌதமன் குறிப்பிடுவது நோக்கத்தக்கது.

### 3.4.5 சீறூர் மன்னர்களின் விருந்தோம்பல் பண்பு

குறுநிலமன்னர் சமுதாயத்திலும் வேந்தரின் உடைமைச் சமுதாயத்திலும் கொடை என்பது பலவாகப் பேசப்பட்டிருக்கச் சீறூர் மன்னர் சமுதாயத்திலோ விருந்து பேணல் என்பதே உயர் பண்பாகக் காட்டப்பட்டுள்ளது. சீறூர் சமூகத் தலைவி ஊரோடு பசித்திருந்தமை, உடும்பை அறுத்துச் சுட்டுக் கறியைப் பகுத்துக் கொடுத்தமை இருந்த வரகும் தினையும் இரவலர்க்கு அளித்தமையால் தீர்ந்துபோனமை என அவர்களின் விருந்தோம்பல் பண்பு குறிப்பிடத்தக்கது. வன்புல வேளாண்மை பெண்ணை முதன்மைப்படுத்தியதாகவே இருந்துள்ளது. இதனை,

"தவச்சிறிது ஆயினும் மிகப் பலர் என்னாள்
நீள் நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்
இற்பொலி மகடூஉ" (புறம்.331)

"நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது
விருந்துஎதிர் பெறுகதில் யானே" (புறம்.306)

"பாணர் ஆர்த்தவும் பரிசிலர் ஓம்பவும்
ஊண்ஒலி அரவமொடு கைதூவாளே" (புறம்.334)

என்ற பாடல் அடிகள் சுட்டுகின்றன. மேலும், வேட்டையாடுதல், புன்செய் வேளாண்மை எனும் இரண்டும் இந்தச் சமுதாய அடிப்படைப் பொளாதார ஆதாரங்களாக இருந்த போதும் வன்புல வேளாண்மையில் நிரந்தர நிலவருவாய் இல்லாத சூழலில் வருவாய்க்கான ஆதாரமாகக் கருதப்படும் ஆண் வேந்துவிடு தொழில் வாயிலாகப் பொருளீட்டலும் ஈகையும் பரவலாக இலக்கியங்களில் பதிவுசெய்யப்பட்டுள்ளது.

புன்செய் வேளாண்மை வழி கிடைத்த விளைச்சல் மட்டுமல்ல வேந்துவிடு தொழில் வழி பெற்ற உணவுப் பொருளும் உடைமைகளும் கூடத்

தனியுடைமைக்கான ஆதாரமாகக் கொள்ளப்படாமல் சமுதாயம் முழுமைக்கும் உரியனவாகக் கொள்ளப்பட்டுப் பலருக்கும் வழங்கப்பட்டுள்ளன. இந்தப் பொதுப் துய்ப்பே இந்தச் சமுதாயப் பின்னடைவுக்கும் வேந்துவிடு தொழில் செயற்பாட்டுக்கும் காரணமாக இருந்துள்ளது. "சமுதாயப் பொது நன்மை நோக்கில் இந்தச் செயற்பாடு வேந்துவிடு தொழில் என்பது மீள்வழங்குகைக்குத் தேவையான பொருளைத் திரட்டுவதற்கான ஒரு சிறந்த ஆதாரமாகச் சீறூர் மன்னரால் மேற்கொள்ளப்பட்டது."[16] என்று கா.சிவதம்பி குறிப்பிடுவது நோக்கத்தக்கது.

"ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்

ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று

கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று

கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று" (புறம்.204)

எனக் குறுநிலமன்னர் சமுதாயத்தில், நிலவிய கேட்டுப்பெற்ற வழி தரும் ஈதல் இழிவானது எனக் கருதப்பெறும் கருத்துநிலைக்கு மாறாக ஈகையையே அடிப்படைப் பண்பாகக் கொண்டதாகச் சீறூர் மன்னர் சமுதாயம் இருந்துள்ளது. தண்ணடை (மருதநிலத்தூர்) பெற்று உடைமைச் சமுதாயமாக மாறினாலும் அந்த உடைமையும் பொதுத் துய்ப்பிற்கான ஆதாரமாகவே இருந்ததை

"வேந்துதொழி லயரு மருந்தலைச் சுற்றமொடு

நெடுநகர் வந்தென விடுகணை மொசித்த

மூரி வெண்டோள்

சேறுபடு குருதிச் செம்மலுக் கோஒ

..............................................

அலமருங் கழனித் தண்ணடை யொழிய

இலம்பா டொக்கற் றலைவற்கோர்

கரம்பைச் சீறூர் நல்கின னெனவே" (புறம்.285)

என்ற புறப்பாடல் வெளிப்படுத்துகின்றது.

### 3.5 முதுகுடிமன்னர்

முதுகுடி மன்னர்களைப் பற்றிய புறநானூற்றுப் பாடல்கள் வேந்தருக்கும் முதுகுடி மன்னருக்கும் இடைப்பட்ட போர் பற்றியனவாகவே உள்ளன. இதற்கு அடிப்படைக் காரணம் முதுகுடி மன்னர்கள் மருதநிலச் சமுதாயத் தலைவர்களாய் இருந்தமையே ஆகும். இந்தப் பாடல்கள் அனைத்திலும் இவர்களின் சமுதாயச் செயற்பாடு குறிப்பிடப் பெறவில்லை.

"பிணங்கு கதிர்க் கழனி நாப்பண், ஏமுற்று
உணங்கு கலன் ஆழியின் தோன்றும்
ஓர் எயில் மன்னன் ஒரு மட மகளே." (புறம். 338)

"விளங்குஇழைப் பொலிந்த வேளா மெல் இயல்,
சுணங்கு அணி வன முலை, அவளொடு நாளை
மணம் புகு வைகல் ஆகுதல் ஒன்றோ" (புறம். 342)

என இவர்கள் மருதநில உடைமையாளர்களாய்க் காட்டப்பட்டுள்ளனர். மலை போன்ற பல நெற்போர்களையும் நாட்காலத்தே கடாவிட்டுக் குவித்த நெற்குவியலையும் உடையவர்களாகவும் அந்நெல்லை வலிய வில் வீரர்களுக்கு நாளுணவாகக் கொடுக்கும் தொல்குடி மன்னராகவும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதனை,

"குன்று கண்டன்ன நிலைப் பல் போர்பு
நாள் கடா அழித்த நனந் தலைக் குப்பை
வல்வில் இளையர்க்கு அல்கு பதம் மாற்றாத்
தொல் குடி மன்னன் மகளே முன்நாள்" (புறம். 353)

என்ற புறப்பாடல் வாயிலாக அறியலாம். மேலும்,

“வருந்தின்று கொல்லோ தானே பருந்து உயிர்த்து

இடை மதில் சேக்கும் புரிசை,

படை மயங்கு ஆர் இடை, நெடு நல் ஊரே?” (புறம். 343)

என உடைமைப் பாதுகாப்பிற்கு எடுக்கப்பட்ட மதில், ஞாயில் இவற்றை உடையனவாய் முதுகுடி மன்னர் ஊர் காட்டப்பட்டுள்ளது. இவர்கள் பெரு நிலப்பரப்பை ஆண்ட வேந்தர்களாய்க் காட்டப்படாமல் ஊர்த்தலைவர்களாகவே காட்டப்பட்டுள்ளனர். தண்பணையூர், நெடுநல்லூர், கதுவாய் மூதூர், கன்று மேய்ந்து உகளும் ஊர், அருங்கடி மூதூர், பணைநல் ஊர், வேர் துளங்கிள நம் ஊருள் மரன், அணங்காயினள் தான் பிறந்த ஊர்க்கு, ஊர்களின் இழப்பவும் எனப் பல பாடல்களில் இவர்கள் ஊர் ஆண்டவர்களாகவே காட்டப்பட்டுள்ளனர். சீறூர் மன்னர்களைப் போல் இவர்களும் ஊர்த்தலைவர்களாகவே உள்ளனர். சீறூர் மன்னர் சமுதாயத்தைப்போலன்றி, இவர்களின் சமுதாயம் உடைமைச் சமுதாயமாய் மருதநிலப் பெருக்கத்தில் ஈடுபட்ட வேந்தர்களின் கவனத்தைக் கவரும் சமுதாயமாக இருந்துள்ளது.

### 3.6.1 வேந்துவிடு தொழிலும் நோக்கமும்

ஆட்சிப் பரப்பின் விரிவு என்பதை அடிப்படை நோக்கமாகக் கொண்டதால் வேந்தர்களுக்கு இந்தப் பகைவயின் பிரிவு நிலஎல்லைப் பெருக்கத்திற்கான முதன்மை நோக்கமாக இருந்துள்ளது. வேந்தர்களுக்கான போர்ப்பிரிவு என்பதால்தான் இது வேந்துவிடு தொழில் என அழைக்கப்பட்டுள்ளது. நில எல்லைப்பெருக்கம் அவர்களின் அடிப்படை நோக்கம் என்பதை,

“கழல் தொடி காரி

செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்

ஓரிக் கொன்ற சேரலர்க்கு ஈத்த

செவ் வேர்ப் பலவின் பயம்கெழு கொல்லி” (அகம்.209:12-15)

எனும் பாடல் கார் ஓரியைக் கொன்ற கொல்லிமலைப் பகுதியை வேந்தர்க்குக் கொடுத்த செயலை உறுதிப்படுத்துகிறது. இந்தக் தொழிலில் ஈடுபட்ட குறுநில மன்னர், சீறூர் மன்னர் ஆகியோரின் உணவுத்தேவையை நிறைவு செய்வதே இவர்கள் நோக்கம்.

"வேந்துதரு விழுக்கூழ் பரிசிலர்க்கு என்றும்

அருகாது ஈயும் வண்மை

உரைசால் நெடுந்தகை" (புறம்.320:16-18)

எனும் சீறூர் மன்னர் பற்றிய பாடலும்

"மூவருள் ஒருவன் துப்பாகியர் என

ஏத்தினர் தரூஉம் கூழே நும்குடி

வாழ்த்தினர் வரூம்உம் இரவலரதுவே" (புற.122:-7)

எனும் காரி பற்றிய பாடலும்

"ஈதல் ஆனான் வேந்தே வேந்தற்குச்

சாதல் அஞ்சாய் நியே" (புறம்.139:11,12)

எனும் நாஞ்சில் வள்ளுவன் பற்றிய பாடலும் இதை உறுதிப்படுத்துகின்றன. சங்ககால வேந்தர்கள் ஆளுமையின் ஒரு வெளிப்பாடாகவே வேந்துவிடுதொழில் இருந்துள்ளது. இது அவர்களின் வளர்ச்சிக்குப் பேரளவில் உதவியுள்ளது. வேளாளர் வேந்துவிடுதொழிலில் ஈடுபட்டமைக்குச் சங்கப்பாடல் சான்றுகள் ஏதுமில்லை என்றாலும் இத்தொழிலில் ஈடுபட்ட புன்செய் நிலத் தலைவர்களான சீறூர் மன்னர்கள் மருதநிலத்தூர்களைக் கொடையாகப் பெற்ற நன்செய் வேளாளர்களாக மாறியுள்ளனர். அகத்திணையில் இது முல்லைத்திணையில் மட்டுமே இடம்பெற்றிருந்தாலும் புறத்திணையில் குறிப்பிட்ட போர் முறைக்கு மட்டுமே உரியத் தொழிலாக இல்லை. வெட்சி, கரந்தை ஆகிய மாடுபிடி சண்டையிலும் தும்பை, வாகை முதலான நிலப்போர்களிலும் இந்த வேந்துவிடு தொழிலும் இடம்பெற்றுள்ளது. சமுதாயத்தின் உணவுத்தேவையை மட்டுமே நிறைவு செய்வதாகச் சமுதாய நல நோக்கமாக இருந்த இனக்குழுச் சமுதாயப் பண்பு காலப்போக்கில் நிலக்கொடை பெறும் உடைமை நோக்கமாக நிலவுடைமைப் பண்பாக மாறிப் போயுள்ளது.

### 3.6.2 வேந்துவிடு தொழிலில் வேளிரின் பங்கு

புறநானூற்றில் வேந்துவிடு தொழில் இடம்பெற்ற பெரும்பாலான பாடல்கள் சீறூர் மன்னர் சமுதாயம் சார்ந்த பாடல்களாகவே உள்ளன. வேந்தர் பொருட்டுப் போர்மேற்சென்ற சீறூர் மன்னரின் வீரமும் கொடையும் பற்றிய பாடல்களாகவே இவை உள்ளன.

"சீறூர்மன்னன் நெருநை ஞாங்கர்

வேந்துவிடு தொழிலொடு சென்றனன்" (புறம். 319:12-13)

எனப் பெயர் குறிப்பிடப்பெறாத சீறூர் மன்னரின் பகைவயின் பிரிவு பாடப்பட்டுள்ளது. மூதில் குடி சார்ந்த வீரர்கள் வேந்துவிடுதொழில்மேற் சென்ற செய்தியும் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன. குறுநில மன்னர்களில் காரியும் வள்ளுவனும் மத்தியும் வேந்துவிடு தொழிலை மேற்கொண்டுள்ளனர். வேளிர்கள் குறிப்பிட்ட வேந்தனுக்குத் துணையாகிப் பிற வேந்தரை எதிர்த்துள்ளனர். சேரனுடன் சேர்ந்து நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை ஆகியோர் பழையன் என்பவனை எதிர்த்த செய்தியும் கரிகாலன் பதினொரு வேளிர் துணையுடன் சேர, பாண்டியரை வெண்ணிவாயில் எதிர்த்து போரிட்டமையும் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன. இதனை

"வந்துவினை முடித்தனன் வேந்தனும் பகைவரும்

................................ ஒருவினை கழிய

நன்னன் ஏற்றை நறும்பூண் அத்தி

துன்னரும் கடுந்திறற் கங்கன் கட்டி

பொன்னணி வல்விற் புன்றுறை யென்றாங்

கன்றவர் குழீஇய அளப்பருங் கட்டூர்ப்

................................................

பிணையலங் கண்ணிப் பெரும்பூட் சென்னி " (அகம்.44)

"காய் சின மொய்ம்பின் பெரும் பெயர்க் கரிகால்

ஆர்கலி நறவின் வெண்ணிவாயில்,

சீர் கெழு மன்னர் மறலிய ஞாட்பின்

இமிழ் இசை முரசம் பொரு களத்து ஒழிய,

பதினொரு வேளிரொடு வேந்தர் சாய," (அகம்.246)

என்ற அகநானூற்றுப் பாடல்கள் எடுத்தியம்புகின்றன.

### 3.7.1.1 வேள் பாரி

சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பாண்டிய நாட்டின் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் பறம்பு என்ற மலை முந்நூறு ஊர்களைக் கொண்டு வளமுடன் திகழ்ந்தது. இத்தகைய சிறப்பு மிக்க மலையின் தலைவன் வேள் பாரி ஆவான். இவன் கடையேழு வள்ளல்களில் ஒருவனாகவும் முல்லைக்குத் தேர் ஈந்த பெருமையுடையவனாகவும் போற்றப்படுகிறான்.

பாரி இரவலர்க்கு வரையாது வழங்கும் தன்மையுடையவன். இம்மண்ணுலகில் தான் வாழும் காலம் வரை கொடைக் கொடுப்பதில் சிறந்தவனாகவே இருந்துள்ளான். மேலும், இவனது கொடைத் தன்மையானது வறியவர்களை நோக்கியே இருந்துள்ளது. சமூக நிலையில் பின்னடைவுப் பெற்ற கலைஞர்களான கூத்தர், விறலியர், பாணர்களை வாழ்விக்கும் தன்மை கொண்டவனாகப் பாரி திகழ்ந்துள்ளான். இதனை,

"சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி

விரையொலி கூந்தனும் விறலியர் பின்வர

ஆடினீர் பாடினீர் செலினே

நாடும் குன்றும் ஒருங்குஈ யும்மே" (புறம். 109)

என்ற கபிலரின் பொன் அடிகளின் மூலம் பெறலாம். இவ்வரிகள் பாரியின் கொடைத் தன்மையை மட்டும் பறைசாற்றாது அவனால் வாழ்விக்கப்பட்ட கலைஞர்கள் மீதும் கலையின் மீதும் பாரி கொண்ட பற்றினை எடுத்தியம்புகிறது.

#### 3.7.1.2 பாரியின் போர்த் திறன்

பாரி கொடை வள்ளல் மட்டுமின்றி சிறந்த போர் வீரனாகவும் திகழ்ந்துள்ளான். பாரியின் புகழ் மூவேந்தர் நாடுகளைக் கடந்தும் பரவியது. அதனைப் பொறாத மூவேந்தர்கள் பாரியின் பறம்பு மலையை வளைத்துக் கொண்டனர். மூவேந்தர்கள் இணைந்து படை எடுத்து வந்த போதிலும் பாரியை வெற்றி கொள்ள முடியவில்லை என்ற கபிலர் கூற்றின் மூலமாகப் பாரியின் போர்த்திறன் வெளிப்படுகிறது. இதனை,

“கல்லலைத்து ஒழுகும் மன்னே பல்வேல்

அண்ணல் யானை வேந்தர்க்கு

இன்னான் ஆகிய இனியோன் குன்றே” (புறம். 115)

“முரசுகடிப்பு இகுப்பவும் வால்வளை துவைப்பவும்

அரசுடன் பொருத அண்ணல் நெடுவரைக்

கறங்குவெள் அருவி கல்அழைத்து ஒழுகும்

பறம்பின் கோமான் பாரியும்” (புறம். 158)

என்ற பாடல் வரிகள் மூலம் அறியலாம். மேலும், “பறம்பு மலையில் உழுது விளைவிக்க வேண்டாமல் தாமே விளையும் காய்கனி கிழங்கு வகைகள் இருந்தமையால் பல நாட்களாகியும் அவர்களால் மலையைக் கைப்பற்ற முடியவில்லை மேலும் பாரியின் உற்ற நண்பராகிய கபிலர் அம்மலை நாட்டுக் கிளிகளைப் பழக்கிவிட அவை சேணெடும் தூரம் சென்று ஆங்கு விளைந்து முற்றியிருக்கும் நெற்கதிர்களைக் கொய்து கொண்டுவந்து தந்த வண்ணம் இருந்தன”[17] என்று போர்க்காலங்களில் பாரியின் செயல்பாட்டைப் புலவர் கா.கோவிந்தன் விவரிக்கிறார். இவரின் கூற்றை நோக்கும் போது பாரி போர்க் காலங்களில் தம் மக்களின் துயர் துடைக்கக் கபிலரின் துணையுடன் அருகிலிருக்கும் நெற் வயல்களிலிருந்து கிளிகளின் மூலமாக நெற்கதிர்களைக் கொணர்ந்து மக்களின் பசியைப் போக்கிய நிகழ்வும் பாரி தன் நாட்டு மக்கள் மீது கொண்ட பற்றும் அவனது வீரமும் அவன் மீது மக்கள் கொண்டிருந்த நிலைப்பாடும் நன்கு புலனாகிறது.

#### 3.7.1.3 பறம்பு மலையின் சிறப்பு

பாரியின் கொடைத்தன்மையைப் போலவே பாரியின் பறம்பு மலையும் சிறப்புடையது. இவ்விடத்து நின்றோர்க்குந் தோன்றும், சிறிது எல்லை போய் நின்றோர்க்குந் தோன்றும், நிச்சயமாய் யானை மென்று போடப்பட்ட கவளத்தினது கோதுபோல மதுப்பிழிந்து போடப்பட்ட கோதுடைத்தாகிய சிதறியவற்றினின்றும் வார்ந்த மதுச்சேறு ஒழுகும் முற்றத்தையுடைய தேர்வழங்கும் இருப்பையுடைய உயர்ந்தோனுடைய மலை என்று பாரியின் பறம்பு மலையைக் கபிலர் சிறப்பித்துப் பாடுகிறார். இதனை,

"ஈண்டுநின் றோர்க்குந் தோன்றுஞ் சிறுவரை

சென்றுநின் றோர்க்குந் தோன்று மன்ற

களிறுமென் றிட்ட கவளம் போல

நறவுப்பிழிந் திட்ட கோதுடைச் சிதறல்

வாரசும் பொழுகு முன்றிற்

றேர்வீ சிருக்கை நெடியோன் குன்றே." (புறம். 114)

என்ற பாடலின் வாயிலாக அறியலாம். மேலும், பாரியின் இறப்பிற்குப் பின் அவனது மகள்கள் தன் தந்தையை மட்டுமல்லாது தன் மலையையும் இழந்தோம் என்று பாடுவதிலிருந்து அம்மலைப் பாரியின் மகளிர்களுக்கும் மக்களுக்கும் எவ்வளவு வளமையானது என்பதும் பாரி தனது மலையை எவ்வாறு நேசித்தான் என்பதும் புலனாகிறது. இதனை,

"அற்றைத் திங்கள் அவ் வெண் நிலவின்,

எந்தையும் உடையேம் எம் குன்றும் பிறர் கொளார்

இற்றைத் திங்கள் இவ் வெண் நிலவின்,

வென்று எறி முரசின் வேந்தர் எம்

குன்றும் கொண்டார் யாம் எந்தையும் இலமே" (புறம். 112)

என்ற பாரி மகளிரின் கூற்றின் வாயிலாக அறியலாம்.

### 3.7.2.1 அதியமான் நெடுமான் அஞ்சி

சங்க காலத்தில் சிறப்புற்று விளங்கிய தகடூரைத் தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி செலுத்தியவன் அதியமான் நெடுமான் அஞ்சி ஆவான். இவன் சிறந்த வள்ளலும் போர் வீரனும் ஆவான். இவனுடைய நாடு பகைவர் எவரும் நுழைய முடியாத அளவிற்கு வீரர்களால் காவல் செய்யப்பட்டு வந்ததுள்ளது. இதனை, ஔவையார்,

"ஆர்வலர் குறுகின் அல்லது, காவலர்

கனவினும் குறுகாக் கடியுடை வியல் நகர்,

மலைக் கணத்து அன்ன மாடம் சிலம்ப, என்" (புறம்.390)

என்று கூறுகின்றார். மேலும், இவனது பெயரைப் பற்றிக்குறிப்பிடும் போது "அதியமான் என்பதற்கு 'அதிகர்' மரபில் தோன்றியவன் என்றும் 'அஞ்சி' என்பதே இவனது இயற்பெயர் என்றும் தம் பெயரையும் தாம் தோன்றிய குலமரபையும் இணைத்து 'அதியமான் நெடுமானஞ்சி' என்றும் அழைக்கப்பட்டான்."[18] என்று உ.வே.சா குறிப்பிடுகிறார். இதனை,

"கடுமான் றோன்ற னெடுமா னஞ்சி" (புறம்.206)

என்றும்,

"இழை அணி யானை இயல் தேர் அஞ்சி

அதியமான் பரிசில் பெறூஉம் காலம்" (புறம்.101)

என்றும்,

"மடவர் மகிழ்துணை நெடுமா னஞ்சி" (புறம்.315)

என்றும், புறநானூற்று அடிகள் சுட்டுகின்றன. மேற்காணும் பாடலடிகளை நோக்கும் போது அதிகர் என்பது சேர மரபில் வந்தவர்களைக் குறிப்பிடும் சொல்லாக இருத்தல் வேண்டும். இதனை, "அதியமான் குறுநில மன்னாக இருந்த போதிலும் சேரர் மரபைச்சார்ந்தவனாக இருத்தல் வேண்டும். அல்லது சேரர்களுக்கு ஆட்பட்டு ஆட்சி செலுத்திய குறுநில மன்னராக இருந்திருத்தல் வேண்டும். அதியமான் சேரர்க்குரிய பனம்பூ மாலையை அணிந்திருந்தான்"[19] என்ற ஔவை. சு.துரைசாமி

கூற்றின் வாயிலாகப் பெறலாம். மேலும் சேரர்களின் பனம்பூவை அதியமானுக்கு உரிமையுடையதாகப் புறப்பாடல் சுட்டுகின்றன.

“ஈகையங் கழற்காலிரும் பனம் படையல்” (புறம்.99)

என்ற ஔவையார் பாடல் மூலமும் இதனை அறியலாம். “அதியமான் தகடூர் பகுதி முழுவதையும் ஆண்டதோடு மட்டுமல்லாமல், குறும்பொறையூர், ஆரைக்கால் என்று அழைக்கப்பட்ட இன்றைய நாமக்கல் பகுதியையும் ஒரு சேர ஆண்டு வந்தான்” என்று கல்வெட்டுக்கள் கூறுவதாகப் புலவர் கோவிந்தன் குறிப்பிடுகிறார். பண்டைய தகடூராகத் திகழ்ந்த இன்றைய தருமபுரியில் இன்றளவும் அதியமான் கோட்டை என்னும் ஓர் ஊர் அதியமான் புகழைப் பறைசாற்றும் வண்ணம் இருந்து வருகிறது. மேலும், இவனது வாழ்வியல் குறித்த செய்திகளை “வடிவார் குழலி என்ற மங்கையை மணந்து உடலும் உயிரும் போல ஒன்றி இல்லறம் நடத்தினான். அவன் தன் தந்தை விண்ணுலகடைந்த பின்தான் அதியமான் குடையும், அவன் தன்னிடத்தே முறை வேண்டினோர்க்கு நடுநிலையறிந்து கூறும் விடையும் அவன் நாட்டு மக்களை மகிழ்வித்தான்.”[20] என்று உ.வே.சாமிநாதையர் கூற்றிலிருந்து பெறப்படுகிறது.

### 3.7.2.2 அதியமானின் பண்பு நலன்

அதியமான் தன் குடிமக்கள் போற்றும் அளவில் பொருள் இருந்த காலத்து அனைவருக்கும் உணவளித்தும், அவை இல்லாத நிலையில் தம்மிடம் இருப்பதைக் கொண்டு பலரோடு பகிர்ந்து உண்டும் வாழ்ந்தான். இத்தகைய குணமுடைய அதியமான் வறியவராகிய சுற்றத்திற்கெல்லாம் தலைவனாகவும் திகழ்ந்தான். இதனை,

“உண்டாயின் பதம் கொடுத்து,

இல்லாயின் உடன் உண்ணும்,” (புறம்.95)

என்று அவனது பண்பு நலன் சிறப்பித்துக் கூறப்படுகிறது. அதியமான் மிகுந்த வீரமுடையவனாக இருந்த போதும் அறநெறி தவறாது போர் போர் உண்டானபோது தீக்கடைகோலிலிருந்து வெளிப்படும் தீ போல் தன் வலிமையைப் பலரும் அறியும்படி வெளிப்படுத்தும் பண்புடையவனாகவும் திகழ்ந்தான். இதனை,

“பலர் குறை செய்த மலர் தார் அண்ணற்கு

ஒருவரும் இல்லை மாதோ, செருவத்து

சிறப்புடைச் செங் கண் புகைய, ஓர்

தோல் கொண்டு மறைக்கும் சால்பு உடையோனே.” (புறம்.315.)

என வரும் பாடலடிகள் எடுத்துரைக்கின்றன.

### 3.7.2.3 அதியமானின் கொடைத் திறம்

அதியமான் தம்மை நாடி வரும் வறியவர்க்குக் கைமாறு கருதாமல் பொழியும் மழைபோல் காலமும் இடமும் தகுதியும் பாராது கொடையளிக்கும் தன்மையுடையவன். இவனிடம் பரிசில் வேண்டி ஒரு நாள் சென்றாலும் இரு நாள் சென்றாலும், அவரே பல நாட்கள் பலரோடு சென்றாலும், முதல் நாள் எவ்வாறு முகமலர்ச்சியுடன் வரவேற்று வேண்டிய பொருட்களை விரும்பிக் கொடுத்தானோ அதேபோல் விருப்பத்துடன் கொடையளிக்கும் தன்மையுடையவனாக இருந்துள்ளான். இதனை,

“ஒரு நாள் செல்லலம் இரு நாள் செல்லலம்

பல நாள் பயின்று, பலரொடு செல்லினும்,

தலை நாள் போன்ற விருப்பினன்மாதோ” (புறம்.101)

என்றும் ஔவையார் அதியமானின் கொடைத்திறம் குறித்துக் கூறுகின்றார். மேலும், இவன் வறியவர்களை அரவணைத்துச் செல்லும் பண்பாளனாகவும் இருந்துள்ளான். வறியவர்க்குப் பொன்னையும் பொருளையும் தந்து உதவியதோடு பசிபோக உணவளித்து அவர்களோடு தானும் கலந்துண்ணும் பண்பாளனாகவும் இருந்துள்ளான். தம்மைச் சார்ந்து வாழ்பவாக்குக் கொடுப்பதைக் காட்டிலும், இல்லையென இரந்து வருபவர்க்கு அதிகம் கொடுத்து மகிழும் பண்பாளனாக விளங்கியுள்ளான். இத்தகைய கொடையாளனைப் பற்றி ஔவையார்,

“உடையன்ஆயின் உண்ணவும் வல்லன்

கடவர் மீதும் இரப்போர்க்கு ஈயும்

மடவர் மகிழ் துணை நெடு மான் அஞ்சி” (புறம்.315)

என்று சிறப்பித்துக் கூறுகின்றார். இவன் ஆண்டு வந்த தகடூர் உயர்ந்த மலைப்பகுதிகள் நிறைந்தது. அத்தகைய மலைப்பிளவின் உச்சியில் விளைந்த கருநெல்லிக்கனி ஒன்றை அதியமான் பெற்றான். அக்கனி உண்பவரின் வாழ்நாளை நீட்டிக்கச் செய்யும் தன்மை கொாண்டது. இதனை அறிந்த அதியமான், தான் கனியை உண்டு நீண்ட காலம் ஆட்சி செலுத்தி உலக இன்பங்களைப் பெறவேண்டும் என நினைக்காமல், புலமை சான்ற பெருமதிப்புடைய ஔவைக்குக் கொடுத்து உண்ணச் செய்தான். உண்ட பின்பு அக்கனியின் அருமை உணர்ந்த ஔவையார் இறைவனாகிய சிவபெருமான் தான் நஞ்சினை உண்டு அமுதினைத் தேவர்களுக்கு ஈந்ததுபோல் எனக்கு இறப்பினை உண்டாக்காத கனியைத் தந்து ஆயுளை நீட்டிக்கச் செய்த அதியமான் பிறைச் சந்திரனைத் தலையில் சூடியிருக்கும் சிவனைப்போல் நெடுங்காலம் வாழவேண்டும் என வாழ்த்தினார். இதனை,

"வலம் படு வாய்வாள் ஏந்தி, ஒன்னார்
களம் படக் கடந்த கழல் தொடித் தடக் கை,
ஆர் கலி நறவின், அதியர் கோமான்!
போர் அடு திருவின் பொலந் தார் அஞ்சி!
பால் புரை பிறை நுதல் பொலிந்த சென்னி
நீலமணி மிடற்று ஒருவன் போல" (புறம்.91)

என்று ஔவையார் பாடிச் சிறப்பிக்கின்றார். அதியன் ஔவைக்கு நெல்லிக்கனி கொடுத்த செய்தியைச்

"ஆர்வ நன் மொழி, ஆயும் மால் வரைக்
கமழ் பூஞ் சாரல் கவினிய நெல்லி
அமிழ்து விளை தீம் கனி ஔவைக்கு ஈந்த,
உரவுச் சினம் கனலும் ஒளி திகழ் நெடுவேல்,
அரவக் கடல் தானை, அதிகனும் கரவாது" (சிறுபாண்.99-103)

என்று சிறுபாணாற்றுப்படையும் உறுதிப்படுத்துகிறது. ஔவைக்கு நெல்லிக்கனி கொடுத்த நிகழ்வே அதியமானைக் கடையேழு வள்ளல்களில் ஒருவனாகத் திகழ காரணமாக இருந்துள்ளதை உணரலாம்.

### 3.7.2.4 அதியமானின் வீரமும் வெற்றியும்

அதியமான் சிறந்த கொடையாளியாக விளங்கியதோடு மட்டுமின்றி சிறந்த வீரனாகவும் இருந்துள்ளான். புலியின் சீற்றத்திற்கு முன் மான் கூட்டம் நிற்காது. இருள் நிறைந்த வானமும் திசைகளும் சூரியன் உதித்தால் அங்கு இருள் தங்காது. அதுபோல அதியமான் போர்க்களம் புகுந்தால் பகைவர் எவரும் எதிர்த்து நில்லாமல் அஞ்சி ஓடுவர் என்று ஔவையார் அதியமானின் வீரத்தைப் புகழ்ந்துள்ளார். இதனை,

“இருளும் உண்டோ, ஞாயிறு சினவின்?

அச்சொடு தாக்கிப் பார் உற்று இங்கிய

……………………………………

வழு இல் வன் கை, மழவர் பெரும!

இரு நிலம் மண் கொண்டு சிலைக்கும்

பொருநரும் உளரோ, நீ களம் புகினே?” (புறம்.90)

என்ற அடிகள் மூலம் தெளியலாம். மேலும், இவன் நாள் ஒன்றுக்கு எட்டுத் தேர்களைச் செய்யும் தச்சன் ஒரு மாத காலம் முயன்று ஒரு தேரினை மட்டுமே செய்தால் அத்தேர் எத்தகைய வலிமையுடையதாகவும் செப்பமுடையதாகவும் இருக்குமோ அதேபோல் வீரம் நிறைந்தவன் என்பதை,

“களம் புகல் ஓம்புமின், தெவ்விர்! போர் எதிர்ந்து,

எம்முளும் உளன் ஒரு பொருநன் வைகல்

எண் தேர் செய்யும் தச்சன்

திங்கள் வலித்த கால் அன்னோனே.” (புறம்.87)

என்று ஔவையார் சிறப்பித்துக் கூறுகிறார். சுமை ஏற்றப்பட்ட வண்டியின் சக்கரம் நிலத்தில் அமிழ்ந்தாலும் அதைத் தம் முயற்சியால் மேலிழுத்துச் செல்லும்

எருதுகள் போல அதியமான் எத்தகைய தடைகளையும் பாராமல் போர்க்களம் புகுந்து தமது வீரத்தால் வெற்றி பெறுபவன் என்பதை ஔவையார்,

"வரி மணல் ஞெமர, கல் பக, நடக்கும்

பெருமிதப் பகட்டுக்குத் துறையும் உண்டோ?" (புறம்.90)

என்ற பாடல் அடிகளால் விளக்குகிறார். அதியமான் மிகுந்த வலிமையுடையவனாகவும் தன்னை எதிர்த்து வரும் பகைவர்களை அழித்தொழிக்கும் தன்மையுடையவனாகவும் இருந்துள்ளதை உணரலாம்.

### 3.7.2.5 அதியமானின் படைபலம்

அதியமானது போர்ப்படையில் திறன்மிகுந்த போர்வீரர்கள் இருந்துள்ளனர். அவர்கள் எந்நேரமும் போருக்கு ஆயத்தமான நிலையில் போரை எதிர் நோக்கி வாழ்பவராக இருந்துள்ளனர். காற்று வீசியதால் அசைவு ஏற்பட்டுப் போர் முரசு ஒலித்ததைப் போர் வந்ததாகக் கருதி மகிழ்ச்சி கொள்ளும் தன்மையுடையவர்களாக இருந்துள்ளனர். அடிக்கும் கோலுக்கு எதிர்த்து வரும் பாம்பு போன்று போர்க்களத்தில் எதிரிகளைக் கண்டு அஞ்சாது எதிர்த்து நிற்பவர்களாக அவர்களது வீரம் போற்றப்பட்டுள்ளது. இக்கருத்தை

"எறி கோல் அஞ்சா அரவின் அன்ன

சிறு வல் மள்ளரும் உளரே அதாஅன்று,

பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை

வளி பொரு தெண் கண் கேட்பின்,

"அது போர்" என்னும் என்னையும் உளனே.." (புறம்.89)

புரிந்து வந்துள்ளான். தீக்கடைகோல் கடையாதபோது தீயை வெளிப்படுத்தாதது போல அதியமான் தன் வலிமையை அடக்கி வைத்தும், என்ற புறப்பாடல் வழியாக அறியலாம். தொண்டை நாட்டை ஆண்ட தொண்டைமான் என்பவன் அதியமானுடன் போர்புரிய நினைத்தான். அறநெறி வழுவாத அதியமான் தன்னை எதிர்த்து வந்தவர்களை அல்லாது வலியச் சென்று போர்புரியும் தன்மையற்றவனாக இருந்தான். அதனால் நாட்டு மக்களுக்கு ஏற்படும் தீங்கை நினைத்துத் தொண்டைமானோடு போரிட எண்ணாமல் ஔவையைத் தூதாக அனுப்பினான். தூது

சென்ற ஔவையார் அதியமானின் படைவலிமையையும் போர்த்திறத்தையும் தொண்டைமானுக்கு நயம்பட எடுத்துரைத்தார். அதியமானின் படைத்திறம் பற்றி,

"பகைவர்க் குத்தி, கோடு, நுதி, சிதைந்து,

கொல் துறைக் குற்றில மாதோ என்றும்" (புறம்.95)

என்று ஔவையார் எடுத்தியம்புகிறார்.

### 3.7.2.6 அதியமானின் போர்வன்மை

கால் அளவே உள்ள குறைந்த நீரிலும் முதலை, தன்னைவிடப் பெரிய யானையைக் கொன்று வீழ்த்தும் வலிமையுடையது. அம்முதாலையைப் போன்ற வலிமை நிறைந்தவன் அதியமான். அவன் வெல்லுதற்கு அரியவன் என்று ஔவையார் அதியமானின் வலிமையைச் சிறப்பித்துக் கூறுகின்றார் இதனை,

"தாள் படு சில் நீர்க் களிறு அட்டு வீழ்க்கும்

ஈர்ப்புடைக் கராஅத்து அன்ன என்னை" (புறம்.104)

என்ற பாடல் அடிகளில் சிறப்பிக்கின்றார். அதியமான் போர் செய்வதற்காகத் தனது உறையிலிருந்து எடுக்கப்பட்ட வாள், பகைவரின் தசையைக் கிழித்ததால் தனது வடிவத்தை இழந்தது. வேல்கள் காம்பு ஒடிந்து நிலைக்குலைந்தன. போர் யானைகள் பகைவரது கோட்டையின் கதவுகளை உடைத்து அரணை அழித்ததால் தனது பூண்களை இழந்து நின்றன. குதிரைகள் போர்க்களத்தில் வடிந்த குருதியில் காலை நனைத்தால் மாறுபட்ட குளம்பை உடையதாக இருந்தன. அதியமானோ பகைவர் எறிந்த அம்புகளால் துளையுண்டான கேடயத்தைக் கொண்டவனாக நின்றான் என்று ஔவையார் அதியமானின் போர்வன்மையைக் கூறுகின்றார். இதனை,

"பொலந் தும்பைக் கழல் பாண்டில்

கணை பொருத துளைத் தோலன்னே

ஆயிடை, உடன்றோர் உய்தல் யாவது?" (புறம்.97)

என்று பாடலடிகள் காட்டுகின்றன. அதியமானுக்கும் கோவலூரை ஆண்டு வந்த மலாடர் என்ற மன்னனுக்குமிடையே பகை ஏற்பட்டது. மலாடர் வேந்தன் மீது சினம் ஏற்பட அவனைப் போரில் வென்றான்.

“பரணன் பாடினன் மற்கொல் மற்று நீ

முரண் மிகு கோவலூர் நூறி, நின்

அரண் அடு திகிரி ஏந்திய தோளே!” (புறம்.99)

என்று பாடலடிகளில் அதியமானின் கோவலூர்ப் போரில் வெற்றி பெற்றதையும் அதனைப் பரணர் முதலான புலவர்கள் போற்றி பாடியுள்ளதையும் ஔவையார் சிறப்பித்துள்ளார். மேலும், சேரன், சோழன், பாண்டியன், திதியன், எருமையூரன், இருங்கோவேண்மான, பொருநன் ஆகிய ஏழு மன்னரையும் ஒருசேர வென்று அவர்களது அடையாளச் சின்னங்களான கேழல், கலை, யாளி, வீணை, சிலை, கெண்டை, முதலிய ஏழினையும் பெற்று ஆட்சியைத் திறம்பட நடத்தியவன் என்றும் அவரால் புகழப்பட்டுள்ளான். இதனை,

“இமிழ் குரல் முரசின் எழுவரொடு முரணிச்

சென்று, அமர் கடந்து, நின் ஆற்றல் தோற்றிய

அன்றும், பாடுநர்க்கு அரியை இன்றும்” (புறம்.99)

என்று வரும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

### 3.7.2.7 அதியமானின் மறைவு

பெருஞ்சேரலிரும்பொறையுடன் நடைபெற்ற போரில் அதியமான் கொல்லப்பட்டான். அவன் இறந்தபோது பெற்ற தாயினால் கைவிடப்பட்ட குழந்தையைப் போலச் சுற்றங்கள் அனைத்தும் வருந்தின. அதியமானின் மார்பில் வைத்து அவனது உயிரைப் போக்கிய வேல் பாணரது உண்கலத்தைத் துளைத்து, இரந்து வாழ்பவரின் கையிலும் தைத்து, அவனால் பாதுகாக்கப்பட்ட சுற்றத்தாரின் கண்ணொளியை மழுங்கச் செய்து, இறுதியில் சொல்லாராய்ச்சியுடைய புலவரின் நாவில் சென்று தைத்தது. அதனால் இனி பாடுவோரும் இல்லை, அவ்வாறு பாடினால் அன்பு பாராட்டிய பொருள் கொடுப்பாரும் இல்லை என்று ஔவையார் அதியமானின் இறப்பைத் தாழ முடியாது கையறுநிலையாகப் பாடியுள்ளார்.

"அருந் தலை இரும் பாணர் அகல் மண்டைத் துளை உரீஇ,

இரப்போர் கையுளும் போகி,

புரப்போர் புன்கண் பாவை சோர,

..............................................................

ஆசு ஆகு எந்தை யாண்டு உளன்கொல்லோ?

இனி, பாடுநருமில்லை பாடுநர்க்கொன்று ஈகுநருமில்லை" (புறம்.235)

என்று தமது வருத்தத்தை ஔவையார் வெளிப்படுத்தியுள்ளார். அதியமான் இறந்த பின் அவனால் பாதுகாக்கப்பட்ட சுற்றங்கள் அனைத்தும் ஆதரவின்றி தவித்தன என்பதும் அதியமானின் மறைவால் புலவர், வறியவர் முதலியோர்க்கு மேலும் துன்பமே கிட்டியதையும் அறியலாம். அதியமானின் உடல் ஈமத்தீயில் எரிவதைக் கண்ட ஔவையார், உடல் அழிந்து சிதைந்தாலும், அவ்வாறு அழியாமல் இருந்தாலும் வானில் தோன்றும் சந்திரனைப் போன்று என்றும் அவனது புகழ் நிலைத்திருக்கும் என்று பாராட்டுகிறார். இதனை,

"திங்கள் அன்ன வெண்குடை

ஒண் ஞாயிறு அன்னோன் புகழ் மாயலவே" (புறம்.231)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. அதியமானின் மறைவிற்குப் பிறகு அவனுக்கு நடுகல் நடப்பட்டு வழிபாடு செய்யப்பட்டது. அப்போது அதியமான் விரும்பி உண்ட கள்ளுணவை வைத்து வழிபட்டனர். இதனை,

"நடுகல் பீலி சூட்டி, நார் அரி

சிறு கலத்து உகுப்பவும் கொள்வன்கொல்லோ" (புறம்.232)

என்று ஔவையார் பாடுகிறார். தாம் வாழும் நாளில் விரும்பி உண்ட உணவை நடுகல்லானவர்களுக்கு மக்கள் படைத்து வழிபாடு செய்யும் வழக்கம் கொண்டிருந்தனர். அவ்வாறே அதியமானுக்கும் மது உணவு படைக்கப்பட்டதை அறியலாம்.

### 3.7.3.1 அதியமான் பொகுட்டெழினி

அதியமான் நெடுமான் அஞ்சியின் மகன் பொகுட்டெழினியாவான். இவன் பிறந்த சில நாட்கள் கழித்து அதியமான் கையில் வேலும், காலில் வீரக் கழலும் அணிந்தவாறு காண வந்தான். புலியோடு போரிட்ட யானையின் சினம் தணியாதது போல் பகைவரைச் சினத்துடன் பார்த்த கண்கள் சிவந்த நிறம் பெற்றன. புதல்வனைப் பார்க்க வந்தபோதும் அவை நிறம் மாறாமலேயே இருந்தன என்பதை ஔவையார்.

"மாவே, பரந்து ஒருங்கு மலைந்த மறவர்

பொலம் பைந் தார் கெடப் பரிதலின்," (புறம்.100)

என்று கூறி அதியமான் தன் மகனைக் காணவந்த காட்சியை விளக்குகிறார். சங்க காலத்தில் தன் குழந்தையின் முகத்தை முதன் முறையாகப் பார்க்கச் செல்லும் தந்தை போர் உடையுடன் செல்லுதலை மரபாகக் கொண்டிருந்தனர். இக்கருத்தினை "முடிக்குரிய முதன் மகன் பிறந்த காலத்தில் பிறந்த சிலநாள் கழித்துத் தந்தை போர்க்குரிய உடை உடுத்திச் சான்றோர் சூழச் சென்று அம்மகனைக் காண்பது பண்டைத் தமிழர் மரபு. உலகில் பிறந்த மகன் முதன் முதல் தன் தந்தையைக் காணுமிடத்து அவன் நெஞ்சில் போர்க்கோலமும் போர் மறமும் நன்கு பதிய வேண்டுமென்பது கருத்து. அக்கால நிலை போர் மறவரையே பெரிதும் வேண்டியிருந்தது."[21] என்று ஔவை சு.துரைசாமிப்பிள்ளை அவர்கள் எடுத்துரைக்கிறார்.

### 3.7.3.2 குடிப்பெருமை

பொகுட்டெழியினியின் முன்னோர் கடலுக்கு அப்பாலுள்ள நாட்டிலிருந்து பெறுவதற்கு அரிதான அமுதம் போன்ற 'கரும்பை' தமது நாட்டிற்குக் கொண்டு வந்ததை என்பதை ஔவையார்,

"விருந்து இறை நல்கியோனே அந்தரத்து

அரும் பெறல் அமிழ்தம் அன்ன

கரும்பு இவண் தந்தோன் பெரும் பிறங்கடையே." (புறம்.392)

என்று கூறிச் சிறப்பிக்கின்றார். பிறிதொரு இடத்தில் அதியனின் முன்னோர்கள் பெறுவதற்கு அரிதான கரும்பை விண்ணுலகிலிருந்து இம்மண்ணுலகிற்குக் கொண்டு வந்து பயிரிடச் செய்தனர் என்னும் செய்தியை ஔவையார் பதிவு செய்துள்ளார். எனவே கரும்பு என்னும் பயிர் வகை அதியமானின் முன்னோர்களால் தமிழக சூழலுக்கு அறிமுகப் படுத்தப்பட்டிருக்க வேண்டும். இச்செய்தியானது,

“அரும் பெறல் மரபின் கரும்பு இவண் தந்தும்,

நீர் அக இருக்கை ஆழி சூட்டிய

தொல் நிலை மரபின் நின் முன்னோர் போல,” (புறம்.99)

என்ற புறப்பாடல் வழி அறியமுடிகிறது.

### 3.7.3.3 பொகுட்டெழினியின் பண்பு நலம்

பொகுட்டெழினி வறியவர்க்குக் கொடுத்து உதவும் கவிழ்ந்த கையை உடைய பண்பாளனாகத் திகழ்ந்துள்ளான். அறிவும் நிறைவும் அருளும் முதலான குணங்களைக் பெற்று தம் குடிமக்களை இருள் அகற்றும் முழுச் சந்திரனைப் போல் துயர் களைந்து போற்றிப் பாதுகாத்தான். இவனை நாடி வந்த வறியவரின் கிழிந்த ஆடையைக் களைந்து அதற்குப் பதிலாக நுட்பமான வேலைபாடமைந்த ஆடையைக் கொடுத்து உடுத்தச் செய்தான். அவர்களுக்குக் கள்ளுணவைக் கொடுத்தும் மகிழ்வித்தான் என்று ஔவையார் பொகுட்டெழினியின் பண்பைச் சிறப்பித்துக் கூறுகிறார். இதனை,

“தேள் கடுப்பு அன்ன நாட்படு தேறல்

கோள்மீன் அன்ன பொலங் கலத்து அளைஇ,

ஊண் முறை ஈத்தல் அன்றியும், கோள் முறை

விருந்து இறை நல்கியோனே அந்தரத்து” (புறம்.392)

என்ற பாடலடிகளில் விவரித்துப் பாடுகிறார். அக்காலத்தில் கள் உணவு என்பது விருந்தோம்பலில் சிறந்த இடத்தைப்பிடித்துள்ளது. மக்களை வழிநடத்திச் செல்லும் மன்னனே கள் அருந்துபவனாகவும் பிறருக்கும் கொடுத்து மகிழ்விப்பவனாகவும் இருந்துள்ளான். விருந்து உபசரிப்பிலும் கள் முக்கிய இடம் பெற்றுள்ளதை அறியலாம்.

### 3.7.3.4 பொகுட்டெழினியின் வீரம்

பொகுட்டெழினி திரை கொடுக்காத மன்னருடைய மதிலைப் போரிட்டு அழிக்கும் வன்மையுடையவன். இவன் பகைவர்களை வீழ்த்திய போர்க்களம் தரையும் குருதியும் தோய்ந்து ஈரமுடையதாகக் காட்சியளித்தது. போரில் தோற்ற அரசனது நாட்டைக் கழுதைகளைக் கொண்டு ஏர்பூட்டி உழுது அந்நிலத்தில் வரகு, கவடி, கொள்ளு, மற்றும் முள் செடியின் விதைகள் போன்றவற்றை விதைக்கும் இடையறாத போர் என்னும் உழவைச் செய்து வெற்றி கொண்டவன் எழினி என்று ஔவையார் பொகுட்டெழினியின் போர்வன்மையைப் பாடியுள்ளார்.

"எல் படு பொழுதின், இனம் தலைமயங்கி,

கட்சி காணாக் கடமான் நல் ஏறு

மட மான் நாகு பிணை பயிரின், விடர் முழை" (புறம்.157)

என்று கூறி அவனது வீரத்தை ஔவையார் போற்றுகின்றார். தந்தை அதியமான் அஞ்சியைப் போன்றே பொருட்டெழினியும் கொடை, வீரம் போன்றவற்றில் சிறந்து விளங்கியதை அறியலாம்.

### 3.7.5 வேள் எழினி

வேளிர் குலத்தின் வழிவந்தவன் வேள் எவ்வி. இவனது ஊர் 'நீடூர்' என்பதாகும். இதனால் இவன் 'நீடூர் கிழவன்' என்றும் போற்றப்படுகின்றான். இவன் சோழநாட்டின் கீழைக்கடற்கரையைச் சார்ந்த மிழலைக் கூற்றம் என்னும் பகுதியையும் ஆண்டு வந்தான். அரசியல் மதிநுட்பம் வாய்ந்தவனாகத் திகழ்ந்த எவ்வி தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனால் போரில் வீழ்த்தப்பட்டான். இவ்வாறு பகைவருடன் போரிட்டு முகத்திலும் மார்பிலும் விழுப்புண்பட்டு மடிந்தான் என்னும் செய்தி விடியற்காலைப் பொழுதொன்றில் வெள்ளெருக்கிலையாருக்கு எட்டுகிறது. அகுதை என்பவனிடம் பொன்னால் செய்யப்பட்ட சக்கரம் உள்ளதென்று கூறிய செய்தி பொய்யானது போல் வேள் எவ்வி மடிந்தான் என்னும் தான் கேட்ட செய்தியும் பொய்யாக வேண்டும் என்று வருந்தினார். இத்தகைய தமது எண்ணத்தை,

"போர் அடு தானை, எவ்வி மார்பின்

எ்.குறு விழுப்புண் பல" என

வைகுறு விடியல், இயம்பிய குரலே" (புறம்.233)

என்று பாடி வெளிப்படுத்தியுள்ளார். இவன் புலவரைப் போற்றிப் புரக்கும் வள்ளல் என்பது வெள்ளெருக்கிலையாரின் பாடல் மூலம் அறியப்படுகிறது. இவனது இறப்பு பொய்க்கும்படி புலவர் வேண்டுமளவுக்கு அவனது பொருட்கொடை இருந்துள்ளதை இப்பாடல் அடிகள் எடுத்தியம்புகின்றன.

சோழ நாட்டின் கீழைக் கடற்கரைக்கு அருகிலுள்ள செல்லூர் என்னும் ஊரைச் சார்ந்தவன் எழினி. இவன் சோழர் குல வேளிர் மரபைச் சார்ந்தவன். இவன் மிகுந்த போர்த்திறம் கொண்டவன். பகைவரைத் தோற்றோடச் செய்யும் வேற்படையைப் பெற்றிருந்தான். பகைவரின் ஆநிரைகளைக் கவர்ந்து வரும் வண்மையுடையவனாகவும் இருந்துள்ளான். இதனை,

"அஞ்சுவது உடையளாயின், வெம் போர்

நுகம் பட கடக்கும் பல் வேல் எழினி

முனை ஆன் பெரு நிரை போல," (குறுந்.80)

என்று ஔவையார் கூறுவதிலிருந்து இவனது போர்த்திறமும் படை வலிமையும் அறியப்படுகிறது. இவன் 'ஆதன் எழினி' எனவும் அழைக்கப்படுகிறான். வேளிர்கள் பொருள் வழங்குவதில் மட்டும் சிறப்புடையவர்கள் அல்ல வீரத்திலும்தான் என்பதை மெய்ப்பித்துக் காட்டியவன் ஆதன் எழினி ஆவான்.

**3.7.6 ஏறைக்கோன்**

மலைகளால் சூழ்ந்த குறிஞ்சி நிலத்தை அடிப்படையாகக் கொண்ட பெருங்கல் நாட்டினை ஆட்சி செலுத்தியவன் ஏறைக்கோன். இவன் குறிஞ்சி நிலத்தில் வாழும் குறவர்களுக்குத் தலைவனாகத் திகழ்ந்தவன். தம் குடிகளைக் குறையற பாதுகாக்கும் தன்மை உடையவன். நெருங்கியவர்கள் தமக்குச் செய்யும் பிழையைப் பொறுத்துக் கொள்ளும் இயல்புடையவன். பிறரது வறுமை கண்டு நாணுபவன். படைக்களத்தில் பிறரால் பழித்துக் கூறப்படாத வீரமுடையவன். மன்னர்கள் கூடிய அவையில் மேம்பட்டு நடக்கும் பெருமையுடையவன். இத்தகைய பண்புகள் எமது தலைவன் ஏறைக்கோனுக்கு மட்டுமே உரியது என்று அவனது குடியைச் சார்ந்த இளவெயினியார் என்னும் பெண்பாற் புலவரால் பாராட்டப் பெற்றுள்ளான். இதனை,

“தமர் தற் தப்பின் அது நோன்றல்லும்,

பிறர் கையறவு தான் நாணுதலும்,

படைப் பழி தாரா மைந்தினன் ஆகலும்,

வேந்துடை அவையத்து ஓங்குபு நடத்தலும்,

நும்மோர்க்குத் தகுவன அல்ல் எம்மோன்,

சிலை செல மலர்ந்த மார்பின், கொலை வேல்,

.....................................................

இரும் புலிப் புகர்ப் போத்து ஓர்க்கும்

பெருங் கல் நாடன் எம் ஏறைக்குத் தகுமே.” (புறம்.157)

என்று வரும் குறமகள் இளவெயினியாரின் பாடலடிகள் ஏறைக்கோனின் பண்பு நலன்களை எடுத்துரைக்கின்றன. மேலும், “உயர்ந்த தலைவளமும் சிறந்த வனவளமும் சான்ற இவனது பெருங்கல் நாடு எதுவெனத் தெரிந்திலது. ஆயினும், ‘வேந்துடை அவையத்து ஓங்குப நடத்தல்’ என்ற பண்புக்குரியோனாய் இவன் பாடப்பெறுகின்ற குறிப்பினை உடன் கொண்டு காணுங்கால், இந்தப் பெருங்கல்நாடு மலைநாடான சேரநாட்டிற்குள் அடங்கியதென்பதும், இவன் அச்சேர வேந்தனது அவைக்களத்தில் இடம்பெறுகின்ற அணுக்கச் சிறப்புடையவனென்பதும் உய்த்துணரப்படும்”[22] என்று இவனது வரலாற்றை உ.வே. சாமிநாதையர் கூறுவதன் வாயிலாக உணரலாம்.

### 3.7.7.1 நாஞ்சில் வள்ளுவன்

பொதிகை மலைத் தொடர்களுள் ஒன்றான நாஞ்சில் மலையையும் அதனைச் சூழ்ந்த நாடுகளையும் ஆட்சி செலுத்தியவன் நாஞ்சில் வள்ளுவன் என்ற மன்னனாவான். இவன் ‘நாஞ்சில் பொருநன்’ என்றும் ‘வல்வேல் கந்தன்’ என்றும் அழைக்கப்படுகிறான். இவனது கொடைத்தன்மையைப் பற்றி ஔவையார் சிறப்பித்துள்ளார். கீரையுடன் சேர்த்து வேக வைக்கச் சிறிது அரிசி வேண்டிச் சென்றபோது நாஞ்சில் வள்ளுவன் யானை சுமக்கும் அளவிற்கு அரிசியைக் கொடுத்தான். அவன் தமது தகுதி அறிந்து இத்தகைய பெரும்பொருளைக்

கொடையாகக் கொடுத்தான் என்று ஔவையார் நாஞ்சில் வள்ளுவனின் பெருமிதத்தை,

"அரிசி வேண்டினெ மாகத் தான்பிற

வரிசை யறிதலிற் தன்னந் தூக்க

.......................................

பெருங்களிறு நல்கியோனே...." (புறம்.140)

என்று கூறி நாஞ்சில் வள்ளுவனது கொடைத் தன்மையைப் புலப்படுத்துகின்றார். மேலும், பெரியவர்கள் தான் செய்யும் செயலை ஆராய்ந்து செய்யும் தன்மையுடையவர் ஆவர். அவர்கள் எப்போதும் வழிபிறழ்ந்து நடப்பதில்லை. ஒருவர்க்கு ஒன்றைத் தரும்போது அவரது தகுதி அறிந்து கொடுத்தலே சிறப்பு என்பதை ஔவையார்,

"தோன்றா வீகையு முளதுகொல்

போற்றா ரம்ம பெரியோர் தங் கடனே'' (புறம்.140)

என்று கூறி, தமது தேவை சிறிதளவே ஆயினும் நாஞ்சில் வள்ளுவன் யானை சுமக்குமளவு பெரும்பொருளைக் கொடுத்தது சான்றோர் செயலையும் மீறியது என்று அவனது கொடைத் தன்மையைச் சிறப்பிக்கின்றார்.

### 3.7.7.2 நாஞ்சில் மலையின் வளம்

ஒலிக்கும் முரசினையும் யானைப் படையையும் உடைய மூவேந்தரை இதுவரை பாடவேண்டும் என நினைத்ததில்லை. நான் அறிந்து பாடிய அரசன் விதைத்த வித்து நீரின்றி காயாது கரும்பு போலத் தழைக்கும் என்று நாஞ்சில் வள்ளுவனின் சிறப்பினைக் கூறுமிடத்துக் கோடைக் காலத்திலும் செழிப்புடன் விளங்கும் மலை என்று அவனது மலையின் சிறப்பினைப் புலவர் கூறுகிறார். இதனை

"முன்யான் அறியு மோயனே துவன்றிய

கயத்திட்ட வித்து வறத்திற் சாவாது

கழைக்கரும்பின் ஒலிக்குந்து

கொண்டல் கொண்ட நீர்கோடை காயினும்

............................................

மணியன்ன நீர்கடற்படரும்

செவ்வரைப் படப்பை நாஞ்சில் பொருந!" (புறம்.158)

என்ற அடிகளின் மூலம் அறியலாம். வறட்சியான கோடைக் காலத்திலும் மகளிரின் கண் போன்ற குவளை மலர் பூக்கும். கரிய இதழை உடைய வேங்கை மலர்கள் வாய்க்கால் வழியே சென்று கடலை அடையும் வளமுடையது நாஞ்சில் மலையாகும்.

"முட்டாது கொடுத்த, முனை விளங்கு தடக் கை,

துளி மழை பொழியும் வளி துஞ்சு நெடுங் கோட்டு

நளி மலை நாடன், நள்ளியும் நளி சினை" (சிறுபாண்.105-107)

என்ற சிறுபாணாற்று வரிகள் மூலம் நாஞ்சில் மலையின் வளத்தை அறியலாம்.

### 3.7.8.1 மலையமான் திருமுடிக்காரி

கடைச் சங்க காலத்தில் வாழ்ந்த வள்ளல்களுள் ஒருவன் திருமுடிக்காரி. இவன் திருக்கோவிலூரினை சிறப்புற ஆண்டவன். இவனைக் காரி எனவும் மலையன் எனவும் அழைப்பர். மேலும், 'முள்ளூர் மன்னன்' என்ற சிறப்பும் இவனுக்குரியது. இவன் வாழ்ந்த காலத்தில் பெரு வீரனாகத் திகழ்ந்துள்ளான். வடக்கிருந்து வந்த ஆரியப்படை திருக்கோவிலூரை முற்றுகையிட்டபோது, அஞ்சாது வடவரை எதிர்த்துப் புறமுகிட்டு ஓடச் செய்த பெருமையுடையவன். மேலும் கொல்லி மலையை ஆண்ட வல்வில் ஓரியையும் போரிலே வெற்றி கொண்டு வீழ்த்தினான். இவன் பெருவீரனாக மட்டுமல்லாது சிறந்த பண்பாளனாகவும் திகழ்ந்தான். மேலும், வாய்மை தவறாத புலவர் கபிலரால் பாடப்பட்ட கார் மேகம் சூழ்ந்த கரிய பெரிய மலைப் பகுதியில் போர் வல்ல மறவர் விரைந்து பகைவர் புறங்கொண்டு போவதைக் காணுகிற புகழ்மிக்க உடைய முள்ளூர் மலை உச்சியில் மறவர் காணாது மறைந்திருந்த வெற்றிப் புகழ் மிக்க சோழனுடைய நிலவைப் பழிக்கும் வெண் கொற்றக் குடையை வெளித்தோன்றச் செய்து சோழன் இழந்த புகழை மீட்டுத் தந்தவனே என்று மறக்கோத்து நப்பசலையார் திருமுடிக்காரியின் புகழைப் பாடுகிறார். இதனை,

"பொய்யா நாவில் கபிலன் பாடிய

மையணி நெடுவரை ஆங்கண் ஒய்எனச்

செருப்புகல் மறவர் செல்புறம்கண்ட

.................................

புதுமையின் நிறுத்த புகழ்மேம் படுந" (புறம். 174)

என்ற புறப்பாடல் வாயிலாக அறியலாம். இதன் மூலம் சோழன் இழந்த பகுதிகளை மற்ற வேளிர்களிடமிருந்து மீட்டு அதனைச் சோழனுக்கே தந்த நிகழ்வை இப்பாடல் படம்பிடித்துக் காட்டுகிறது. காரியின் வீரவாழ்வு குறித்து "தமிழ்நாட்டு மன்னரும் வீரர்களும் காரி மன்னன் வலிமை மிகுந்தவன் என்று வாயார புகழவும், செந்தமிழ்ப் புலவர்கள் அவன் சீர்களை எடுத்துப் பாடவும் தன் நாட்டைக் காவல் செய்து வந்தான். பின்பு தன்னை வென்ற அதியமானையும் வென்று தன் நாட்டைப் பெற்று நன்கு ஆட்சி செய்து இறுதியில் விண்ணுலகடைந்தான்."[23] என்று கோவிந்த மூப்பனார், கூறியுள்ளார். இதன் மூலம் மலையமான் திருமுடிக்காரியின் புகழைப் புலவர்கள் மட்டும் பாராட்டாது மன்னர்களும் புகழ்ந்துள்ளதை அறியலாம்.

### 3.7.8.2 முள்ளூர் மலையின் தன்மை

புலவர்கள் மன்னரைப் புகழ்வதற்கு முன்பு அவனது குடியினையும் நாட்டையும் புகழ்வது மரபு. புலவர் நப்பசலையார் மலையமான் திருமுடிக்காரியைப் புகழும்போது அவனது மலையினைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். சோழ நாட்டின் எல்லைக்கு உட்பட்டது முள்ளூர் மலை. இது பகலிலும் இரவின் தன்மையை ஒத்த அடர்ந்த காட்டையும் பறை ஒலியை ஒத்த அருவியின் ஓசையும் தென்பெண்ணை ஆறு பாயும் வளத்தையும் உடையது. இதனை,

"துயின்மடிந் தன்ன தூங்கிருள் இறும்பின்

பறையிசை அருவி முள்ளூர் பொருந!" (புறம்.174)

என்ற பாடலடிகள் காட்டுகின்றன. இதில் அருவிக்குக் கூறப்படும் உவமையினைப் பதிற்றுப்பத்து 'பறைக்குர லருவி' என வரும் அடிகளில் குறிப்பிடுவது அம்மலை நீர் வளம் சிறப்புடையதை எடுத்தியம்புகிறது.

### 3.7.8.3 திருமுடிக்காரியின் புகழ்

முள்ளூரின் தலைவனான திருமுடிக்காரி போர் முரசம் ஒலித்தால் பாம்பைக் கொல்லும் இடியைப் போன்று எதிர்த்து வரும் பகைவரைப் போர்க்களத்தில் மடியச் செய்யும் ஆற்றலுடையவன். கபிலர் போன்ற பெரும்புலவரால் பாடும் புகழ் வாய்ந்த பேராண்மை கொண்டவன். இத்தகைய புகழ் கொண்ட உன்னைப் பாட நினைக்கும் எனக்கு ஒன்றைக் கற்றிருப்பினும் கல்லாதிருப்பினும் உமது புகழ்பாடும் எமக்குத் திறம் இல்லை என்றும் வறுமை செலுத்தவே பெருமைகளில் சிலவற்றைச் சொல்ல முற்பட்டதாகவும் நப்பசலையார் கூறுகின்றார். இதனை,

"இன்மை துரப்ப, இசை தர வந்து, நின்

வண்மையின் தொடுத்தனம், யாமே முள் எயிற்று" (புறம்.126.17-18)

என்று மலையமானது போர்த்திறத்தையும் நாட்டு வளத்தையும் நப்பசலையார் பாடல் வாயிலாகப் பெறமுடிகிறது.

### 3.7.8.4 காரியின் குடிச்சிறப்பு:

சங்க கால மன்னர்கள் போர் செய்தலைத் தங்களின் தொழிலாகவும் பொழுதுபோக்காகவும் கொண்டுள்ளனர். அப்போரில் வெற்றிபெற்றவர்கள் பகைவரது நாட்டு வளங்களைக் கவர்ந்து அதனைத் தன்னிடம் பரிசில் வேண்டி வருவோருக்குக் கொடுத்து அவர்களைச் சிறப்பித்துள்ளனர். இவ்வாறு பொருள் வழங்குதலை வழிவழியாகக் காரியும் அவனது முன்னோர்களும் கடைப்பிடித்துள்ளனர். இதனை,

"ஒன்னார் யானை ஓடைப்பொன் கொண்டு

பாணர் சென்னி பொலியத் தைஇ

வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர்

ஓடாப் பூட்கை உரவோன் மருக!" (நற். 320)

என்ற நப்பசலையார் வரிகளின் மூலம் அறியலாம். மேலும், வள்ளல் திருமுடிக்காரியிடம் பரிசில் பெறச் சென்ற நப்பசலையார் அவனிடம் பொருள் கேட்பதற்கு முன்பு பகைவரது பட்டத்து யானையின் முகத்தில் உள்ள பொன்னைப்

பொற்றாமரையாக்கித் தரும் குடியில் பிறந்தவன் என்று அவனது குடியினைப் புகழ்ந்து கூறுகிறார். இச்செய்தி திருமுருகாற்றுப்படையில்

"ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி,

வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட,

ஆண்டு ஆண்டு உறைதலும் அறிந்தவாறே." (திருவா.247-249)

என நக்கீரர் முருகனின் இயல்பினைக் சொல்லும் போது அவனது குடிச்சிறப்பைக் கூறியுள்ளார்.

### 3.7.9 மலையமான் சோழிய வேனாதி திருக்கண்ணன்

தென்பெண்ணை ஆறு பாயும் வளம் மிக்க சுற்றுப்புறத்தைக் கொண்ட முள்ளூர் மலையின் தலைவனான மலையமான் சோழிய வேனாதி திருக்கண்ணன் விளங்கியுள்ளான். இவன் மலையமான் திருமுடிக்காரியின் மகனாவான். "மலையமான் திருமுடிக்காரியின் மகன் திருக்கண்ணன் என்பதற்குப் புறச்சான்றுகள் எதுவும் கிடைக்கப் பெறவில்லை. ஆயினும் திருமுடிக்காரியைப் பாடிய மாறோகத்து நப்பசலையார் பாடலின் அகச்சான்றே இதற்குப் போதுமானதாக அமைகிறது. 'சோழிய வேனாதி' என்பது கருதப்படுகிறது"[24] என்று ஔவை. சு.துரைசாமி பிள்ளை குறிப்பிடுகிறார். புலியின் சின்னம் பொறித்த கோட்டையை உடையவனும் ஒளிவிளங்கும் அணிகலன்களையும் வண்டுகள் மொய்க்கும் மாலையையும் உடைய இவனது தந்தை இந்நிலவுலகில் செய்த அறத்தின் பயனை அனுபவிக்கும் பொருட்டு தெய்வ உலகம் சென்றான் என்று மாறோக்கத்து நப்பசலையாரால் திருக்கண்ணனின் தந்தை மலையமான் திருமுடிக்காரி என்பதை அறுதியிட்டுக் கூறுகிறார். இதன் மூலம் இவர்கள் புலியின் சின்னம் பொறித்த கோட்டையை உடையவர் என்பதால் இவர்கள் சோழர் வழிவந்தவர்களாக அல்லது சோழர்களுக்கு உட்பட்டு அரசு செலுத்தியவர்களாக இருத்தல் வேண்டும் என்பதை அனுமானிக்க முடிகிறது. இதனை,

"விடர்ப் புலி பொறித்த கோட்டை, சுடர்ப் பூண்,

சுரும்பு ஆர் கண்ணி, பெரும் பெயர் நும் முன்

ஈண்டுச் செய் நல் வினை ஆண்டுச் சென்று உணீஇயர்,

உயர்ந்தோர் உலகத்துப் பெயர்ந்தனன் ஆகலின்,” (புறம்.174)

என்று வரும் நப்பசலையார் பாடலடிகளால் திருக்கண்ணனின் முன்னோன் மலைமான் என்பதும் இவன் சோழர்க்குத் துணையாக இருந்தால் தமது கோட்டையில் சோழரின் சின்னமாகிய புலிப்பொறியை வைத்திருந்தான் என்பதும் அறியப்படுகின்றது. திருமுடிக்காரியின் மறைவுக்குப் பின் முள்ளூர் மக்கள் மழை காணாத பயிர்போல் வாடி நின்றனர். நாடும் நாட்டு மக்களும் பொலிவிழந்த நேரத்தில் வறட்சியுற்ற கோடைக்காலத்தில் பெய்யும் மழை எவ்வாறு நிலத்தைக் குளிர்விக்குமோ அதுபோல் மக்களின் மனம் குளிரும்படி திருக்கண்ணன் ஆட்சிப் பொறுப்பை ஏற்றான். அதன் பின்னர் முள்ளூர் நாடு குறை எதுவும் இல்லாததாக விளங்கியது. தந்தையின் சிறந்த ஆட்சிப் பொறுப்பை ஏற்ற திருகண்ணன் தன் தந்தை வழியிலேயே ஆட்சி புரிந்து மக்களை மகிழ்வித்தான் என்று அவன் சிறப்பிக்கப்படுகிறான். இச்செய்தியினை,

“கவலை நெஞ்சத்து அவலம் தீர,

நீ தோன்றினையே நிரைத் தார் அண்ணல்!

கல் கண் பொடிய, கானம் வெம்ப,

மல்கு நீர் வரைப்பின் கயம் பல உணங்க,

............................................

உரும் உரறு கருவிய மழை பொழிந்தாங்கே.” (புறம்.174)

என்று நப்பசலையார் கூறுகிறார். மலையமான் திருமுடிக்காரியின் மறைவிற்குப் பின் அவனது மகன் திருக்கண்ணன் அரசுப் பொறுப்பேற்று மக்களை வழிநடத்தினான் என்பது இதன் மூலம் பெறப்படுகிறது. மேலும், இவனது ஆட்சிக்காலத்தில் சோழ மன்னருள் ஒருவன் பகைவர்க்கு அஞ்சி முள்ளூர் மலையில் ஒளிந்திருந்தான். சோழனின் தலைமறைவால் அவனது நாட்டு மக்கள் பெரிதும் வருந்தினர். இதை அறிந்த திருக்கண்ணன் தன் படைகளைக் கொண்டு மறைந்திருந்த சோழனுக்கு உதவி புரிந்து அவனை மீண்டும் அரியணையில் அமரச் செய்துள்ளதை,

“எள் அறு சிறப்பின் முள்ளூர் மீமிசை,

அரு வழி இருந்த பெரு விறல் வளவன்

மதி மருள் வெண்குடை காட்டி, அக் குடை

புதுமையின் நிறுத்த புகழ் மேம்படுந! (புறம்.174)

என்ற பாடலடிகளில் நப்பசலையார் பதிவு செய்துள்ளார். அதன் வாயிலாகத் திருக்கண்ணன் முடிவேந்தர்க்குத் துணைபுரியும் அளவிற்குப் படைபலம் மிக்கவனாக இருந்துள்ளான் என்பது பெறப்படுகிறது. "சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை நப்பசலையார் 'வளவன்' என்று குறிப்பிட்டுள்ளார். இதனால், முள்ளூர் மலையில் மறைவுற்று இருந்தவன் கிள்ளிவளவன் என்பது உய்த்துணரப்படுகிறது. மேலும், திருக்கண்ணனுக்குச் 'சோழிய வேனாதி' என்ற பட்டமும் சோழ மன்னரால் வழங்கப்பட்டுள்ளது. அதேபோல் திருக்கண்ணன் 'திருக்கிள்ளி' என்று அழைக்கப் பெற்றதாகவும் பாடலின் அடிக்குறிப்பு தெரிவிக்கிறது. இதனால் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனோடு சோழிய வேனாதி திருக்கண்ணன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தான் என்பது புலப்படும்."[25] என்று ஔவை. சு.துரைசாமி பிள்ளை குறிப்பிடுகிறார். என்ற கூற்றின் மூலம் திருக்கண்ணன் உதவி புரிந்த சோழ மன்னன் கிள்ளிவளவன் என்பது புலனாகிறது.

### 3.7.10 அகுதை

அகுதை சோழர் குலமரபிற் தோன்றியவன். இவன் அஃதை யென்றும் அகுதை யென்றும் அழைக்கப் பெறுகின்றான். இவனது வரலாறு குறித்து ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, "அகுதை என்பவன் பண்டை நாளில் கடல் சார்ந்த ஊராகிய கூடல் என்ற ஊருக்குத் தலைவன். மறப்போர் புரியும் சான்றாண்மையும் பரிசிலர்க்குக் களிறு வழங்கும் கைவன்மையும் உடையவன். இவன் பெரிய தானையையுடையவன் என்பர். இவன்பால் பொற்றிகிரி யுண்டு, ஆதலின் இவனை வெல்வது எவர்க்கும் ஆகாதென்றொரு பெருமொழி நாடெங்கணும் பரவியிருந்தது. அதனால் பலரும் அவனை அஞ்சியிருந்தனர். முடிவில் ஒருகால் போருண்டாகிய போது அகுதை கொல்லப்பட்டான். பொற்றிகிரி உண்டென்பது பொய்யாயிற்று."[26] என்று வெ.வரதராசனார் கூறுகின்றார். இவனிடம் பொன்னால் செய்யப்பட்ட சக்கரம் இருந்தது பொய்யென்பதை வெள்ளெருக்கிலையார் என்னும் புலவர்,

"சீர்கெழு நொன்றா ளகுதைகட் டோன்றிய

பொன்புனை திகிரியிற் பொய்யா கியரோ

இரும் பாண் ஒக்கல் தலைவன், பெரும் பூண்,

போர் அடு தானை, எவ்வி மார்பின்

எ்.குறு விழுப்புண் பல“ என

வைகுறு விடியல், இயம்பிய குரலே.” (புறம்.233)

என்று கூறுவதால் அறியலாம். மேலும், இவன் வாழ்ந்த கூடலூர் பற்றி உ.வே.சா, “இவ்வூர் இக்காலத்தே மாவட்டத் தலைநகராய்க் கீழைக்கடலோரத்தே கடலூரென விளங்குகின்றது. இதற்கு இன்றும் கடலூர் என்ற பெயர் வழக்கமுண்டு”[27] எனக் கூறுகின்றார். இதனால் அகுதை என்பவன் இன்றைய கடலூரையும் அதனைச் சார்ந்த பகுதிகளையும் முன்பொருகாலத்தில் ஆட்சி செலுத்தியவன் என்பது இதன் மூலம் பெறப்படுகின்றது.

**3.7.11 அவியன்**

சோழர் மரபைச் சேர்ந்த சிற்றசர்களுள் ஒருவன் அவியன். இவனைக் குறித்து ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, “அவியன் திருமுனைப்பாடி நாட்டில் வாழ்ந்தவன். அவன் பெயரால் அவியனூரென்றோர் ஊர் பண்டை நாளிலிருந்தது. அ்.து அவியனூர் நாட்டுக்குத் தலைநகராகவும் இருந்ததைத் திருவதிகைக் கல்வெட்டொன்று கூறுகிறது.”[28] என்று இவனது வரலாற்றைக் கூறுகின்றார். அவியனைக் குறித்துப் பெண்பாற்புலவர்களில் மாறோக்கத்து நப்பசலையார் பாடிய பாடல் ஒன்று மட்டுமே காணக்கிடைக்கிறது. அவியனைக் காணச் சென்ற நப்பசலையார் அவனது நாட்டு வளத்தையும் கொடைத் தன்மையையும் சிறப்பித்துக் கூறியுள்ளார். அவியனின் ஆட்சிக் காலத்தில் வெள்ளிமீன் தெற்கு நோக்கிச் சாய்ந்தது. அவ்வாறு வெள்ளிமீன் தெற்குப்புறம் சாய்ந்தால் நாட்டில் வறுமை மேலிடும் என்பது மக்களின் நம்பிக்கையாக இருந்தது. இதனால் மக்கள் பலரும் வரப்போகும் துயரம் குறித்துப் பலவாறு பேசினர். இதைக் கேள்வியுற்ற நப்பசலையார் குன்றுகள் நிறைந்த வளமிக்க நம் நாட்டிற்குத் தலைவன் அவியன். அவன் தன் கடமையிலிருந்து வழுவாதவன். வறியவரைப் போற்றிப் புரக்கும் தன்மையுடையவன். இத்தகையவனோடு நாம் உடனிருப்பதால் வெள்ளி மீன் நிலை பிறழ்ந்தது பற்றி வருந்த வேண்டியதில்லை என்று தேற்றினார். இதனை,

''....................குன்றுபல கெழீஇய

கான்கெழு நாடன் கடுந்தே ரவியனென

ஒருவனை யுடையேன் மன்னே

அறானெவன் பரிகோ வெள்ளியது நிலையே'' (புறம்.383)

என்னும் பாடல் சுட்டுகிறது. மேலும், பொருநன் ஒருவன் கூற்றாக அவியனது உழவு எருதுகளையும் நாட்டுவளத்தையும் நப்பசலையார் சிறப்பித்துள்ளார். இவர் கூறும் வெள்ளிமீன் பற்றிய குறிப்பு நன்னாகனார்

"யாண்டு நிற்க வெள்ளி, மாண்ட

உண்ட நன் கலம் பெய்து நடக்கவும்,

தின்ற நண் பல் ஊன் தோண்டவும்,

வந்த வைகல் அல்லது,

சென்ற எல்லைச் செலவு அறியேனே" (புறம்.384)

என்ற புலவரின் பாடலிலும் காணக் கிடைக்கின்றது. இது பழந்தமிழரின் வானியல் அறிவைக் காட்டுவதோடு மன்னனின் உயர் பண்பினால் எவ்வித வறுமையையும் மக்களைச் சென்றடையாவண்ணம் முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருந்ததை மறைமுகமாக இப்பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

### 3.7.12 அழிசி

அழிசி சோழர் குடியில் தோன்றிய சிற்றரசன் ஆவான். இவன் கொடைத் தன்மை மிக்கவன். இவனுக்குச் சேந்தன் என்றொரு மகனுண்டு. சோழ நாட்டிலுள்ள ஆர்காட்டையும் அதனைச் சார்ந்த சில ஊர்களையும் ஆண்டு வந்தவன். இவன் ஆட்சி செலுத்தி வந்த ஆர்காடு மிகுந்த வளமுடையது. ஆர்காட்டின் தெருக்கள் ஒலிக்கின்ற மணியை உடைய யானைகளையும் விரைந்தோடும் தேர்களையும் உடையன. இத்தெருக்களில் ஆங்காங்கே சோழரின் புலிச் சின்னம் பொறித்த கொடிகள் அசைந்தாடிய வண்மை இருந்தன. இத்தகைய வளமிக்க அழிசியின் ஆர்காட்டினை நக்கண்ணணையார்,

"உள்ளூர் மாஅத்த முள்ளெயிற்று வாவல்

ஓங்கல் அஞ்சினைத் தூங்குதுயில் பொழுதின்

வெல்போர்ச் சோழர் அழிசியம் பெருங்காட்டு

நெல்லியம் புளிச்சுவைக் கனவி யாஅங்கு" (நற்.87)

என்று பாடிச் சிறப்பிக்கின்றார்.

### 3.7.13 அன்னி

சோழர் குடியில் உதிந்தவன் அன்னி. சோழ நாட்டிற்கு உட்பட்டிருந்த பகுதியை ஆட்சி செய்து வந்தான். இவனது நாட்டைப் பற்றி உ.வே.சா, "இவன் சோழநாட்டுப் பாபநாசம் ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகிலுள்ள ஒரு கிராமத்திலிருந்த சிற்றரசன். இவன் இருந்த ஊர் பிற்காலத்தில் இவன் பெயராலே அன்னிகுடியென்று வழங்கி வருகின்றது."[29] என்று கூறுவதிலிருந்து இன்றைய ஆடுதுறை அருகிலுள்ள பாபநாசம் பகுதியை இவன் ஆட்சி செய்தான் என்பது தெரியவருகிறது. அன்னி பெரு வீரமுடையவன் என்பதைப் பல புலவர்கள் சங்க இலக்கியங்களில் போற்றியுள்ளனர். இவனது போர்த்திறம் குறித்து உ.வே.சா., "இவன் திதியற்குப் பகைவன். அன்னி மிஞிலிக்கு தந்தை. குறுக்கை என்னும் ஊரிலிருந்தவன். இவன் திதியனொடு பொருதபோது அவனாற் கண்களையப்பட்டான். இவனது காவல் மரம் வெட்டப்பட்டது. இதற்காக இவனுடைய மகள் அன்னி மிஞிலி என்பாள் ஆறாச் சினத்தாளாய் கலத்து முண்ணாது வாலிது முடாதிருந்து, அத்திதியன் வழியினரைக் குறும்பியன் என்பான் போர் தொடுத்தபோது தன் சினமாறி மிகக்களிப்புடன் திதியனுடைய அருந்தையூர் கண் புகலாயினள்."[30] என்று கூறுகிறார். அன்னி திதியன் மீது போர்தொடுத்து அவனது காவல் மரமாகிய புன்னையை வெட்டி வீழ்த்திய போது அன்னியின் புகழை அங்குக் கூடியிருந்த பாணர் முதலான பலரும் ஆரவாரத்துடன் பாடி மகிழ்ந்ததை வெள்ளிவீதியார்,

''அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்

தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிப்

புன்னை குறைத்த ஞான்றை வயிரியர்

இன்னிசை ஆர்ப்பினும் பெரிதே'' (அகம்.45)

என்று கூறுவதனால் அறியலாம். அன்னி திதியனின் காவல் மரத்தை வெட்டிய பிறகு திதியன் இவன் மீது படையெடுத்து வந்து இவனது கண்களைப் பறித்தான் என்பது புலனாகிறது.

### 3.7.14 ஆய் எயினன்

சோழநாட்டிலுள்ள வெளியம் என்னும் நகக்கண் வாழ்ந்த வேளிர் குலத்தைச் சார்ந்தவன் ஆய் எயினன். வெளியன் வெண்மான் ஆய் எயினன் என்று அழைக்கப்பெற்றவன். பாழியை ஆண்ட நன்னன்பால் நட்பு கொண்டவன். நன்னன் ஆட்சிக்குட்பட்ட வாகைப்பகுதியின் ஆட்சிப்பொறுப்பில் நன்னனால் அமர்த்தப்பட்டான். வாகை மீது போர் தொடுத்த அதியனைக்கொன்று வாகையை மீட்டான். நன்னனனுக்குரிய பாழி மீது மிஞிலி என்பான் போர் தொடுத்தபோது அவனை எதிர்த்துப் போரிட்டு போர்க்களத்திலேயே அமரிடைவீழ்ந்தான். ஆய் எயினன் இறந்த போது அவனைச் சுற்றி பறவைகள் வட்டமிட்டபடி இருந்தனவாம். இதனை, "ஆய் எயினன் பறவைகளிடத்தும் பேரன்பு கொண்டவன் அதனால் போரில் இறந்துபட்ட அவன் உடல் வெயிலில் வருந்தாதவாறு பறவைகள் தம் சிறகுகளால் நிழல் கொடுத்தன."[31] என்று புலவர் கா.கோவிந்தன் கூறுவதிலிருந்து பெறப்படுகிறது. எயினன் இரவலர் மட்டுமின்றி அஃறிணையிடத்தும் பேரன்பு கொண்டவன் என்பது புலனாகிறது. இந்நிகழ்வை,

> புள்ளிற் கேம மாகிய பெரும்பெயர்
>
> வெள்ளத் தானை" (அகம். 142)

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம்.

### 3.7.15 ஆய்

பொதிய மலையால் சூழப்பட்ட ஆய்நாடடினை ஆண்டவன் ஆய் என்னும் வேளிர் தலைவன். அவனது ஆய்கானம் நறுமலர்களாலும் யானைகளாலும் நிறைந்தது. சிறந்த கொற்றம் கொடையும் வாய்ந்த ஆயினது நாட்டினுள் பாடி பரிசில் பெறும் பாடுமகள் நுழைவது எளிது ஆனால் படை எடுத்துவரும் பகைவர் நுழைவது அரிது. ஆய் தன்னை நாடிவரும் வறியவர்களுக்கு தன் நாட்டின் கண்ணுள்ள யானைகளையே பரிசாகத் தரும் வழக்கம் கொண்டவன். ஆயின் நாட்டின் கண் உள்ள பிடிகள் மட்டும் ஒருகருப்பத்தில் பத்துக் கன்று பெறுமோ

என்றும் ஆய் நாடன் சிறப்பையும் அவனது கொடைத்தன்மையையும் புலவர் சிறப்பித்துப் பாடியுள்ளார் இதனை,

“விளங்குமணிக் கொடும்பூ ணாஅய் நின்னாட்
டிளம்பிடி யொருசூல் பத்தீ னும்மோ
நின்னுநின் மலையும் பாடி வருநர்க்
கின்முகங் கரவா துவந்துநீ யளித்த
அண்ணல் யானை” (புறம். 130)

என்ற பாடலடிகள் வாயிலாக உணரலாம். தன்னிடமுள்ள பொருட்கள் அனைத்தையும் வாரி வழங்குவதில் ஆய்க்கு நிகர் அவனே. அவனது கட்டுத்தறியில் உள்ள அனைத்து யானைகளையும் பாணர்களுக்கும் கூத்தர்களுக்கும் பரிசாகக் கொடுத்துவிட்டு தோகை மயிலுடன் ஆயும் தனித்திருக்கும் நிகழ்வை

“களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாடின் பனுவற் பாண ருய்த்தெனக்
களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப
ஈகை யரிய விழையணி மகளிரொடு
சாயின் றென்ப வாஅய் கோயில்” (புறம்.127)

என்ற பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. இத்தகைய பெரும் கொடை வள்ளல் இறந்ததால் புலவர் பெருமக்கள் பெரிதும் துன்புற்றனர். ஆய் இல்லாத நாட்டைவிட்டு வேற்றிடம் சென்றனர். இதனை,

“ஒள்ளெரி நைப்ப வுடம்பு மாய்ந்தது
புல்லென் கண்ணர் புரவலர்க் காணாது
கல்லென் சுற்றமொடு கையழிந்து புலவர்
வாடிய பசிய ராகிப்பிறர்

நாடுபடு செலவின ராயின ரினியே. (புறம். 240)

என்று புறப்பாடல் ஆயின் வள்ளல் தன்மையையும் புலவர்களை அவன் போற்றிய விதத்தையும் அவன் பிரிவால் வேற்றிடம் செல்ற புலவர்களின் நிலையையும் எடுத்தியம்புகிறது.

### 3.7.16 ஓரி

கொல்லி மலையை ஆண்டவன் ஓரி. இவன் சிறந்த கொடை வள்ளல் ஆவான். ஓரி தான் வறுமையுற்ற போதும் வேழங்களின் தந்தங்களை விற்று மக்களை வாழவைப்பவன். அதனால் அவன் மக்களும் அவன் மீது மிகுந்த அன்பு கொண்டிருந்தனர். மழவர்களை வென்றிக் கொண்டவன் ஓரி இருப்பினும் தன்னாட்டகத்து கொல்லி மழையைப் பிறன் ஒருவன் ஆள்வது பொறாத சேர வேந்தன் பணிக்க மலைமான் திருமுடிக்காரி கொல்லிமலைமீது படையெடுத்துச் சென்று ஓரியைக் கொன்றுவிட்டு கொல்லியைச் சேரர்க்குக் கொடுத்தான். இவன் சிறந்த வில்லாற்றலுடையவன். ஓரியின் வில்லியிலிருந்து புறப்படும் அம்பானது தொடக்கத்தில் வேழத்தை வீழ்த்தி பின்னர் புலியின் உயிரையும் மானின் உயிரையும் காட்டுப் பன்றியின் உயிரையும் போக்கிவிட்டு இறுதியாக உடும்பின் உடலில் சென்று தைத்து செயலற்றுப் போகும். அத்தகு வில்லாற்றல் உடையவன் ஆகவேதான் வல்வில் ஓரி எனப் போற்றப்பட்டான். இதனை,

“வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வாய் உழுவையைப் பெரும்பிறிது உறீஇப்
புழல்தலைப் புகர்க்கலை உருட்டி உரல்தலைக்
கேழல் பன்றி வீழ அயலது
ஆழற் புற்றத்து உடும்பில் செற்றம்
வல்வில் வேட்டம் வலம்படுத்து இருந்தோன்
புகழ்சால் சிறப்பின் அம்புமிகத் திளைக்கும்” (புறம். 152)

இப்பாடல் அடிகள் வாயிலாக அறியலாம்.

### 3.7.17 முடியன்

திருக்கோவலூக்குத் தென்பகுதியில் உள்ள மலைய நாட்டை முடியன் ஆட்சி செய்தான். “குறுக்கைக் கூற்றத்து முடியனூர் என்றும் ‘பெண்ணைத் தென்கரை மகதை மண்டலத்துக் கீழ்துண்ட நாட்டு முடியனூர்’ என்றும் கல்வெட்டுகளில் முடியனின் ஊர் கூறப்பட்டுள்ளது. ‘இம்முடியனுக்குரிய மலைகள் கள்ளக்குறிச்சி பகுதியில் உள்ளன.”[32] என்று உ.வே.சா கூறுகிறார். மேலும் சங்கப்பாபடல்களில் ஔவையார் மட்டுமே இவனைப் பற்றிப் பாடியுள்ளார். இவன் மலை போன்ற யானைகளைக் கொண்டிருந்தான் எனவும் வாய்மொழி தவறாத பண்புடையவன் எனவும் ஔவையார் கூறுகின்றார். முடியனின் மலையில் விளைந்த மூங்கிலினைத் தலைவியின் தோள்களுக்கு உவமமாகச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. இதனை,

“வரைபோல் யானை, வாய்மொழி முடியன்
வரை வேய் புரையும் நல் தோள்
அளிய தோழி! தொலையுந பலவே.” (நற்.390)

என்று வரும் பாடலடிகளால் அறியலாம்.

### முடிவுரை

வேளிர்கள் என்பவர்கள் இனக்குழுச் சமூகத்திலிருந்து தோன்றிய பூர்வ குடிகள். வேளிர்கள் வடபுலத்தவர்களின் பரம்பரையைச் சார்ந்தவர்கள் என்று அறிஞர்கள் கூறிவந்தாலும் அவர்கள் தமிழகத்தின் பூர்வ குடிகள்தான் என்பதை நச்சினார்க்கினியரின் கூற்று மூலம் தெளியலாம். வேளிர் என்ற சொல் வேளாண்மையாகிய பிறருக்குக் கொடுத்தல் என்ற பொருளால் பெயர் பெற்றது. வேளிர்களின் அடிப்படைத் தொழில் கொடை நல்குதலும் வறியவர்களுக்கு உதவுதலும் ஆகும்.

வேளிர்களின் காலத்தில் பாணர்கள், கூத்தர்கள், விறலியர் போன்றோர்களின் வாழ்வும் கலைகளும் சிறப்புறப் பேணி காக்கப்பட்டு வந்துள்ளது. இவர்கள் குறுநில மன்னர்கள், சீறூர் மன்னர்கள், வேளிர்கள் என்ற பல பெயர்களால் இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளனர். இவர்கள் வேளாண்மைத் தொழிலை அடிப்படையாகக் கொண்டவர்கள். இவர்கள் புன்செய் நிலத்தை

விளைநிலமாகக் கொண்டவர்கள். இவர்களின் வாழ்விடம் மலை சார்ந்த நிலமாக இருந்துள்ளது.

சீறூர் மன்னர்களாகிய வேளிர்கள் தங்கள் வறுமையுற்ற காலத்திலும் தமது கொடைப் பண்பை மறவாது போற்றி ஒழுகி வந்துள்ளனர். தங்களிடம் இருக்கும் பொருட்களைக் கொண்டு விருந்தோம்பல் பண்பையும் கொடைத்தன்மையையும் போற்றி வந்துள்ளனர்.

வேளிர்கள் வேந்தர் சமூகத்தில் வேந்தர்களுக்கு ஆட்பட்டுச் சிறு நிலப்பரப்பை ஆண்டு வந்துள்ளார். சில சமயங்களில் வேந்தர்களை எதிர்த்தும் போர் புரிந்துள்ளனர். வேளிர்களில் சிலர் வேந்தர்களுக்குப் படை உதவி புரிந்தும் படைக்குத் தலைமை ஏற்றும் வந்துள்ளனர். இந்நிகழ்வை வேந்துவிடு தொழில் என்ற பெயரால் இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

வேளிர் என்று பொதுப்பெயரால் இவர்கள் அழைத்தாலும் இவர்களில் சிலர் மட்டும் தங்களை வேளிர் என்ற சிறப்புப் பெயரால் அழைத்துக் கொண்டனர். அவர்களில் வேள் பாரி, வேள் பேகன் போன்றோர் குறிப்பிடப்பிடத்தக்கவர்கள்.

வேளிர்களில் கொடைத்தன்மையில் மட்டும் சிறந்துவிளங்காது போர்க்கலையிலும் சிறப்புற்று விளங்கியுள்ளனர். மூவேந்தர்கள் ஒரு சேர படையெடுத்துவரினும் அவர்களை எதிர்த்து போரிட்டு அப்போரில் அவர்களால் தன்னை வெற்றிபெற இயாலுது படை நடத்திச் செல்லும் தன்மையையும் வீரத்தையும் ஒருங்கே பெற்றவர்களாக விளங்கியுள்ளதைப் பாரியின் வாயிலாகத் தெளியலாம்.

அதியமான் பற்றிய பாடல்கள் வாயிலாக வேந்தர்களைப் போலப் போருக்குத் தூது அனுப்பும் செயல்பாட்டை வேளிர்களும் பெற்றிருந்தனர் என்பதையும் தனக்குக் கிடைத்தர்க்கரிய பொருள் கிட்டினாலும் பிறருக்குக் கொடுக்கும் இயல்பினை வேளிர்கள் பெற்றிருந்தது தெரிய வருகிறது. தன்னுயிரை விடத் தன்னை நாடிவருப்பர்களைக் காக்கும் பண்பு வேளிர்களிடம் இயல்பாக இருந்ததை அதியமான் மூலமாகத் தெரிந்து கொள்ளலாம்.

பேகன், பாரி போன்ற வள்ளல்கள் வாயிலாக மனித உயிர்கள் மட்டுமின்றி அஃறிணை உயிர்களின் துன்பத்தைக் கண்டும் மனம் வருந்தி அதற்குத் தன்னால் இயன்ற கொடை வழங்குதலை அடிப்படை நோக்கமாகக் கொண்டிருக்கும் வேளிர்களின் இயல்பு வெளிப்படுகிறது.

வேளிர்களில் பலர் செல்வச் செழிப்பான மலைவளம் கொண்ட பகுதியை ஆட்சி செலுத்தி வந்துள்ளனர். இவர்களின் கொடைப் பொருளாக யானை சிறந்த இடத்தைப் பிடித்துள்ளது. மலை நாடுகளை ஆட்சி செய்யும் ஆய் போன்ற வேளிர்கள் யானையைக் கொடைப் பொருளாக வழங்குதலை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

தன்னை நாடிவரும் புலவர்களுக்கு அவர்கள் விரும்பும் பொருள் எதுவாயினும் அதனைப் பரிசாகக் கொடுக்கும் பழக்கம் வேளிரிடம் இருந்துள்ளதைப் பேகன் பற்றிய பரணர் கூற்று மூலமாக வெளிப்படுகிறது. பரணர் வேண்ட உடனடியாக தனது மனைவியின் துயர் துடைக்கப் பேகன் தன் பரத்தமை தொழிலைவிடுத்து தன்துணைவியுடன் சேர்ந்து வாழ முற்பட்ட நிகழ்வானது வேளிர்கள் தமிழ்ப் புலவர்கள் மீது கொண்ட பற்றும் புலவர்களுக்கு வேளிர்காலத்தில் இருந்த மதிப்பும் அவர்களின் சொல்லுக்குப் வேளிர்கள் செவி மடுக்கும் நிலையும் வெளிப்படுகிறது.

## சான்றெண் விளக்கம்

1. தேவநேய பாவணார் (உ.ஆ) - திருக்குறள் ப. 254
2. இரமலிங்கம்.அரங்க - சங்க இலக்கியத்தில் வேந்தர் ப. 15
3. நச்சினியார்க்கினியர் (உ.ஆ.) - தொல்காப்பியம், பொருளதிகாரம் ப. 258
4. மு.ராகவையங்கார் - வேளிர் ப. 5
5. மேலது. ப. 44
6. மேலது. ப. 76
7. மேலது. ப. 44
8. தேவிபிரசாத் சட்டோபாத்யாயா - இந்தியத் தத்துவ இயலில் நிலைத்திருப்பனவும் அழிந்தனவும் ப. 342
9. கா.சுப்பிரமணியன் - சங்ககாலச் சமுதாயம் ப. 33
10. பெ.மாதையன் - சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும் ப. 10
11. மேலது. ப. 39
12. ராஜ்கௌதமன் - ஆகோள் பூசல் மாற்றும் பெருங்கற்கால நாகரிகமும் ப. 24
13. பெ.மாதையன் - சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும் ப. 44
14. ராஜ்கௌதமன் - ஆகோள் பூசல் மாற்றும் பெருங்கற்கால நாகரிகமும் ப. 42
15. மேலது. ப. 84
16. கா.சிவதம்பி - திணைக்கோட்பாட்டின் சமூக அடிப்படைகள் ப. 337
17. புலவர் கா.கோவிந்தன் - தமிழக வரலாறு சங்க காலம் அரசர்கள். ப. 110
18. உ.வே.சாமிநாதையர் (உ.ஆ) புறநானூறு ப. 212
19. ஔவை சு.துரைசாமி (உ.ஆ) புறநானூறு ப. 143
20. உ.வே.சாமிநாதையர் (உ.ஆ) புறநானூறு ப. 267
21. ஔவை சு.துரைசாமி (உ.ஆ) புறநானூறு ப. 224
22. உ.வே.சாமிநாதையர் (உ.ஆ) புறநானூறு ப. 159
23. புலவர் கா.கோவிந்தனார் - சங்க கால அரசர்கள் ப. 252
24. ஔவை சு.துரைசாமி (உ.ஆ) - புறநானூறு ப. 278
25. மேலது. ப. 187
26. வெ.வரதராசன் - தமிழ்ப் பாணரின் வாழ்வும் வரலாறும் ப. 140

27. உ.வே.சாமிநாதையர் (உ.ஆ) - புறநானூறு ப. 128

28. ஔவை சு.துரைசாமி (உ.ஆ) - புறநானூறு ப. 137

29. உ.வே.சாமிநாதையர் (உ.ஆ) - புறநானூறு ப. 158

30. மேலது. ப. 192

31. புலவர் கா.கோவிந்தனார் - சங்க கால அரசர்கள் ப. 256

32. உ.வே.சாமிநாதையர் (உ.ஆ) - புறநானூறு ப. 187

# இயல் நான்கு

# வேந்தர் மரபும் புலவர் மரபும்

இனக்குழு வாழ்வின் இறுதி நிலையிலிருந்து வேந்தர் சமூகம் முகிழத் தொடங்குகிறது. சிறு நிலப்பரப்பை மையமாகக் கொண்டு ஆட்சி செலுத்திய சீறூர் மன்னர்களின் பொதுவுடைமைச் சிந்தனையிலிருந்து விடுபட்டு தனியுடைமை சிந்தனைக்குச் சமூகம் மாற்றம் பெறுகிறது. இந்த தனியுடைமை சமூகத்தில் அனைத்து உரிமைகளும் சொத்துக்களும் ஆட்சி அதிகாரங்களும் தனிமனிதனிடத்தில் அதாவது மன்னனிடத்தில் முழுமையாகக் குவிக்கப்படுகிறது. பொதுவுடைமையில் உணவிற்காக நிகழ்ந்த போர்கள் தனியுடைமையில் நிலத்திற்கும் பொருளுக்குமாக மாற்றம் பெறுகிறது. நிலத்தின் எல்லை விரிவடைந்து பெரும் நிலப்பரப்பு ஒரு மன்னனின் ஆட்சிக்குக் கீழ் அமைகிறது. நீண்ட நிலப் பரப்பை ஆட்சி புரியும் மன்னர்களைப் புலவர்கள் 'வேந்தர்' என்று அழைத்தனர். சங்க கால மன்னர் மற்றும் வேந்தர்களின் கல்வி, வீரம், புகழ், கொடை, போர்முறை, வெற்றி போன்ற வாழ்வியல் நிகழ்வுகளை அறிவதற்குச் சிறந்த கருவூலமாக இருப்பது சங்க இலக்கியங்களாகும். சங்க இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு பண்டைய வேந்தர்களின் வாழ்வியல் விழுமியங்களை ஆராயுமுகமாக இவ்வியல் அமைகிறது.

## 4.1 வேந்தர் மரபு

சங்க இலக்கியங்களில் ஆட்சித் தலைவர்கள் வேந்தன், மன்னன், அரசன், இறை அல்லது இறைவன், காவலன், கோ எனப் பல்வேறு பெயர்களால் குறிக்கப்பெறுகின்றனர். சங்க இலக்கியங்களில் வேந்தன், மன்னன், அரசன், இறை அல்லது இறைவன், காவலன் ஆகியவையே மிகுதியாகப் பயின்று வருகின்றன. "வேந்தர், மன்னர், அரசர் ஆகிய சொற்களை மேலோட்டமாகப் பார்க்கும்பொழுது இச்சொற்கள் ஒருபொருட் பன்மொழி போலத் தோன்றும். ஆனால் ஆழமாக நோக்கும்போது ஒவ்வொரு சொல்லும் தம்மளவில் பொருள் வேறுபாடு உடையதாகவும் ஒவ்வொரு காரணம் பற்றி உருவானதாகவும் உள்ளது."[1] என்று அரங்க. இராமலிங்கம் குறிப்பிடுவது நோக்கத்தக்கது. எனவே, வேந்தர், மன்னர், அரசர் ஆகிய சொற்கள் பொருள் ஒருமைப்பாடு தோன்றினாலும் தம்மளவியல் வேறுபாடு உடையதாகவே உள்ளன.

### 4.1.1 அரசன் அல்லது அரசர்

சங்க இலக்கியத்தொட்டு இக்கால இலக்கியங்கள் வரை ஆட்சித் தலைவனை அரசன் எனக் கூறும் மரபு உள்ளன. "'ராஜா' என்னும் வடசொல்லினின்று 'அரசர்' தோன்றியது என்று ரா.பி சேதுபிள்ளையும் அரசன் என்பது தமிழ்ச் சொல்லே"[2] என்று ஞா. தேவநேயப்பாவணரும் குறிப்பிடுவதாக அரங்க. ராமலிங்கம் கூறுகிறார். தொல்காப்பியர் காலத்திலேயே 'அரசர்' என்ற சொல் வழக்கிலிருந்துள்ளது. சங்க இலக்கியத்தில் அரசன், அரசர் என்ற சொற்கள் மிகவும் குறைவாகவே பயின்று வந்துள்ளது. தொல்காப்பியம், புறநானூறு, அகநானூறு முதலிய பழந்தமிழ் இலக்கியங்களில் அரசன் என்னும் சொல் இடம் பெறவில்லை. ஆனால் இதன் பன்மைப் பெயராகிய அரசர் என்னும் சொல் மட்டும் அகநானூற்றிலும் புறநானூற்றிலும் தொல்காப்பியத்திலும் இடம்பெற்றுள்ளது. ஆட்சித்தலைவர்களின் பொதுமைப் பண்புகளைச் சுட்டுமிடங்களில் மட்டும் இப்பன்மைப் பெயர் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

அரசன் அல்லது அரசர் என்னும் சொற்கள் குறிப்பிட்ட எந்த ஒரு ஆட்சித் தலைவனையும் குறிக்கப் பயன்படுத்தப்படவில்லை. ஆனால் மணிமேகலையில் மட்டும் 'அத்திபதி எனும் அரசன்' எனக் குறிப்பிட்ட ஆட்சித்தலைவனைக் குறிக்க அரசன் என்னும் பெயர் பயன்படுத்தப்பட்டுள்ளது. சிலம்பில் ஓரிடத்தில் மட்டுமே 'அமரர்க்கு அரசன்' என இந்திரன் குறிக்கப்படுகிறான். இதனை

"அத்தி பதிஎனும் அரசன் பெருந்தேவி

சித்திபுரம் ஆளும் சீதரன் திருமகள்" (மணி. பீடிகை. 42-43)

"அமரர்க்கு அரசன் தமர் வந்து ஈண்டி, அவள்" (சிலம்பு. பதிகம் 6)

என்ற தொடர்களின் வாயிலாக அறியலாம். சிலப்பதிகாரம், மணிமேகலை இவ்விரு காப்பியங்களில் மட்டும் அரசன், அரசர், என்னும் சொற்கள் ஆட்சித் தலைவர்களைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்விரண்டு காப்பியங்களிலும் வேந்தன், மன்னன் ஆகிய சொற்கள் குறைவாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஏனைய இடங்களில் அரசன், அரசர் என்னும் சொற்கள் தனிப்பட்ட எந்த ஆட்சித் தலைவனையும் குறிக்காமல் பொதுப்பொருளில் வழங்கப்பட்டுள்ளன.

### 4.1.2 இறை, இறைவன்

இறை என்னும் சொல் சங்க இலக்கியத்தில் தலைவன், இல்லத் தலைவன், கடவுள், வேந்தன் என்னும் பொருள்களில் ஆளப்பட்டிருக்கின்றது. இறை, இறைவன் என்ற சொற்கள் பெரும்பான்மை ஆட்சித் தலைவர்களின் பொதுமைப் பண்பைச் சுட்டுவதற்கும் சிறுபான்மை நேரடியாக மன்னர்களைக் குறிக்கவும் ஆளப்பட்டுள்ளன.

> "இறையே தவறுடையான்" (கலி. 56:34)

என்னும் கலித்தொகை அடியில் ஆட்சித் தலைவன் பொதுவாகக் குறிக்கப்படுகின்றான். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் வஞ்சினம் கூறுமிடத்து,

> "கோடிய னெம்மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
> குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக" (புறம். 71:11-12)

எனக் கூறுகின்றான். அவன் தன்னைப்பற்றிக் கூறும் பொழுது இறை எனக் கூறிக் கொள்கின்றான். உலகைக் காக்கும் கடவுளையும் நாட்டைக் காக்கும் அரசனையும் மக்கள் இறை அல்லது இறைவன் எனக் குறித்தனர். இக்கருத்துப்பட வள்ளுவரும்

> "முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
> இறையென்று வைக்கப் படும்" (குறள். 388)

என்று குறிப்பிடுகின்றனர். முறையாக ஆட்சி செய்து குடிமக்களைக் காப்பாற்றும் திறத்தால் வேந்தன் இறை, இறைவன் என்று அழைக்கப்பட்டுள்ளான்.

### 4.1.3 காவலன், காவலர்

காவலன் என்பது ஆட்சித்தலைவனுக்குக் காரணப் பெயராக அமைந்துள்ளது. குடிமக்களை உள்நாட்டு, வெளிநாட்டுத் தீமைகளிலிருந்தும் பகைவர்களிடமிருந்தும் காப்பவன் காவலன். எனவே, குடிமக்களைப் பல்வேறு இன்னல்களிலிருந்து காக்கும் இயல்பு பெற்றிருப்பதால் ஆட்சித்தலைவனைக் காவலன் என்று மக்கள் அழைத்தனர். காவலர் பெயர் தோற்றம் பற்றி சி.பாலசுப்பிரமணியன் குறிப்பிடுகையில் "தொடக்கத்தில் மக்கள் உழுது வித்தி விளைவு செய்யும் பயிர்களை விலங்குகள் தொல்லையினின்றும் காத்தனர். எனவே, இவர்கள் 'காவலர்கள்' எனப்பட்டனர். இவர்களுடைய இவ்வரும் பெருந்தொண்டிற்கு மக்கள் தாம்

விளைவித்த நிலத்திலிருந்து வந்த வருவாயில் ஒரு பங்கினை நன்றிக் கடனாகக் காணிக்கையாகத் தந்தனர். நாளடைவில் இக்காவலர்கள் நாட்டின் காவலர்கள் ஆயினர். அது பரம்பரை பரம்பரையாகவும் தொடர்ந்தது"[3] என குறிப்பிடுகிறார். எனவே, இனக்குழுக் காவலர்களே மன்னர்களாகப் பரிணமித்தனர்.

காவலன் என்னும் சொல் பெரும்பான்மை ஆட்சித் தலைவரையும், சிறுபான்மை காவலாளியையும், ஆட்சித்தலைவரையும் குறிக்கின்றன. காவல் மன்னர், காவல் வேந்தர் எனக் காத்தல் வினையை அடிப்படையாக வைத்தே இச்சொற்கள் ஆட்சித்தலைவர்களைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன. குடிமக்களைத் தீமைகளிலிருந்து காக்காவிடின், அந்நாட்டில் முறையாக நடக்க வேண்டிய செயல்கள் நடைபெறாது. கல்வி, செல்வம் இரண்டும் குன்றும் என்று கூறுவதன் வாயிலாகக் காவலனின் காத்தல் தொழிலின் இன்றியமையாமையை வள்ளுவர் புலப்படுத்துகிறார். இதனை,

"ஆபயன் குன்றும், அறுதொழிலோர் நூல்மறப்பர்

காவலன் காவான் எனின்" (குறள். 560)

என்ற குறளின் வாயிலாக அறியலாம்.

### 4.1.4 மன்னன், மன்னர்

'மன்னன்' என்ற சொல் 'மன்' என்ற சொல்லின் அடியாகத் தோன்றியது. 'மன்' என்னும் சொல்லுக்கு 'நிலைபேறு' என்பது பொருள். இதன் அடிப்படையில் மன்னன் என்பதற்கு நிலைபேறுடையவன் என்ற பொருளில் வழங்கப்பட்டுள்ளது. இதனை, "சமூக நலத்திற்கு அரசாட்சியை நிலையாக ஏற்படுத்துதல் இன்றியமையாதது என்பதைப் பழந்தமிழர்கள் உணர்ந்திருந்தனர். ஆட்சித் தலைவனை 'மன்னன்' என அழைப்பதிலிருந்தே இது தெரிகிறது"[4] என்னும் ரா. பி. சேதுப்பிள்ளையின் கருத்தினை அரங்க இராமலிங்கம் எடுத்தாளுகிறார். சங்க இலக்கியங்களில் அரசன், இறைவன் காவலன் ஆகிய சொற்களைவிட மன்னன் என்ற சொல் மிகுதியாக வழங்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

சிலப்பதிகாரத்தில் வேந்தர் என்னும் சொல்லுக்கு நிகராக மன்னர் என்னும் சொல் வழங்கப்பட்டுள்ளது. மன்னன் என்ற சொல் குறுநில மன்னர்களைக் குறிப்பதற்கே பெரும்பான்மை பயன்படுத்தப்பட்டிருக்கிறது. சீறூர் மன்னன், ஓரெயில் மன்னன், தொல்குடி மன்னன், தண்ணடை மன்னர், குறுநில மன்னர், பருத்தி வேலிச்

சீறூர் மன்னன் என்னும் தொடர்கள் இவ்வுண்மையை வலியுறுத்துகின்றன. சிறிய அல்லது சிறந்த ஊர்களையுடைய மன்னன், ஒரே அரணுக்கு உரிய மன்னன், தொன்மையான குடியிலே பிறந்த மன்னன், மருதநிலம் சூழ்ந்துள்ள ஊர்களுக்குரிய மன்னன், குறுநில மன்னன், பருத்தி வேலி சூழ்ந்த சிறந்த அல்லது சிறிய ஊர்களுக்குரிய மன்னன் எனப் பொருள் தருகின்ற நிலையில் மன்னன் என்னும் சொல் சங்க இலக்கியத்தில் வழங்கப்பட்டுள்ளது.

தண்ணடை மன்னர் என்றால் மருதநிலத்து ஊர்களையுடைய மன்னர் என்ற பொருளில் அமைந்துள்ளது. தண்ணடை என்ற சொல்லுக்குச் "சிற்றூர் அல்லது மருத நிலத்தூர்"[5] எனத் தமிழகராதி பொருள் கூறுகிறது. தண்ணடை மன்னர் என்பதற்கு ஔவை சு. துரைசாமிப் பிள்ளையும், "மருத நிலத்து ஊர்களையுடைய பெரு வேந்தர்கள்"[6] என்றே உரை எழுதியுள்ளார். "சங்க இலக்கியத்திற்கு உரை வரைந்தோர் வேந்தன், மன்னன் ஆகிய இரு சொற்களுக்கும் உரை எழுதுமிடத்து ஒரு சொல்லுக்குப் பிறிதொரு சொல் என்ற நிலையிலேயே உரை எழுதியிருக்கிறார்கள்."[7] என்று அரங்க. இராமலிங்கம் குறிப்பிட்டுள்ளார். எனவே மன்னர் என்ற சொல் குறுநில மன்னர்களையும் வேந்தர்களையும் ஒருங்கே குறிக்கும் சொல்லாகச் சங்க இலக்கியத்தில் வழங்கப்பட்டுள்ளது.

### 4.1.5 வேந்தன், வேந்தர்

சங்க கால பெரு நில மன்னர்களைத் தனித்து அடையாளமிட வேந்தன் என்ற சொல்லாட்சியை அக்காலப் புலவர்கள் கையாண்டுள்ளனர். வேந்தன் என்ற சொல்லாட்சி குறித்து பல்வேறு கருத்துக்கள் ஆராய்ச்சியாளர்கள் மத்தியில் நிலவியுள்ளது. "வேந்தன் என்னும் சொல் வெம்மை அல்லது நெருப்பிலிருந்து உருவாகியிருக்கலாம். தீமைகளை அகற்றுவதற்கு வேந்தன் தன் கோலை உயர்த்திக் கடுமையான முகத்தோடு தண்டிக்க வேண்டும்' என்னும் அடிப்படையில் வேந்தன் வந்திருக்கலாம் என்று ரா.பி.சேதுப்பிள்ளையும் அன்பிற்குரிய ஆட்சியாளன்"[8] என்று அ.சிதம்பரநாத செட்டியாரும் குறிப்பிடுவதாக அரங்க. இராமலிங்கம் கூறுகிறார். "வேந்தன் என்னும் பெயர் வேய்ந்தோன் என்பதன் மரூஉ. வேய்தலாவது முடியணிதலைக் குறிக்கும். வேந்தர் அனைவரும் தம் ஆட்சி பொறுப்போர்க்கும் பொழுது முடியணித்தலை முக்கிய நிகழ்வுகளாகக் கொண்டிருந்தனர். முடியணியும் முத்தமிழரசரையும் முடியுடை மூவேந்தர் என்று கூறுவது மரபு"[9] என்று ஞா.தேவநேயன் குறிப்பிடுகிறார்.

வேந்துக்குரியவன் வேந்தன் என்பதை இச்சொற்கள் உணர்த்துகின்றன. சங்க இலக்கியங்கள் நிலமாள்பவனை வேந்தன் என்றே மிகுதியாகக் குறிப்பிடுகின்றன. வேந்து என்னும் சொல்லாலும் ஆட்சித்தலைவனைச் சங்க இலக்கியங்கள் குறிக்கின்றன. வேந்து என்னும் சொல் புறநானூற்றில் இருபத்தொன்பது இடங்களில் வருகின்றது. அதில் இருபத்தெட்டு இடங்கள் ஆட்சித்தலைவனைக் குறிக்கின்றன. ஓரிடத்தில் மட்டும் அரசவையைக் குறிக்கின்றது. மன்னன், அரசன், காவலன், இறைவன் ஆகிய சொற்களைக் காட்டிலும் வேந்தன் என்னும் சொல்லே சங்க இலக்கியத்தில் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. மிகப் பெரும்பான்மையும் சேர, சோழ, பாண்டியர்களாகிய முடியுடை ஆட்சித்தலைவர்களையே இச்சொற்கள் சுட்டுகின்றன. தேவர்களுக்குத் தலைவனான இந்திரனையும், அண்ட கோளங்களுக்குத் தலைமையாக விளங்கும் சூரியனையும் பழந்தமிழர்கள் வேந்தன் எனக் குறிப்பிட்டிருப்பதை நோக்குமிடத்து, மேலான தலைமையைக் குறிக்க ‘வேந்தன்’ என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளமையை அறியலாம். இந்திரனையும், சூரியனையும் வேந்தன் என்னும் பெயரால் தொல்காப்பியமும், சிலம்பும் குறிப்பிடுகின்றன. இதனை,

“வேந்தன் மேய் தீம்புனல் உலகம்” (தொல். பொருள். அகத். 5:3)

“முலைச் சிறகரிந்த வச்சிர வேந்தன்” (சிலம்பு. ஊர்காண் .94)

“வேனில் வேந்தன்” (சிலம்பு. ஊர்காண். 121)

என்ற அடிகள் மூலம் தெளியலாம். புறநானூறு சேர, சோழ, பாண்டிய ஆட்சியாளர்களின் பெயர்களைக் குறிப்பிடும் போது வேந்தன் எனக் குறிக்கிறது. இச்சேர, சோழ, பாண்டிய மரபில் வந்தோர் மிகச் சிறிய நிலப்பரப்பை ஆண்டிருந்த போதிலும் அவர்களை வேந்தர் என்றே புலவர்கள் குறித்துள்ளனர். ஆனால் நாஞ்சில் வள்ளுவன் மற்றும் அதியமான் ஆகிய குறுநில மன்னனையும் வேந்தன் என புறநானூறு குறிப்பிடுகிறது. இதனை,

“ஈதல் ஆனான் வேந்தே வேந்தர்க்குச்
சாதல் அஞ்சாய் நீயே ஆயிடை” (புறம். 139:11-12)

“வினைவல் ஆனாப் பொருபடை வேந்தே” (புறம். 89:4)

என்ற அடிகளால் பெறலாம். வேந்தர் என்ற சொல்லுக்கு அடையாக வருகின்ற

“வம்ப வேந்தர்” (புறம். 345:7)

“கொற்ற வேந்தர்” (புறம். 338:8)

“கடுமான வேந்தர்” (புறம். 350:5)

“வென்றெறி முரசின் வேந்தர்” (புறம். 112:4)

“கடம்பகட் டியானை வேந்தர்” (புறம். 265:8)

“ஒண்பூண் வேந்தர்” (புறம். 197:7)

“கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்தர்” (புறம். 367:14)

என்னும் புறநானூற்று அடிகளை நோக்கும்பொழுது இவர்கள் படை வலிமையைப பெருக்குவதிலும், தொடர்ந்து போர் செய்வதிலும் வேட்கையுடையவர்கள் என்று தெரிகின்றது. வேந்தர்களின் ஏனைய பண்பு நலங்களைக் குறிக்கும் அடைகளைவிடப் போர் அல்லது வீரம் பற்றி வரும் அடைகளே மிகுதியாக உள்ளன.

### 4.1.6 வேந்தர், மன்னர் வேறுபாடு

அரசன், இறைவன், காவலன், மன்னன், வேந்தன் ஆகிய சொற்கள் சங்க இலக்கியத்தில் மிகுதியாக ஆட்சி பெற்றிருந்த போதும் மன்னன், வேந்தன் என்ற இவ்விரு சொற்களின் ஆளுமையே மிகுதியாகக் காணப்படுகிறது. ‘மன்னன்’ என்ற சொல் ‘குறுநில மன்னனையும்’, ‘வேந்தன்’ என்ற சொல் ‘முடியுடை ஆட்சித்தலைவராகிய சேர, சோழ, பாண்டியரையும்’ குறிக்கின்றது.

“மன்னர் மன்னன்” (சிலம்பு. கால்கோள்.5)

“மன்னவர் மன்னன்” (சிலம்பு. ஊர் சூழ்.19)

“மன்னர் கோவே” (சிலம்பு. நீர்ப்படை. 67)

“மா மன்னர்” (பழ. 29:3)

என்னும் சங்க இலக்கிய அடிகள் மன்னருக்கு மேல் ஒரு தலைமை இருப்பதைப் புலப்படுத்துகின்றன.

"முடியுடை வேந்தர்" (சிலம்பு. கட்டுரை 1)

"முடிகெழு வேந்தர் மூவர்" (சிலம்பு. பதிகம் 61)

எனச் சேர சோழ பாண்டியரைக் குறிப்பிடும் சங்க இலக்கியம் எனச் சிலரைக் குறுநில மன்னர் பிரித்துக் காட்டுகிறது. குறுநில மன்னர்கள் சிறிய ஊர்கள் பலவற்றிற்குத் தலைவர்களாக இருந்து கொண்டு தங்களுக்கென்று ஒரு சிறுபடையும் வைத்திருந்தனர். வேந்தன் கூறியவழி அவன் ஏவல்கேட்டுப் போருக்குச் சென்று வேந்தனது பணி முடித்தனர் என்னும் செய்தியினைச்

"சீறூர் மன்னன் நெருநை ஞாங்கர்

வேந்துவிடு தொழிலொடு சென்றனன்" (புறம். 319:12-13)

என்னும் புறநானூற்று அடிகள் புலப்படுத்துகின்றன. நாற்படை வளம் பொருந்திய வேந்தராயினும் எம்மை மதியாது இருப்பின் யாமும் மதிக்க மாட்டோம், எம்மை மதித்து வரகஞ்சோறு ஊட்டுபவர் சிற்றூர் மன்னராயினும் அவரையே யாம் பாராட்டுவோம் எனப் புலவர்கள் சுட்டுவதை,

"மண்கெழுதானை ஒண்பூண் வேந்தர்

வெண்குடைச் செல்வம் வியத்தலோ இலமே:

.......................................................

சீறூர் மன்னர் ஆயினம், எம்வயின்

பாடறிந்து ஒழுகும் பண்பி னோரே" (புறம். 197:7-14)

என்னும் புறப்பாட்டு அடிகள் உணர்த்துகின்றன. இப்பாட்டில் வேந்தருக்கும், மன்னருக்கும் உள்ள வேறுபாடு தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. வேந்தரை 'மண்கெழுதானை ஒண்பூண் வேந்தர்' எனவும், குறுநில மன்னரைச் 'சீறூர் மன்னர்' (சிறிய ஊர்களையுடைய மன்னர் அல்லது சிறந்த ஊர்களையுடைய மன்னர்) எனவும் பிரித்துக் காட்டுகின்றது. வேந்தனின் ஏவலையேற்று மந்தி என்னும் குறுநில மன்னன் எழினி என்பவனின் பல்லைப் பறித்துத் தன் வெற்றிக்கு அடையாளமாக அதனை வெண்மணி வாயிலில் பதித்தச் செய்தியை அகநானூறு,

“கடுஞ்சின வேந்தன் ஏவலின் எய்தி

நெடுஞ்சேண் நாட்டில் தலைத்தார்ப் பட்ட

கல்லா எழினி பல்லெறிந் தழுத்திய

வன்கண் கதவின் வெண்மணி வாயில்” (அகம். 211:11-14)

என்ற அடிகளில் உரைக்கின்றது. வேந்தரின் ஏவலை ஏற்றுக் குறுநில மன்னர் செயல்பட்டனர் என்பதை இப்பாடல் தெளிவாகக் காட்டுகிறது. பகை மன்னர் பணிந்து பெறுவதற்கரிய அணிகலன்களைக் கொணர்ந்து திறையாகச் செலுத்தியமையினால் வேந்தனின் சினம் தணிந்தது என்பதை அகப்பாட்டு,

“விருந்தின் மன்னர் அருங்கலம் தெறுப்ப

வேந்தனும் வெம்பகை தணிந்தனன் தீம்பெயற்” (அகம்: 54:1-2)

என்ற அடிகளில் எடுத்துக்காட்டுகிறது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் ஏழு வேளிர்களை வென்றடக்கியதினால், அம்மன்னர் ஏவல்செய்ய இவ்வேந்தன் வேள்வியியற்றினான் என்பதை,

“மன்னர் ஏவல் செய்ய, மன்னிய

வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே” (புறம். 26:14-15)

எனப் புறநானூறு கூறுகிறது. இப்புறப்பாட்டு நெடுஞ்செழியனை வேந்தன் எனவும், அவன் வென்றடக்கிய குறுநிலத் தலைவரை மன்னர் எனவும் தெளிவாக வேறுபடுத்திக் காட்டுகிறது.

பேரரசை நிலை நிறுத்த அல்லது விரிவுபடுத்த விரும்பிய வேந்தர், போர் மேற்கொண்டதைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. “இம்மூவேந்தர் பற்பல குறுநில மன்னருடன் போராடி அவர்களைத் தம் ஆட்சிக்கு ஆட்படுத்த வேண்டிய நிலை அக்காலத்திலிருந்தது. ஆய் போன்ற வலிமையுள்ள சிற்றரசர் பலர் நெடுங் காலமாக மூவேந்தர் ஆட்சியின் கீழ்ப்படாது தனியாட்சி செலுத்தினர்.”[10] எனக் குறிப்பிடும் சு.வித்தியானந்தன் கருத்துப்படி வேந்தர்கள் குறுநில மன்னர்கள் மீது போர் தொடுத்த போதும் சில குறுநில மன்னர்கள் தம் படை வலிமையால் பேரரசை எதிர்த்து நின்ற நிகழ்வு நன்கு புலனாகிறது. இவ்வாறு போரின் மூலம் வெற்றி பெற இயலாத குறுநில மன்னருடனும், குறுநிலத் தலைவருடனும் நல்லுறவை ஏற்படுத்திக் கொள்ள

வேந்தர்கள் விரும்பினர். அதன் அடிப்படையில் பல குறுநிலத் தலைவரிடமிருந்து பெண் கொண்டுள்ளனர். அப்படிப் பெண் கொள்ளும் பொழுது குறுநிலத் தலைவர் சிலர் பெண் மறுத்தலும் உண்டு. அவ்வாறு மறுத்தலுக்கு மகட்பாற் காஞ்சி என்று இலக்கண நூல்கள் சுட்டுகின்றன. மகட்பாற்காஞ்சித் துறையைச் சேர்ந்த பாடல்களில் வேந்தனுக்கும் குறுநிலத் தலைவரான மன்னர்க்கும் உள்ள வேறுபாடு நன்கு புலனாகின்றது.

"தோல் மன்னன் மகளைக் கேட்டுவந்த

மாமுது வேந்தன்" (புறம். 353:11-12)

என்னும் புறப்பாட்டு அடிகள் இவ்வேறுபாட்டை நன்கு விளக்கிக் காட்டுகின்றன. எனவே, வேந்தர்களுக்கும் மன்னர்களுக்கும் உள்ள வேறுபாட்டு இருந்துள்ளதையும் சங்க இலக்கியங்கள் சேர, சோழ, பாண்டிய மரபிலே வந்தோரை 'வேந்தர்' எனவும் குறுநில மன்னரை 'மன்னர்' எனவும் குறிப்பதன் மூலம் அறியலாம்.

**4.2 மூவேந்தர் மரபு**

மூவேந்தரைச் சேர, சோழ, பாண்டியர் என அழைக்கும் மரபு எப்பொழுது தோன்றியது என்பதை வரையறுத்துச் சொல்ல முடியவில்லை. நினைவுக்கு எட்டாத மிகப் பழைய காலத்திலிருந்தே மூவேந்தராகிய சேர, சோழ, பாண்டியன் தமிழகத்தில் ஆட்சி செலுத்தி வந்துள்ளனர். மூவேந்தர்களின் வரலாறுகள் படைப்புக் காலத்திற்கும் முற்பட்ட நிலையில் இருந்துள்ளது. இதனை,

"கல்தோன்றி மண்தோன்றா காலத்தே

வாளோடு முன்தோறிய மூத்தகுடி" (புற.வெண். 35)

என்ற அடிகள் மூலமாக உணரலாம். மேலும், "பழந்தமிழ் நாட்டில் மக்கள் தோன்றிய காலந்தொட்டே மேம்பட்டு விளங்கிய பழங்குடிகள் மூவேந்தர் குடிகள் என்பது போதரும்."[11] என்று வ.குருநாதன் கூறுவதன் மூலம் மூவேந்தரின் தொன்மை புலனாகிறது. குமரிக்கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு என அழைக்கப்பெறும் நிலப்பரப்பில் பாண்டியர் ஆட்சி மேற்கொண்டிருந்ததை அறிய முடிகிறது. ஆனால், சேர, சோழர் இருந்து ஆட்சி புரிந்ததற்கோ, மூவேந்தர் என்ற பிரிவு இருந்ததற்கோ சான்றுகள் இல்லை. கடல்கோளால் குமரிக்கண்டம் அழிவுற்று, வடவேங்கடம் தென்குமரி தமிழகத்தின் எல்லைகளாக அமைந்த பின்னரே மூவேந்தரின்

அமைப்பினைக் காண முடிகிறது. ஆயின் தொல்காப்பியனார் காலத்திற்கு முன்னதே மூவேந்தர் ஆட்சியமைப்பு நிலை பெற்றுவிட்டதை,

"வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு" (தொல். செய்யு. 74:3)

என்னும் கூற்றால் அறியலாம். மூவேந்தரைக் குறிப்பிடும் தொல்காப்பியனார் சேர, சோழ, பாண்டியர் எனக் குறிப்பிடாமல், அவர் தம் மாலையினைப்

"போந்தை வேம்பே ஆரென வரூஉம்

மாபெருந் தானையர் மலைந்த பூவும்" (தொல். புறத். 63.4.5)

எனக் கூறுகின்றார். மாலைக்கு உரிமையுடையவர்களான சேர, பாண்டிய, சோழர் எனக் குறிப்பால் உணர்ந்து கொள்ள வேண்டியுள்ளது. தொல்காப்பியனார் சேரர், சோழர், பாண்டியர் எனப் பெயரிட்டு ஒரிடத்திலேனும் குறிப்பிடவில்லை. பழந்தமிழ் இலக்கியங்கள் சேர, சோழ, பாண்டியரை மூவர் எனப் பின்வருமாறு குறிப்பிடுகின்றன.

"மண்டிணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்

"முரசு முழங்கு தானை மூவ ருள்ளும்" (புறம். 35:3-4)

"தமிழ்கெழு மூவர்" (அகம். 31:14)

"முடியுடை வேந்தர் மூவர்" (சிலம்பு. கட்டுரை. 1)

"மலர் தலை யுலகத்து மன்னுயிர் காக்கும்

முரசுமுழங்கு தானை மூவர்" (பெரும்பாண். 32-33)

என்ற அடிகள் மூலம் இதனை அறியலாம். அவர்கள் தலைமுறை தலைமுறையாக முடிசூடி ஆட்சிப் பொறுப்பினை ஏற்றுச் செயல்பட்டதால் முடிவேந்தர்கள் எனவும் மூவேந்தர்கள் எனவும் அழைக்கப்பட்டனர்.

### 4.2.1 மூவேந்தர்களின் ஒற்றுமை

சேர, சோழ, பாண்டியராகிய வேந்தர் சமுகம் தமக்குள் சிலகாலம் போர்ப்பூசல் கொண்டும், சிலகாலம் ஒற்றுமையை நிலைநாட்டியும் இருந்துள்ளது. மூவேந்தரும் தத்தமது நாட்டின் எல்லைகளுக்குட்பட்ட மக்களைப் போற்றிப் பாதுகாத்தனர். சிற்றரசர்கள் பலர் இவர்களது ஆட்சிக்குட்பட்டு இருந்து வந்தனர்.

தமிழகத்தை ஆளும் மூவேந்தரும் ஒற்றுமையுடன் ஒருங்கே கூடியிருப்பதைக் கண்ட ஔவையார் மிகுந்த மகிழ்சியுற்றார்.

பொருள் வேண்டி இரந்து நிற்கும் பார்ப்பனாக்குக் கைநிறைய பொன் பொருள் கொடுத்தும், தம்மை நாடி வரும் வறியவர்களுக்கு அவர்கள் வேண்டிய பொருளைக் குறைவில்லாமல் கொடுத்தும் இவ்வுலகில் வரையறுக்கப்பட்ட நாள் முழுதும் நலமுடன் வாழ்தல் வேண்டும். நாம் வாழும் காலத்துச் செய்த நல்வினை மட்டுமே இறக்கும் காலத்து உயிருக்குத் துணையாய் நிற்கும். வீடுபேற்றை அடைய விரும்பும் அந்தணர்கள் எடுக்கும் முத்தீயைப் போன்று ஒன்று கூடியிருக்கும் வெண்கொற்றக்குடையை உடைய வேந்தர்களே! இதுவே முடிவான உண்மையும் ஆகும். மூவரும் இதை உணர்ந்து பகைமை ஏதுமின்றி ஒற்றுமையுடன் வானத்து விண்மீன்களை விடவும், கனமழைக்காத்துத் துளிகளை விடவும் அதிகமான நாட்கள் வாழ வேண்டும் என்றும் அவர் வாழ்த்துகிறார்.

மூவேந்தரும் நெடிதுகாலம் ஒற்றுமையுடன் வாழ்ந்து மக்களுக்கு நன்மை செய்யும்படி வேண்டினார். போரும் பூசலும் நடைபெற்று வந்த அந்நாளில் மூவேந்தரும் ஒற்றுமையுடன் விளங்குவது என்பது அரிது. ஒருவரையொருவர் வஞ்சித்து நாட்டைப் பிடிக்கும் ஆசையால் பல தீவினைகளுக்கு மக்கள் ஆளாகக் கூடும். பிறந்த அனைவரும் இறப்பது உறுதி. அவ்வாறு இறக்கும் போது நாம் செய்த நல்வினைகள் மட்டுமே பேசப்படும். அதனால் வாழும் காலத்து இல்லையென வருவோர்க்குக் கொடுத்து மன்னர் மூவரும் ஒற்றுமையுடன் வாழவேண்டும் என்பதே ஔவையின் கருத்தாக அமைந்துள்ளது. இதனை,

“கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்தர்
யானறி யளவையோ விதுவே வானத்து
வயங்கித் தோன்று மீனனு மிம்மெனப்
பரந்து இயங்கு மாமழை யறையினும்
உயர்ந்துமேற் தோன்றிப் பொலிக நும் நாளே” (புறம். 367:14-18)

என்ற அடிகளின் வாயிலாகப் பெறலாம். மேலும், நிலையாமை உடையது இவ்வுலகம். போரிட்டு ஒரு நாட்டைக் கையகப்படுத்தும் மன்னர் இறக்கும் போது அதை உடன் கொண்டு போவதில்லை. பின்னர் வரும் தொடர்பில்லாத யாரோ ஒருவர் அதை ஆள நேரிடுகிறது. இது உலகியல் நிலை என்பதை ஔவையார்,

"நாகத்து அன்ன பாகு ஆர் மண்டிலம்

தமவே ஆயினும் தம்மொடு செல்லா

வேற்றோர் ஆயினும் நோற்றோர்க்கு ஒழியும்" (புறம். 367:1-3)

என்று கூறி உலக நிலையாமையை ஆளும் மன்னர்க்கு எடுத்துக் கூறுகின்றார். முடிவேந்தர்கள் முறை தவறிய வழி ஔவையார் போன்ற அக்காலப் புலவர்கள் அவர்களை நெறிப்படுத்தவும் செய்தனர் என்பது இதனால் பெறப்படுகின்றது. இத்தகைய நல்லாட்சி முறைகளை மக்களும் விரும்பிப் போற்றினர். இதனை சி.இலக்குவனார், "அரசர் நாட்டை நன்முறையில் காத்தனர். அவரை அவருடைய நல்லாட்சி காத்தது. நாட்டு மக்கட்குத் தீங்கு செய்து தீ நெறியில் சென்றோரை இரக்கமின்றி ஒறுத்தது, விளை நிலத்தில் தோன்றிய களையைப் போக்குவது போல் போக்கினர். குடி புறங்காத்து ஓம்ப மக்கள் குற்றத்தைக் கடிதல் அரசரின் ஆளும் தொழிலுக்குரியதே என உலகம் கருதியது."[12] என்று அக்கால மன்னரது ஆட்சி முறையினை எடுத்துரைக்கின்றார்.

கொடுங்கோலாட்சி செலுத்திய மன்னர்கள் மக்களால் தூற்றப்பட்டும், செங்கோலாட்சி செலுத்திய மன்னர்கள் இறைவனுக்கு ஒப்பாகப் போற்றப்பட்டும் வந்துள்ளமை இதன் மூலம் அறியலாம். முடிவேந்தர்கள் தம்நாட்டு வளத்தைப் பெருக்கி குடிமக்களைத் துன்பமின்றி காத்து வந்தனர். சங்க கால மன்னர்கள் குறித்து சு.வித்தியானந்தன், "தமது உள்ள அமைதிக்கு ஏற்றவாறு தமது ஆட்சியை நடத்தினர். ஆனால் அவர் அறிவிலும் கல்வியிலும் சிறந்த அறிஞரின் அறிவுரைகளையும் புலவரின் பொன்னுரைகளையும் போற்றினின்றே ஆட்சி செலுத்தினர். அரசன் விருப்பத்திற்கு மாறாக மக்கள் கிளர்ந்து எழுந்ததாகச் சங்க நூல்களில் யாங்கணும் இல்லை. மன்னர் யாவரும் மக்கள் வாழ்கையில் அமைதி நிலவ வேண்டும் என்பதை உணர்ந்து அதைப் போற்றிப் பாதுகாத்தனர்."[13] என்று கூறுவதால் வேந்தர்கள் தம்மை நாடிவரும் இரவலர்க்கு வாரி வழங்கும் வள்ளல்களாகவும் திகழ்ந்துள்ளனர். இதனாலேயே பழந்தமிழகத்தில் முடிவேந்தராகிய சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவரின் ஆட்சியே நெடுங்காலம் நிலைபெற்றிருந்தது.

**4.3 மூவேந்தர்கள்**

சங்க இலக்கியங்களில் சேர சோழ பாண்டியர் மரபினரை மூவேந்தர்கள் என அழைக்கிறது. சங்க காலத்தில் வேந்தர் மரபு தோன்றியதிலிருந்தே இவர்களின்

ஆட்சி தமிழகம் முழுவதும் பரவியிருந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகிறது.

### 4.3.1 சேரர்

மூவேந்தருள் சேர வேந்தர்களே தொன்மையானவராகவும், சிறப்புமிக்கவராகவும் விளங்குகின்றனர். வேந்தரின் குடிப்பெருமையைச் சுட்டுவதற்கு, அவரின் குலப் பழமையை இறைமையோடு வைத்து வழங்குவது மரபாக சங்க காலத்தில் இருந்துள்ளது. சோழரைச் சூரிய மரபினர் என்று மணிமேகலையும், பாண்டியரைச் சந்திர மரபினர் என்று சிலப்பதிகாரமும் இயம்புகின்றன. சேரரின் தோற்றம் பற்றிப் பழந்தமிழ் இலக்கியங்களில் இடம்பெறவில்லை. பிற்கால இலக்கியமான வில்லிபாரதம் சேரரை 'அக்கினி குலத்தவர்' என்று குறிப்பிடுகிறது. இதனை,

"செங்கதிர் செல்வன் திருக்குலம்" (மணி. பதிகம் 9)

"திங்கட் செல்வன் திருக்குலம்" (சிலம்பு.காடுகாண். 23)

இவன் செந்தழலோன் மரபாகி யீரேழுலகும் புகழ் சேரன்

(வில்லிபா.திரௌபதி மாலையிட்ட சருக்கம் 45)

என்ற அடிகளால் உணரலாம். "சோழ பாண்டியர் வம்சங்கள் இன்ன என்பதைக் குறித்துப் போந்த பண்டை நூல்கள், சேர வம்சத்தின் மூலத்தை மட்டும் அறியாதொழிந்ததை நோக்குமிடத்து, இம்மரபு ஏனையவற்றின் புராதனமானதென்றே புலப்படுகின்றது"[14] என்னும் மு.இராகவையங்கார் குறிப்பிடுகிறார் இவரது கருத்துப்படி சேர குலத்தவர்களே மற்ற இருவரையும் விட பழமையானவர்களாக இருத்தல் வேண்டும். சேரரைப் பற்றிப் பழந்தமிழ் இலக்கியங்களும், நிகண்டுகளும் 'வானவர்' என்றும், 'கோதை' என்றும் குறிப்பிடுகின்றன.

சேரர், சேரலர், ஆதன், கொங்கன், வஞ்சிவேந்தன், போந்தின் தாரோன், வில்லவன், கொல்லி, வெற்பன், குடக்கோ, குட்டுவன், குடகன், கோதை, குடக்கோ, கடுங்கோ, பொறையன், இரும்பொறை, உதியன், வானவன், வானவரம்பன், மலையமான், பொருநையாற்றோன், சேரலன்"[15] என்று சேர மன்னர்கள் பூண்டிருந்த பட்டப்பெயர்களாகத் துரை.அரங்கசாமி குறிப்பிடுகின்றார். 'வானவர் அல்லது வானகத்துக்குரியவர்' என்னும் பொருளில் சேரர்கள் தங்கள் பெயரைப் புனைந்து

கொண்டனர். இவற்றை நோக்கும்பொழுது, சேரர் பண்டு தொட்டுத் தெய்வ ஈடுபாடு பெற்று விளங்கியவர் என்பது நன்கு புலனாகிறது.

சேரலர் என்ற சொல்லே பின்னர் கேரளர் என அழைக்கப்பட்டது. சேரலர் நாடே பின்னர் கேரளர் நாடு என வழங்கப்பட்டது. சேரலரைக் கேரள புத்திரர் என்று அசோகன் கல்வெட்டு குறிப்பிடுகின்றது. “மலைகள் நிறைந்த நாடாதலின் இதனை மலைநாடு, மலை மண்டலம் என இடைக்காலக் கல்வெட்டுக்கள் குறித்தன பின்னர் இது வேறு மொழியினரால் மலையாளம், மலபார் என்று சிதைந்து வழங்கப்பட்டது பின்னர் இந்நாட்டவர் மலையாளிகள் என்றும், இவரது மொழி மலையாளம் என்றும் வழங்கப்பட்டது”[16] என்று சேர நாட்டின் பெயர் குறித்து ஔவை சு.துரைசாமிப் பிள்ளை கருத்துரைக்கிறார்.

சேரல் என்றால் மலை அடுக்கு என்று பொருள். சேர் என்பதற்குச் சேர்தல், பிணைத்தல் என்று பொருள்படும். மலை அடுக்குள் அடுத்தடுத்துப் பிணைந்து, நெருங்கி இருப்பதற்குச் சேரல் என்று பெயர். “மேற்குத் தொடர்ச்சி மலையானது பல அடுக்குகளைக் கொண்டது. அம்மலையை உட்கொண்டு மலைக்கும் கடலுக்கும் இடையில் உள்ள நாடு முழுவதும், சேரல்நாடு எனப்படும். ஆதனால், அந்த நாட்டு அரசர்களுக்குச் சேரலர் என்று பெயர் அமைந்தது”[17] என்று சேரலர் பெயர் காரணம் குறித்து அ. சிதம்பரனார். குறிப்பிடுகிறார்.

சேர வேந்தர்கள் பொறையர் என்றும் சேரர் என்றும் இரு கிளையினராக இருந்து தனித்தனியே ஆட்சி புரிந்தனர். இதில் ஒருவர் உதியன் சேரலாதன் வழிவந்தவர். மற்றொருவர் இரும்பொறை மரபில் வந்தவர். இவருள் முன்னவர் வஞ்சியைத் தலைநகராகக் கொண்ட உள்நாட்டுப் பகுதியினையும், பின்னவர் தொண்டியைத் தலைநகராகக் கொண்ட கடற்கரைப் பகுதியினையும் ஆட்சிபுரிந்தனர். “இவருள் முன்னவர் தம்மைப் ‘பொறை’ என அழைத்துக் கொண்டனர். பின்னவர்கள் ‘சேரல்கள்’ என அழைக்கப்பெற்றனர். “பொறையன் என்பதைச் சேரர் குடி அல்லது குடும்பத்தின் ஒரு பகுதிக்கு அரசனாயிருந்தவனின் பெயராகக் கொள்ளலாம்”[18] சேரர் குடிப்பெயர்களுள் ஏனையவற்றைப் போல் அல்லாமல், ‘பொறையர்’ என்ற இப்பெயர் சேரர்கள் நிலையாக ஓர் இடத்தில் குடியேறிய பிறகு தான் ஏற்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் “பொறை என்பது பாறை அல்லது பொற்கை அல்லது குன்று என்று பொருள்படும்.”[19] என்று தமிழகராதி குறிப்பிடுகிறது. எனவே, பொறையர் என்ற சொல் மலையும், குன்றும் நிறைந்த மலைநாட்டின் வாழும் மக்களையும், மன்னர்களையும்

குறிக்கும் சொல்லாக இருந்து அதனையே சேரர்கள் தங்களது குடிப் பெயராக வைத்திருப்பதை இதன் மூலம் அவதானிக்கலாம்.

சோழ, பாண்டிய நாடுகளைவிட நிலப்பரப்பில் சேர நாடு பெரியதாகவே இருந்துள்ளது. “1800 ஆண்டுகளுக்கு முன்பு தமிழகம் வந்த மேனாட்டறிஞரான ‘பிளினி’ என்பவரது குறிப்பில் சேர நாட்டின் தெற்கு எல்லையாகக் கொல்லமும் கோட்டாறுக் கரையும் இருந்ததாகக் குறிப்பிடப் பெற்றுள்ளது.”[20] ஆனால் “கி.பி.2 ஆம் நூற்றாண்டில் மேலைக் கடற்கரை பகுதிக்கு வந்த யவன அறிஞரான ‘தாளமி’ என்பவரது குறிப்பிலிருந்து பழங்கால சேர நாட்டின் எல்லைப் பகுதிகளை அறிய முடிகிறது. சேர நாட்டின் மேற்கு எல்லையாகக் கடற் பகுதியும் தெற்கு எல்லையாகக் கொல்லம் ஆறும் கிழக்கு எல்லையாக மலைப்பகுதியும் வடக்கு எல்லையாக வானவாரும் அமைந்துள்ளது.”[21] என்று ஔவை சு.துரைசாமி குறிப்பிடுவதிலிருந்து சேர மன்னர்களின் ஆட்சியானது இன்றைய கன்னட பகுதி வரை நீண்டிருந்ததை அறியலாம். வானவர் என்பது வட கன்னட நாட்டின் தென்கோடியில் அமைந்துள்ளது. இது பழங்காலத்தில் வானவாசி நாட்டின் எல்லையில் அமைந்திருந்தது. பழங்காலத்தில் சேர நாடு கன்னட பகுதி வரையிலும் பரவியிருந்தது என்பதை இதன் மூலம் அறியலாம்.

அயிரை, கொல்லி, பாயல், நன்றா, நேரி ஆகிய மலைகளும், ஆன்பொருநை, காஞ்சியாறு, குடவனாறு, காரியாறு, பேரியாறு ஆகிய ஆறுகளும் சேர நாட்டில் குறிப்பிடத்தக்கவை. கருவூர், தொண்டி, நறவு, மாந்தை, வஞ்சி ஆகிய பேரூர்கள் சேர நாட்டில் சிறப்புற்றிருந்தன. இயற்கைவளம் செறிந்த வேழக்காடு, உம்பற்காடு என்னும் பகுதிக்ள சேரநாட்டிற்கு வளம் சேர்த்தன. இங்குள்ள காடுகளில் யானைகள் அதிகம் இருந்ததைப் பற்றி, “யானை மலைக்காடு (உம்பற்காடு) என்று பெயர் பெற்றது”[22] என உம்பற்காடு பற்றி சீனி வேங்கட சாமி கூறுகிறார்.

### 4.3.2 சோழர்

மூவேந்தருள் நடுவண வைத்துச் சிறப்பிக்கப் பெறும் பேரரசு சோழப்பேரரசு ஆகும். கிள்ளி, செம்பியன், சென்னி, வளவன் போன்ற சிறப்புப் பெயர்களால் சங்க இலக்கியங்களில் சோழர்கள் அழைக்கப்பெறுகின்றனர். சோழ பேரரசின் தோற்றத்தையும் தொன்மையினையும் அறிந்து கொள்ள முடியவில்லை. “ஆரியர்க்கு முன் தென்னாட்டில் வாழ்ந்த கருப்பு மனிதர் என்னும் பொருளில் வழங்கும் கால அல்லது கோல என்ற வடமொழிச் சொல்லினின்றும் வந்தது என்பர் சிலர். சோளம் விளையும் நாடு ‘சோள நாடு’ அது சோழநாடு என ஆயிற்று என்பர் சிலர்.

திருடன் என்ற பொருளில் வழங்கும் 'சோரன்' என்ற சொல்லிலிருந்து சோழன் என்ற சொல் வந்தது என்பர் சிலர்."[23] என்று சோழரின் பெயர் ஆராய்ச்சி பற்றி கா.கோவிந்தன். குறிப்பிடுகிறார்.

"சேரரும், பாண்டியரும் முழு அதிகாரம் படைத்த வேந்தராக இருந்தனரென்றும், சோழர் கூட்டுக் குடும்பங்கள் பல சேர்ந்த குடியாட்சி முறையைத் தொடக்கத்தில் கொண்டிருந்தனர்"[24] என்று கே.என்.சிவராசப்பிள்ளை. குறிப்பிடுவதாகச் சங்க இலக்கியத்தில் வேந்தர் என்னும் நூல் குறிப்பிடுகிறது. "பதினொரு வேளிர், ஒன்பது அரசர் என்பது நன்கு சிந்திக்கத்தக்க எண்கள் ஆகும். தொகைநூற் பாடல்களில் சோழர் என்னும் பன்மைச் சொல் பல இடங்களில் வருவதைக் காணலாம். உறந்தை, வல்லம், குடந்தை, பருவூர், பெருந்துறை முதலிய பல இடங்களில் சோழ மரபினர் இருந்தனர் என்று தெரிகிறது. இக்குறிப்புகளால், தொடக்கக் கால முதல் ஏறக்குறைய இரண்டாம் கரிகாலன் காலம் வரை, சோழ நாட்டின் சோழ மரபினர் பலர் பல இடங்களில் இருந்து ஆட்சி புரிந்தனர்."[25] என்று கருத்திற்கு வலுசேர்க்கும் விதமாக மா.இராசமாணிக்கனார் விளக்கம் தருகிறார்.

இவர் கருத்திற்குச் சான்றாகச் சோழர் ஒன்பது தாயாதிகளாகப் பிரிந்து போரிட்டுக் கொண்டிருந்த நிலையினைப் பின்வருமாறு "சங்க இலக்கியங்களை ஆராய்ந்து பார்க்கின்றபோது, சோழ அரசர்களைப் பற்றி ஒரு செய்தி தெரிகிறது. சோழ மன்னர் பரம்பரையில் ஒன்பது தாயாதிகள் இருந்தனர். அவர்கள் முடி மன்னனாகிய பெரிய சோழ அரசனுக்குக் கீழடங்கிச் சிற்சில நாடுகளை அரசாண்டனர். ஆனால், அவர்கள் அடிக்கடி தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டிருந்தார்கள். சோழர் குலத்து அரசர் தங்களுக்குள்ளே போரிட்டுக் கொண்டதைச் சங்க நூல்களில் காண்கிறோம். தாயாதிகள், சமயம் நோந்தபோதெல்லாம் முடியரசனுடன் போர் செய்து கலகம் உண்டாக்கினார்கள். கரிகாற்சோழன் அரசு கட்டில் ஏறினபோது, ஒன்பது தாயாதிகள் அவனுக்கு எதிராகக் கலகஞ்செய்து போரிட்டார்கள். அவர்களையெல்லாம் அவன் வென்று அடக்கிய பிறகு முடி சூடினான். கரிகாற் சோழன் இறந்த பிறகு அவன் மகனான கிள்ளி வளவன் சிம்மாசனம் ஏறியபோதும், ஒன்பது தாயாதிகள் கலகஞ்செய்து போரிட்டனர். அப்போது செங்குட்டுவன் சோழனின் உள்நாட்டுப் போரில் தலையிட்டுப் போர் செய்து தன் மைத்துனனான கிள்ளிவளவனைச் சிம்மாசனம் ஏற்றினார். தாயாதிப்போர் ஒரு புறமிருக்கச் சோழ அரசர்களில் அண்ணன் தம்பிகளும் சில வேலைகளில் ஒருவருக்கொருவர் போர் செய்தனர். தகப்பனும் மகனும் கூட தங்களுக்குள் போர் செய்து கொண்டதைச் சங்க இலக்கியங்களில் பார்க்கிறோம்."[26]

என்று சோழ பேரரசுகளுக்கிடையே அடிக்கடி போர் நடந்த நிகழ்வைச் சீனி. வேங்கட சாமி விளக்குகிறார்.

கிள்ளி, சென்னி எனச் சோழர் இரு பிரிவினராகி உறந்தை, அழுந்தூர் என்னுமிடங்களில் ஆட்சி புரிந்தனர். ஆனால் இன்னார்க்குப் பின் இன்னார் ஆட்சியுரிமை ஏற்றார் என்பதற்கான சான்றுகள் இல்லை. பின்னாளில் கிள்ளி மரபினரே இரண்டு இடங்களிலும் ஆட்சி புரிந்துள்ளனர். அவர்களும் ஒற்றுமையின்றி (நலங்கிள்ளி-நெடுங்கிள்ளி) போரிட்டுக் கொண்டனர். சேரர், பாண்டியர் போலன்றிச் சோழர் பல குழுக்களாகப் பிரிந்து நின்று ஒருவருடன் ஒருவர் போரிட்ட நிலையினைக் காண முடிகின்றது.

பழந்தமிழ்ச் சேர, பாண்டிய வேந்தரின் வரலாற்றைக் கூறும் அளவிற்குச் சோழரின் வரலாற்றைக் கூற முடியவில்லை. சோழரின் தொடக்கக் கால அரசியல், ஆட்சியியல் நிலையினை மேற்குறிப்பிட்ட சான்றுகள் உணர்த்துகின்றன. பாண்டிய நாட்டிலும் பழைய இனத் தலைவர்கள் பல இடங்களிலிருந்து ஆட்சி புரிந்துள்ளனர் என்பதைச் 'செருமான பஞ்சவ ரேறே என்னும் புறநானூற்று அடியால் அறியலாம். சேரரைப் பற்றியோ, அவர்தம் பழைய இனக் குழுக்கள் பற்றியோ இது போன்ற குறிப்புகள் கிடைக்கவில்லை. மேலும், சேரரைப் பற்றிய வரலாற்றினை அறிந்து கொள்வதற்குப் பதிற்றுப்பத்து துணையாவது போல சோழரைப் பற்றி அறியத் தனி நூல்கள் எதுவும் கிடைக்கப்பெறவில்லை.

சோழ நாடு சங்க இலக்கியங்களில் பாராட்டப்பெற்றிருப்பதோடு பிறநாட்டு வரலாற்றுப் பேரறிஞர்களாலும் பாராட்டப்பெற்றுள்ளது. கி.பி.81-96 இல் எழுதப்பெற்ற 'செங்கடல் செலவு' எனும் பொருளுடைய 'பெரிபுளூஸ் மாரிஸ் எரித்ரியா' என்ற நூலின் ஆசிரியர் புகாரைக் 'கடற்கரை நாடு' என்றும் உறையூரை, 'அர் கரு' என்றும் குறிப்பிட்டுள்ளார். அவர்க்கு அரை நூற்றாண்டு கழித்து வாழ்ந்த 'தாலமி' என்பவர் புகாரை 'கபெரீஸ்' என்றும் உறையூரை 'ஒர்துரா ரெகியா சோரநடி' என்றும் நாகையை 'நிகாமா' என்றும் குறிப்பிட்டுள்ளார். 'மிலிந்தா அரசனுடைய கேள்விகள்' என்ற கி.பி. முதல் நூற்றாண்டில் எழுதப்பெற்ற புத்த நூல் 'கோளப்பட்டினம்' என்று சோழநாடு குறிப்பிடப்படுகிறது.

இவ்வாறு பல அறிஞர்களால் போற்றப்பட்ட சோழநாடு வளம் பொருந்திய நாடாக விளங்கியது. அதற்குக் காரணமாக அமைந்தது காவிரி ஆறு ஆகும். 'வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரி பாய்வதால் ஒருவேலி நிலம் ஆயிரம் கால்

நெல் விளையும்’ எனவும் ‘ஒரு யானை படுக்கும் அளவான சிறிய இடம் ஆயிரம் யானைகளைப் புரக்கும் நெல்லை விளைவிக்கும்’ எனவும் பாராட்டப்பெற்று இன்றும் தென்னாட்டு நெற்களஞ்சியமாகச் சோழநாடு விளங்குவதால் அது காவிரி நாடு எனவும் காவிரி சூழ் நாடு எனவும் காவிரி புரக்கும் நாடு எனவும் சோழநாடு அழைக்கப்படுகிறது. சோழ நாட்டின் வளத்தை,

“வான் பொய்ப்பினும், தான் பொய்யா,
மலைத் தலைய கடல் காவிரி
புனல் பரந்து பொன் கொழிக்கும்” (பட்டினம். 5-7)

“ஒருபிடி படியுஞ் சீறிடம்
எழுகளிறு புரக்கு நாடு” (புறம். 40: 10-11)

“சாலி நெல்லின் சிறைகொள் வேலி
ஆயிரம் விளையுட் டாகக்
காவிரி புரக்கு நாடு” (பொருந.246-248)

என இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. செந்தமிழ் நாட்டினைச் சேர்ந்த பன்னிரு நாடுகளில் புனல் நாடு, பன்றிநாடு, அருவாநாடு ஆகிய நாடுகளையும் இன்றைய தஞ்சை, திருச்சி, புதுக்கோட்டை, வட, தென்னார்க்காட்டு மாவட்டங்களையும் உள்ளடக்கிய நாடாகச் சோழ நாடு திகழ்ந்துள்ளது. ஆர்க்காடு, உறையூர், குடந்தை, குராப்பள்ளி, சாக்காடு, தலைச்செங்காடு, நெய்தலங்கானல், புகார், பிடவூர், வல்லம், வெண்ணி, அழுந்தூர், ஆவூர், இடையாறு, ஆகியவற்றைச் சோழநாட்டுப் பேரூர்களாக இலக்கியங்கள் குறிப்பிட்டாலும், புகாரும் உறையூரும் தலைநகரங்களாகச் சிறப்புப் பெற்றிருந்தன என்பதை,

“பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி” (பட்டின. 285)

“ஆரங்கண்ணிச் சோழன் முதூர்ப்
பேராச் சிறப்பின் புகார்” (சிலம்பு. பதிகம் 12-13)

என்பவற்றால் அறியலாம். புகார் பின்னர்க் காவிரிப் பூம்பட்டினம் என்றும் அழைக்கப்பெற்றது. புறநகர், அகநகர் என இரண்டு பகுதிகளாய்ப் புகார் நகர் அமைந்திருந்தது. புறநகர் இருவூர்ப் பாக்கம் எனவும், அகநகர் பட்டினப் பாக்கம் எனவும் வழங்கப் பெற்றன. 'காவிரி கடலோடு கலக்குமிடத்தில் அமைந்த புகார் கடல் வாணிபத்தில் சிறந்து விளங்கிற்று. காற்றின் இயக்கத்தால் கடல்வழி வந்த கலங்கள் கொணரும் குதிரை போன்றவற்றை இறக்குவதும் பொதிய மலையில் வளர்ந்த அகில் மரங்களையும் முத்துக்களையும் ஏற்றுவதும் இரவு பகல் ஓயாது நிகழ்ந்து கொண்டிருக்கும்.

அரசாட்சியின் தலைநகரம் உறையூரில் மகதச் சிற்பரும் மராட்டக் கொல்லரும் யவனத் தச்சரும் வந்து வனப்புற வனைந்த அரசன் பெருங்கோயில் முதலாயின விளங்கும். நால்வகைப் படைவீரர், உழவர், மருத்துவர், காலக்கணிதர், மறையோர், பல்வேறு வணிகர், முத்துக் கோப்போர் போலும் பல்வகை தொழிலாளர், நாழிகைக் கணக்கர், கணிகையர், கூத்தர் போலும் பல்வேறு வகையினர்க்கு எனத் தனித்தனி தெருக்கள் அமைந்திருந்தன. சோழர் தலைநகர்களுள் உறையூரே பழமையானதாகத் தோன்றுகின்றது. ஒய்மா நாட்டு நல்லியக் கோடனைப் பாராட்டும் இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார், மூவேந்தர் தலைநகரங்களைக் குறிப்பிடும்பொழுது, சோழரின் தலைநகராக உறந்தையைக் குறிப்பிடுகின்றார். இதனை,

"ஓடாப் பூட்கை உறந்தை" (சிறுபாண். 83)

என்ற அடியின் மூலம் உணரலாம். சோழரின் பழைய தலைநகரான உறந்தை, கரிகாலன் காலத்தில் புதுப்பிக்கப்பட்டது. உறந்தையில் அறங்கூறவை இருந்து அதில் அறம் நின்று நிலைபெற்று வந்துள்ளது. சோழர்க்கு இரண்டு தலைநகர் இருந்ததை,

"மாட மதுரையும் பீடா ருறந்தையும்
கலிகெழு வஞ்சியு மொலிபுனற் புகாரும்" (சிலம்பு. வேனில் 3-4)

என்னும் அடிகளில் சிலம்பு விவரிக்கிறது.

### 4.3.3 பாண்டியர்

பாண்டியர்களைச் செழியன், வழுதி, பூழியன், மாறன், தென்னவன், பஞ்சவன் என இலக்கியங்கள் சுட்டுகின்றன. சேர, சோழ பாண்டியர்களுள் பாண்டியர்களே தொன்மையானவர்கள் என்று இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இந்திய இலக்கியங்களில் மிகவும் பழைமையான இலக்கியங்களாகக் கருதப்படும்

இராமாணயம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களிலும் வெளிநாட்டவர் குறிப்புகளிலும் பாண்டிய நாடு பற்றியக் குறிப்புகள் காணப்படுகின்றன. இதனைச், “சீதையைத் தேடி சொல்லும் வானர வீரர் பால், தெற்கே கபாடபுரம் என்றொரு நகர் உண்டு. அதன் வாயிற் கதவுகள் பொன்னும், முத்தும் வைத்திழைக்கப் பெற்ற வனப்புடையன என்று கூறினான் சுக்ரீவன் என வால்மீகி இராமாயணம் கூறுவதும், குமரியாறும் குறிப்போடு தென்னாடு போந்த அர்ச்சுனன், பாண்டியன் மகளை மணந்து மாண்புற்றான் என வடமொழி பாரதம் கூறுவதும், இலங்கையின் முதல் அரசன் விஜயன், பாண்டியன் மகளை மணந்து பெற்ற மகன் பாண்டிய வம்ச தேவன் என பெயர் பெற்றார் என இலங்கை வரலாற்று நூலான மகாவம்சம் கூறுவதும், ரோமானியப் பேரரசன் கி.மு.20 இல் விளங்கிய அகஸ்டஸ் சீஸர்பால் பாண்டியன் அரசியல் தூதரை அனுப்பி இருந்தார் என அந்நாட்டு வரலாற்று ஆசிரியர்கள் கூறுவதும், உரோமர்கள் வழங்கிய செப்புக்காசுகள் கணக்கற்றன, மதுரையைச் சூழல் கிடைப்பதும் பாண்டிய நாட்டின் பழமையையும், பெருமைகளும் நிலைநாட்டுவனவாம்”[27] என்று கா.கோவிந்தன் பாண்டியரின் பழமையைச் சுட்டுகிறார்.

மேலும், பாண்டியர்களின் வரலாற்றைப் பற்றிக் குறிப்பிடும் போது “சேர, சோழ, பாண்டியர் மூவரும் ஒரு தாய் வயிற்றில் பிறந்தோர் எனவும், அவர்கள் தென்னாட்டில் நாகரிகம் வளர்ச்சிக்குத் தோன்றுமிடமாகிய தாமிரவருணியாற்றின் கரையில், கொற்கையைத் தலைநகராகக் கொண்டு வாழ்ந்து வந்தனர் எனவும், பின்னர், யாது காரணத்தாலோ, அவர்கள் தம்முள் பிரிந்தனர் எனவும், அவருள் பாண்டியர் ஆங்கேயே நிலைத்துவிட்டனராக, ஏனை இருவரும் முறையே மேற்கினும், வடக்கினும் சென்று தங்கள் தங்கள் பெயரால் தனியரசு அமைத்துக்கொண்டனர்”[28] எனவும் பழைய வரலாறுகள் கூறுவதாகக் கா.கோவிந்தன் குறிப்பிடுகிறார்.

#### 4.3.3.1 தமிழ்ச் சங்கம் வளர்த்த பாண்டியர்

பாண்டியர்களே தமிழ் வளர்க்கச் சங்கங்கள் வைத்துப் போற்றியுள்ளனர். பல்வேறு இயற்கை இடர்பாடுகளுக்குமிடையே அரும்பாடுபட்டு தமது தலைநகர் அமைத்த இடந்தோறும் சங்கம் அமைத்து தமிழைப் போற்றிய பெருமை பாண்டியருக்கே உரியது. “காய்சினவழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாகவுள்ள பாண்டிய வேந்தர் என்பத்தொன்பதின்மர் கடல் கொள்ளப்பட்ட தென்மதுரையிலிருந்து ஆட்சிபுரிந்து முதற்சங்கத்தைத் தோற்றுவித்தனர் என்றும் வெண்தேர் செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாகயுள்ள ஐம்பத்தொன்பதின்மர். கபாடபுரத்திலிருந்து ஆட்சிபுரிந்து இரண்டாவது சங்கத்தைத் தோற்றுவித்தனர் என்றும், முடத்திருமாறன்

முதலாக உக்கிரப்பெருவழுதி ஈறாகவுள்ள நாற்பத்தொன்பதின்மர் இப்பொழுதுள்ள மதுரையில் (உத்திர மதுரை) இருந்து ஆட்சி புரிந்து, மூன்றாவது சங்கத்தைத் தோற்றுவித்தனர் என்றும், இத் தமிழ்ச் சங்கங்களில் பாண்டிய வேந்தர் முறையே எழுவர், ஐவர், மூவர் எனக் கவியரங்கேறினர்”[29] என்றும் இறையனார் அகப்பொருள் உரை இயம்புகின்றது. சங்கம் இருந்து நிலைபெற்றதையும், பின்னர்க் கடல்கோளால் தென் மதுரை அழிவுற்றதையும், கடல்கோளில் அழிவுற்ற தமிழ் நாடுகளையும் அடியார்க்கு நல்லார் உரைத்துள்ளார். இதனை,

“தென்மதுரை யகத்துத் தலைச் சங்கத்து அகத்தியனாரும் இறையனாரும் குமரவேளும் முரஞ்சியூர் முடி நாகராயரும் நிதியின் கிழவனும் என்றிவருள்ளிட்ட நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் எண்ணிறந்த பரிபாடலும் முதுநாரையும் முதுகுருகும் களரியாவிரையும் உள்ளிட்டவற்றைப் புனைந்து தெரிந்து நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு இரீஇயினார் காய்சினவழுதி முதற் கடுங்கோனீராயுள்ளார் எண்பத்தொன்பதின்மர் அவருட் கவியரங்கேறினார் எழுவர் பாண்டியருள் ஒருவன் சயமா கீர்த்தியனாகிய நிலந்தரு திருவிற் பாண்டியன் தொல்காப்பியம் புலப்படுத்து இரீஇயினான்”[30] என்னும் அடியார்க்கு நல்லார் உரை மூலம் பெறலாம். மேலும், பாண்டியர் நிலப்பரப்பு அழிவுற்றதை,

“ப∴றுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள” (சிலம்பு. காடுகாண். 19-20)

எனச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.

“நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட் டாசான்” (தொல். பாயிரம் 9-11)

என்ற அடிகளின் வாயிலாகப் பாண்டியர் அவையில் புலவர் கூடியிருந்து தமிழாராய்ந்தனர் என்றும், நூல்கள் அரங்கேற்றப் பெற்றன என்றும் அறியலாம் இச்சிறப்புக் கருதியே பழந்தமிழ்ப் புலவர்கள் தமிழ் நூல்களின் தகுதியினை ஆராயும் நகரமாகவும் பாண்டியரின் தலைநகரமாகவும் விளங்கிய மதுரையைக் குறிப்பிடும்பொழுது, தமிழோடு இணைத்தே வழங்குகின்றனர்.

"தமிழ்கெழுகூடற் றண்கோல் வேந்தே" (புறம். 58:13)

"நிலனாவிற் றிரிதரூஉ நீண்மாடக் கூடலார்

புனாவிற் பிறந்தசொற் புதிதுண்ணும் பொழுதன்றோ" (கலி. 35:17-18)

"தமிழ் வையைத் தண்ணம் புனல்" (பரி. 6:60)

"தென்றமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவாய்" (மணி.ஆபுத்திர. 139)

எனப் பழந்தமிழ் இலக்கியங்கள் பகர்வதிலிருந்து சேரருக்கும், சோழருக்கும் இல்லாத தமிழ் வளர்த்த பெருமை பாண்டியருக்கு உண்டு எனக் கூறலாம்.

**4.3.3.2 மதுரை நகர்ச் சிறப்பு**

மதுரைப் பேரூரின் பல்வேறு வளங்களையும், அப்பேரூர் அமைந்திருந்த நிலையையும், ஆங்குக் காலை எழும் ஒலிகளையும், மதுரைக் கோட்டையில் அமைந்துள்ள பொறிகளின் இயல்பையும், வணிகர் நிலையினையும், அவர் விற்கும் பொருள்களையும், ஆடை வகைகளையும் இளங்கோவடிகள் சிறக்க எடுத்துரைத்துள்ளார். மதுரை, நாளங்காடி, அல்லங்காடி எனும் இருபெரும் அங்காடிகளைப் பெற்றிருந்தது. அவற்றுள் நாளங்காடி மேகங்கள் படிந்து முகத்தலால் குறைதலும், ஆறுகள் நிறைந்து பாய்தலால் மிகுதலும் இன்றி ஒரு தன்மை தாய் விளங்கும் முந்நீரைப்போன்று, பலரும் வந்து பொருட்களை இடுவதால் மிகுதலும் பலரும் பொருட்களைப் பெற்றுச் செல்வதால் குறைதலும் இன்றி, என்றும் ஒரு தன்மைத்தாய்க் குவிந்துகிடக்கும் பெரும் பொருளைப் பெற்றிருந்தது என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. இதனை,

"மழைகொளக் குறையாது, புனல்புக மிகாது

கரைபொருது இரங்கும் முந்நீர் போல

கொளக்கொளக் குறையாது, தரத்தர மிகாது.

நாளங் காடி நனந்தலைக் கம்பலை." (மதுரை. 424-430)

என்ற அடிகளின் மூலம் பெறலாம். மதுரை, பேரரசின் தலைநகரம் வளங்கொழிக்கும் கடை வீதி, மக்கள் கண்டு மருண்டு மகிழ்வதற்கும் வளமும், வனப்பும் உடையது. அக்கடைவீதியில் வைரம், மரகதம், பதுமம், நீலம், மாணிக்கம், புருடராகம்,

வைடூரியம், கோமேதகம், முத்து, பவளம் ஆகிய நவமணிகள் ஒருபுறமும் சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம் எனும் நால்வகைப் பொன்கள் ஒருபுறமும் பருத்தி நூலினும், எலி மயிரினும், பட்டு நூலின் வகைக்கு நூறென வகை வகையாக நெய்யப்பெற்ற ஆடை வகைகள் ஒருபுறமும் விற்கப்பட்டுள்ளன. இதனை,

“காக பாதமும் களங்கமும் விந்துவும்

ஏகையும் நீங்கி இயல்பில் குன்றா

.......................................

நூலினும், மயிரினும், நுழைநூற் பட்டினும்

பால்வகை தெரியாப் பன்னூ றடுக்கத்து

நறுமடி செறிந்த அறுவை வீதியும்.” (சிலம்பு, ஊர்காண்: 180-207)

என்று மதுரை அங்காடிகண் பொருட்கள் விற்கும் பொருட்களைப் பட்டியலிட்டுக் காட்டுகிறது. மேலும், மணம் மிகு மலர்களைப் பூந்தட்டிலே இட்டுவைத்தும் ஒன்றிற்கொன்று மாறுபட்ட மலர்மாலைகளை விரித்து வைத்தும் விற்பவர்களும் பாக்கும் வெற்றிலையும், சங்கு சுட்ட சுண்ணாம்பும் விற்பவர்களும் மதுரை அங்காடிகளிலிருந்தனர் என்பதை மதுரைக்காஞ்சி,

“பிடகைப்பெய்தகமழ்தருபூவினர்

பலவகை விரித்த எதிர் பூங்கோதையர்,

.............................................

நீடுகொடிஇலையினர் கோடுசுடுநாற்றினர்” (மதுரை. 367-401)

என எடுத்துரைக்கிறது. இவ்வாறு பல்வேறு வணிகம் புரிவோர், மதுரையின் அங்காடியில் விலை கூறி விற்கும் முறைமையை இலக்கியங்கள் எடுத்தோதுகின்றன.

### 4.3.3.3 கொற்கைப் பட்டிணம்

பாண்டிய நாட்டுப் பேரூர்களில் மதுரையைப் போல் கொற்கையும் சிறப்புற்று விளங்கியது. மதுரையை அடுத்த சிறப்புடைய பேரூராக கொற்கை விளங்கியது. அது பாண்டிய நாட்டிற்கு ‘முத்துடைத்து’ என்ற பெருமையைப் தேடித்தந்த. கொற்கை, செல்வம் கொழிக்கும் சிறப்புடையதால் பாண்டியர், அந்நகர்

காவல் அரிதின் பேணி காத்து வந்தனர். கொற்கை துறையும், அத்துறை முத்தும் ரோமர் முதலாம் மேனாட்டு மக்கள் பலராலும் பாராட்டப் பெற்றுள்ளன. இக்கொற்கைப் பட்டினத்தை இலக்கியங்கள் பலவாறு சிறப்பித்துள்ளன. பாண்டியர் அறம் பிறழாது கொற்கையைக் காத்து வந்தனர் என்பதை,

“மறப்போர்ப் பாண்டிய ரறத்திற் காக்குங்

கொற்கை” (அகம். 27:8-9)

என அகநானூறு புகழ்வதன் மூலம் உணரலாம். கொற்கைப் பட்டினம் முத்து விளைச்சலுக்குப் பெயர் பெற்றுத் திகழ்ந்தது. திரை கொணர்ந்தொதுக்கும் கொற்கைத் துறை முத்துக்கள், ஆண்டு வரும் குதிரைகளின் கால்களைச் சிதைத்து, மேற்செல்லவொட்டாமல் தடுக்கும் என்றும், புகழ்மிக்க கொற்கையில் முத்தும், வலம்புரியும் கலந்து காட்சிதரும் என்றும், கடலுள் மூழ்கிக் கொண்ட முத்துச் சிப்பிகளைக் களுக்கு விலையாகத் தரும் கவின்மிகு வளமுடையது கொற்கை என்றும், முத்தெடுக்கக் கடலுள் மூழ்கிய பரதவர் ஆண்டுறை சுறா மீன்களோடு போரிட்டுக் கொன்று, முத்துக்களை வாரிக்கொண்டு வரும்பொழுது, கொற்கைத் துறைக்கண் வாழ்வார் சங்கு முழங்கி வரவேற்பர் என்றும் அகநானூறு குறிப்பிடுகிறது. இதனை,

“இவர் திரை தந்த ஈர்ங்கதிர் முத்தம்

கவர் நடைப் புரவிக் கால்வடுத் தபுக்கும்

நற்றேர் வழுதி கொற்கை முன்துறை” (அகம். 130:9-11)

“இலங்கிரும் பரப்பின் எறிசுறா நீக்கி

வலம்புரி மூழ்கிய வான் திமில் பரதவர்

ஒலிதலைப் பணிலம் ஆர்ப்ப கல்லெனக்

கலிகெழு கொற்கை எதிர்கொள இழிதரும்.” (அகம். 350:10-13)

என்று அகநானூறு கொற்கையின் சிறப்பை எடுத்துரைக்கிறது. சேர, சோழ வேந்தரின் தலைநகரங்களைவிடப் பாண்டியரின் மதுரையையும் கொற்கையையும் பழந்தமிழ் இலக்கியங்கள் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன.

### 4.4 வேந்தரின் சின்னங்கள்

தொல்காப்பியர் படை (வாள்), கொடி, குடை, முரசம், குதிரை, யானை, தேர், மாலை, முடி ஆகியவற்றை இன்றியமையாத அரச சின்னங்களாகக் கூறியுள்ளார். இதனை,

“படையும், கொடியும், குடையும், முரசும்,

நடைநவில் புரவியும், களிறும், தேரும்,

தாரும், முடியும், நேர்வன பிறவும்,

தெரிவு கொள் செங்கோல் அரசர்க்குரிய” (தொல்.மரபு. 72)

என்ற நூற்பா வாயிலாக அறியலாம். இவற்றுள் கொடி, குடை, முரசு, தார், முடி ஆகிய ஐந்தினையும் அரசர்க்குரிய சின்னங்களாகக் கொள்ளலாம். இவற்றுடன் அரியணையும் அரசர்க்குரிய சின்னமாக இருந்ததைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

#### 4.4.1 கொடியும் அரச பொறியும்

சேர, சோழ, பாண்டியர்க்கு முறையே வில், புலி, கயல் ஆகிய சின்னங்கள் பொறிக்கப்பட்ட தனித்தனிக் கொடிகள் இருந்தன. மூவேந்தரின் கொடிகள், அவற்றில் பொறிக்கப்பட்ட சின்னங்கள் ஆகியன குறித்த செய்திகளைச் சிலப்பதிகாரம் எடுத்தோதுகிறது.

அரச பரிவாரங்களில் கொடி ஒரு முக்கியமான சின்னமாக இருந்து வந்துள்ளது. பருத்தி அல்லது பட்டாலான ஒரு துணையின் மீது வேந்தனுக்குரிய பொறி வரையப்பட்டது. பல வேறுபட்ட உயரமுள்ள கொடிக்கம்பங்களில் அவைப் பறக்க விடப்பட்டன. கோட்டையின் கொத்தளங்களில் இக்கொடியை நல்ல நாள் கண்டு நாட்டினர். போர் தொடங்கும்போது, படைவீரர்கள் தங்களது நாட்டுக் கொடியுடன் போர்க்களத்திற்குச் சென்றனர். மிகப்பெரிய யானைகள் முதுகின் மேல் அமர்ந்தபடி வீரர்கள் கொடிகளை உயர்த்திப் பிடித்தவாறு சென்றனர். அவர்கள் அவ்வாறு செல்லும் அளவிற்கு கோட்டை, கோயிற் வாயிற் கதவுகள் நெடிதாக அமைந்திருந்தன. அக்கொடி பிடித்தோர் எந்தப் படையைச் சேர்ந்தவர் என்பதை அறிய இக்கொடிகள் பேருதவி புரிந்தன. மேலும், போரில் வெற்றி கண்டபின் வெற்றிக்கொடி பாணரால் புகழப்பெற்றது. இப்புகழ்ச்சி இலக்கியத்தில் கொடிநிலை என்றழைக்கப்பட்டது. வேந்தரின்

தலைநகரங்களிலும், அகன்ற தெருக்களின் இருபுறங்களிலும் வரிசை வரிசையாகக் கொடிகள் பறந்தன. என்பதை

"பல் கொடி நுடங்கும் முன்பின் செறுநர்

செல் சமம் தொலைத்த வினை நவில் யானை" (பதிற். 82:3-4)

இப்பாடல் அடிகள் காட்டுகின்றன. வில், புலி, மீன் பொறிகள் கொடி மீது வரையப்படுதலேயன்றி, அரசனுடைய நிறுவனங்கள் மீதும் இலச்சினையாக இப்பொறிகள் பொறிக்கப்பட்டன. அரசின் சொத்துக்கள் யாவற்றின் மீதும் முத்திரையாக இடப்பெற்றன. துறைமுகத்துப் பண்டகச்சாலைகளில் கிடத்த ஏற்றுமதி, இறக்குமதி பண்டப் பொருள்கள் மீதும் அரசர் சின்னங்களாக இப்பொறிகள் இடப்பட்டன என்று பட்டினப்பாலை

"புலிப் பொறிப் போர்க் கதவின்

திருத் துஞ்சும் திண் காப்பின்" (பட்டின. 40-41)

என்ற அடிகள் மூலம் எடுத்தோதுகிறது. "சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் முறையே வில், புலி மீன் என்பவற்றை தமது கொடிகளில் கொண்டமைக்கான காரணமாக ந.சுப்பிரமணியன், "சேரமன்னர்கள் பெரும்பாலும் மலைநாட்டை ஆண்டனர். ஆதலாலும், அவர்கள் தொடக்கத்தில் வேட்டுவர் தலைவராயிருந்தனர் ஆதலாலும், வில் அவர்களுக்குப் பொருத்தமான பொறியாயிற்று. கடல் கடந்து செல்லும் இயல்புடையராதலாலும், மீன் வாணிபத்தில் சிறந்திருந்தனர் என்று கருத இடமுண்டாதலாலும் பாண்டியர்கள் மீனைக் கொடியாகக் கொண்டனர் எனலாம். இந்நிலையில் மதுரையில் உள்ள கடவுள் 'கயற் கண்ணி'யாதல் தற்செயல்தானோ என்று ஐயுற இடனாகின்றது. புலிக்கு விளக்கம் நெடுநாளாகக் கிடைக்கவில்லை, வன்மையிலும் ஆக்கிரமிப்பிலும் சிறந்த அவ்விலங்கு பலத்தையும் வெற்றியையும் குறித்தமையான் அதனைப் பொறியாகச் சோழர் கொண்டனர் என்று கூறலாம்."[31] என்று மூவேந்தர்களின் இலச்சினைகுறித்து அவர் விளக்கம் தருவது நோக்கத்தக்கது.

### 4.4.2 வெண்கொற்றக்குடை

அரச சின்னங்களில் ஒன்றாகக் கூறப்பட்ட குடை சங்க இலக்கியங்களில் பல இடங்களில் சுட்டப்படுகின்றது. இக்குடை நிலவு போன்ற வெண்மை நிறமுடையது என்றும் விசும்பவரை உயர்ந்தது என்றும், வட்ட வடிவினையுடையது என்றும் சங்க

இலக்கியங்கள் கூறுகின்றன. வெண் துகிலால் அமைந்தமையால் இதனை வெண்கொற்றக்குடை என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதனை,

"தென் புலம் காவலர் மருமான் ஒன்னார்

மண் மாறு கொண்ட, மாலை வெண் குடை,

கண் ஆர் கண்ணி, கடுந் தேர்ச் செழியன்" (சிறுபாண். 64-66)

என்ற சிறுபாணாற்றுப்படை அடிகள் வாயிலாக அறியலாம். வேந்தனின் வெண்கொற்றக்குடை வெயிலை மறைப்பதற்கன்று. அது குடிமக்களின் துன்பம் துடைத்து அருள் செய்வதன் அடையாளமே என்ற கருத்து மேலோங்கியிருந்ததை

"மாக விசும்பின் நடுவுநின் றாங்குக்

கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை

வெயில்மறைக் கொண்டன்றோ அன்றே வருந்திய

குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ (புறம். 35:18-21)

"என்ற அடிகள் மூலம் புறநானூறு விளக்குகிறது. அரசன் போருக்குப் புறப்பட்டுச் சென்றபோது வாளோடும் முரசோடும் ஒரு நல்ல நாளில் கோயிலிலிருந்து போர்க்களம் நோக்கி எடுத்துச்செல்லப்பட்டது. இச்சடங்கு குடை நாட்கோள் என்றழைக்கப்பட்டது.

"குடையும், வாளும், நாள்கோள் அன்றி" (தொல். பொருள். 69-1)

என்பதை தொல்காப்பியம் சுட்டிக்காட்டுகிறது. வெண்கொற்றக்குடை அரசனோடு போர்க்களம் சென்றதையும் போர்க்களத்தில் பகைவரின் ஏராளமான குடைகள் யானைகளால் நாசம் செய்யப்பட்டமையும் களவழி நாற்பதில் குறிக்கப்பட்டுள்ளதை

"மா உதைப்ப, மாற்றார் குடை எலாம் கீழ் மேலாய்,

ஆ உதை காளாம்பி போன்ற,-புனல் நாடன்" (களவழி. 36:2-3)

என்ற பாடலின் வாயிலாக உணரலாம். அரச சின்னங்களான கொடியும் குடையும் பகைவர்களாலும் யானைகளாலும் அழித்தற்குரிய இலக்குகளாயின. அரசனது குடை தாழ்ந்தால், அவன் மானமிழந்தவனாவான். பகைவர்களால் குடை அழிக்கப்பட்டால் அரசன் தோல்வியுற்றதாகக் கருதப்பட்டது. சிற்றரசர்கள் மன்னனுடன் வந்தபோது

அரசனது குடை அவனது பெருமை தோன்ற உயர்த்திப்பிடிக்கப்பட்டது. மற்றவரின் குடையானது சிறுமை தோன்ற தாழ்த்திப் பிடிக்கப்பட்டது. அரசன் ஆட்சிக்குட்பட்ட மக்கள் அவன் குடை நிழலின்கீழ் துன்பமின்றி வாழந்ததாக இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளது. இத்தகு சிறப்பு வாய்ந்த கொற்றக் குடை எதற்கும் தாழாலது உயர்ந்தே விளங்கிற்று. வேந்தன் ஆலயத்திற்குச் சென்று வழிபட்டபோது மட்டும் தன் குடையைத் தாழத்திப் பிடித்தாகப் புறநானூறு குறிப்பிடுகின்றது. இதனை

“பணியியர் அத்தைநின் குடையே, முனிவர்

முக்கண் செல்வர் நகர்வலஞ் செயற்கே” (புறம். 6:17-18)

என்ற அடிகளால் உணரலாம்

### 4.4.3 போர் முரசு

பகைவரது காவல் மரத்தை வெட்டி அதைக் கொண்டு முரசு செய்வது பழங்காலத்தில் மரபாக இருந்து வந்தது. இரண்டு வலியக் காளைகளை மோதச் செய்து அதில் வெற்றி பெற்ற காளையின் மயிர் சீவாத தோலைக் கொண்டு முரசு செய்தமையைப் புறநானூறு குறிப்பிடுகின்றது. இதனை

“அண்ணல் நல்ஊறு இரண்டுஉடன் மடுத்து

வென்றதன் பச்சை சீவாது போர்த்த

திண்பிணி முரசம் இடைப்புலத்து இரங்க” (புறம். 288:2-4)

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம். சங்ககாலத் தமிழர் முரசிற்குத் தெய்வீகப் பண்புகளை ஏற்றினர். ஆகவே அதனைத் தூநீராட்டி மாலையிட்டு வழிபட்டனர். முரசக்கு மாலை அணிவித்து மயிற்பீலி சூட்டுவர். வேந்தர் தம் முரசை நீராட்டிச் செந்தினையில் குருதி கலந்து கழுவதைப் பதிற்றுப்பத்து சுட்டுகிறது. முரசொலி எழுப்பக் கடிப்பு என்னும் குறுந்தடியைப் பயன்படுத்தினர்.

முரசு வைப்பதற்கென்று பூக்களால் அழகு செய்யப்பட்ட பெரிய, அகன்ற கட்டில் போன்ற பீடத்தின் மீது இருத்தப்பட்டது. அக்கட்டில் முரசுகட்டில் என்றழைக்கப்பட்டது. முரசு கட்டில் அரண்மனையின் ஒரு புறத்திலிருந்தது. முரசு அரசனது அதிகாரத்தைக் குறிக்கும் குறியீடாக இருந்துள்ளது. சங்ககாலத்தில் அது அமைதி, போர் ஆகிய இருகாலங்களிலும் பயன்பட்டது. அமைதிக்காலத்தில் முரசினை

யானை மீது ஏற்றி ஊர்வலம் வந்து விழா அறைவர் விழா தொடங்குவதை அறிவிக்கும் கருவியாக முரசினைப் பயன்படுத்தினர் என்பதை,

"உயிர்ப்பலி உண்ணும் உருமுக் குரல் முழக்கத்து

மயிர்க்கண் முரசொடு வான்பலி ஊட்டி" (சிலம்பு. இந்திர விழா. 87-88)

என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. முரசுபோர்காலங்களில் போர்த்தொடக்கத்தை அறிவித்து மக்களை எச்சரித்தது. போர் தொடங்கியதை முரசம் காலையில் அறிவித்தமையால் அதனைக் காலை முரசு என்றும் அரசன் காவல் செய்தமையால் ஏமமுரசு என்றும் அழைக்கப்பட்டது. பாசறையிலும்கூடச் செய்திகளைத் தெரிவிக்க முரசு முழங்கிற்று போர்வீரர்கள் வீர உணர்ச்சிகளை எழுப்புதற்கு முரசொலி பயன்பட்டது. சிற்றரசர்கள் மற்றும் பிறகுறுநில மன்னர்கள் மன்னனுக்குத் தமது திறைப்பணத்தைக் கொணர்ந்தால் அவர்கள் வருகையை ஒரு சிறப்பு முரசு காலையில் அறிவிக்கும் என்று சிலம்பு பகர்கிறது

"ஞாலம் காவலற் நாள்திறை பயிரும்

காலை முரசம் கடைமுகத்து எழுதலும்" (சிலம்பு. கால்கோள். 52-53)

போரில் வெற்றியடைதற்காக, வாளையும் குடையையும் போல முரசையும் நல்ல நாளில் போர்க்களத்திற்கு எடுத்துச் சென்றனர். பகைவரது முரசத்தையும் போர்க்களத்தில் கைப்பற்றுவது பெரிதும் விரும்பப்பட்டது.

### 4.4.4 வேந்தர்குரிய பூ

தொல்காப்பியம் பனை, வேம்பு, ஆர் ஆகிய மாலைகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. இன்ன மாலை இந்த வேந்தர்க்கு உரியது என்பதைச் சிலப்பதிகாரம் கூறுகின்றது. சங்கத் தமிழரசர்கள் ஒவ்வொருவரும் தனித்தனி அடையாள மாலைகளை அணிந்தனர். சேரர் பனையோலையால் செய்த மாலையையும் சோழர் ஆர் (ஆத்தி) மாலையையும் பாண்டியர் வேப்ப மாலையையும் அணிந்தனர். போர்க்களத்தில் எளிதில் அடையாளம் காணவும் பகை வேறுபாடு அறிவதற்காகவும் வேந்தர்கள் மாலை அணிவது வழக்கமாகக் கொண்டனர் என்பதைத் தொல்காப்பியம் கூறுகிறது.

"........................................................உறுபகை

வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்து புகழ்ப்

போந்தை, வேம்பே, ஆர், என வரூஉம்

மாபெருந் தானையர் மலைந்த பூவும்" (தொல். புறத். 63:2-5)

மன்னர்கள் மாலைகளைக் கழுத்திலும் தோளிலும் அணிந்ததோடு, தலையிலும் சூடிக்கொண்டனர். கழுத்திலணிந்த மாலையைத் தார் எனவும் தலையில் அணிந்த மாலையைக் கண்ணி எனவும் அழைத்தனர். ஒவ்வோர் மன்னனின் தாரும் கண்ணியும் ஒரே மரத்துப் பூவாலானவை. போர்க்களத்தில் இம்மாலைகள் தவறாமல் அணியப்பட்டன.

போர்க்களத்தில் வேந்தர்கள் அணிந்து கொண்ட வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை முதலிய பூக்களினின்றும் இவற்றை வேறுபடுத்திக் காணப்பட்டது. மன்னனது தானைத் தலைவர்களுக்கும் அரசயானைகளுக்கும் வேந்தனின் இம்மாலைகள் அணிவித்தனர். என்பதை

"வாகை தும்பை மணித் தோட்டுப் போந்தையொடு

ஓடை யானையின் எயர்முகத்து ஓங்க" (சிலம்பு. கால்கோள். 70-71)

என்ற சிலப்பதிகாரம் காட்டுகிறது. சங்க காலத்தில் வேந்தர்கள் மட்டுமின்றி சிற்றரசர்களுக்கும் தார் மாலைகள் இருந்துள்ளன. ஆய் அண்டிரன் சுரபுன்னையும் ஏரைக்கோன் காந்தளையும் அணிந்த நிகழ்வினை,

"வழைப்பூங் கண்ணி வாய்வாள் அண்டிரன்" (புறம். 131:2)

"கோடல் கண்ணிக் குறவர் பெருமகன்" (புறம். 157:7)

என்ற அடிகளில் புறநானூறு பதிவு செய்துள்ளது.

### 4.4.5 முடி

தொல்காப்பியனார் குறிப்பிடும் அரசர்க்குரிய சின்னங்களுள் ஒன்றான 'முடி' சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தர் மட்டுமே அணிந்திருந்தனர். இம்மூவர்க்கும் உடன்பட்டு ஆட்சி புரிந்த குறுநில மன்னர் முடி தரித்தற்கான சான்றுகள் சங்க இலக்கியத்துள் காணப்பெறவில்லை. ஆனால் குறுநில மன்னனான மலையமான் திருமுடிக்காரி மட்டும் முடி தரித்திருந்தமையை அறியமுடிகிறது. திருமுடிகாரியைத்தவிர வேறு சிற்றரசர்கள் முடி தரித்தமை பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. மேலும் முடி, மூவேந்தரையும் மன்னரையும்

வேறுபடுத்திக் காட்டுதலை அறிய முடிகிறது. எனவே, அரசர்களுள் முடி தரித்துக் கொள்ளும் உரிமை இம்மூவர்க்கே உரித்தாயிற்று என்பதை இதன் மூலம் அனுமானிக்க இயலுகிறது.

ஒருவன் அரசனாகப் பொறுப்பேற்கும் போது, அதாவது அவனது ஆட்சித் தொடக்கத்தைச் குறிக்கும் நிகழ்ச்சி நிகழும்போது, பிறசின்னங்களான குடை, அரியணை, செங்கோல் என்பவற்றையும் அவன் ஏற்றுக் கொண்டான் எனினும் முடி சூட்டிக்கொள்ளுதலே மிக முக்கியமானதாகக் கருதப்பட்டது அதனால், முடி புனைதல் விழாவாகக் கொண்டாடப்பட்டது. அவ்விழா முடிசூட்டல் அல்லது முடி கவித்தல் என்ற பெயரால் வழங்கப்பட்டது பதிற்றுப்பத்தில் சேர வேந்தரைப் பற்றிக்குறிப்பிடும் புலவர்கள்

“எழு முடிகெழீஇய திருஞெம ரகலத்து” (பதிற். 14:11)

“எழுமுடி மார்பி னெய்திய சேரல்” (பதிற். 16:17)

என்று முடியைச் சுட்டுகின்றனர். வேந்தர் பொன்னாற் செய்யப்பட்ட முடியினை அணிந்திருந்தனர். “களங்காயக் கண்ணி நார் முடிச்சேரல் என்ற வேந்தன் மட்டும் நாரால் செய்த முடியைத் தரித்திருந்தான் என்னும் செய்தியைப் பதிற்றுப்பத்தின் பழைய உரை குறிப்பிடுவதாகவும் “எழுமுடி ஆரம் என்பது சோழர், பாண்டியர் வேளிர் ஆகிய எழுவரது முடிப் பொன்னாற் செய்யப்பட்ட ஆரம் என்று இதற்குப் பொருள் கொள்ளப்படுகின்றது.”[32] என்று கா.சுப்பிரமணியன் கூறுவதாகவும் அரங்க.இராமலிங்கம் குறிப்பிடுகிறார்.

**4.4.6 செங்கோல்**

அரசன் கையிலுள்ள கோல் செங்கோல் என அழைக்கப்படும். முடி, அரசுகட்டில், குடை என்பவற்றோடு கோலும் சேர்ந்து அரசின் சின்னமாகக் கருதப்பட்டுள்ளது. குடை மக்களுக்கு மன்னன் அளித்த பாதுகாப்பைக் குறிக்கும். கோல் அதன் நேர்மையையும் நீதியையும் குறிக்கும் குறியீடாக இருந்துள்ளது. வேந்தனின் நீதி தவறும் பட்சத்திலும் மக்கள் துன்புறும் வேளையிலும் செங்கோல் வளைந்ததாகவும் கொடுங்கோலாய் மாறியதாகவும் இலக்கியங்கள் சுட்டுகின்றன. சிறந்த ஆட்சியைக் குறிக்கும் சின்னமாகச் செங்கோல் விளங்கியதை

“அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து” (புறம். 35:14)

என்ற புறநானூற்று அடி எடுத்தோதுகிறது. தவறான நீதியை வழங்கியமையால் தன் செங்கோல் வளைந்ததாகக் கருதப்படும் என்பதற்காகப் பாண்டிய மன்னன் தம்முயிரைக் கொடுத்து செங்கோலைக் காப்பாற்றினான் என்று இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் எடுத்தோதுகிறார். எனவே, சங்க காலத்தில் சிறந்த ஆட்சியைக் குறிக்கும் குறியீடாகச் செங்கோல் விளங்கியுள்ளதை இதன் மூலம் அவதானிக்கலாம்.

### 4.4.7 வாள்

முரசையும் குடையையும் போல வாளும் அரசின் சின்னமாகக் கருதப்பட்டுள்ளது. குடை குடிமக்களுக்கு அளித்த பாதுகாப்பைக் குறித்தது போல, வாள் அரசின் பகைவர்கட்கு நாசத்தைக் குறித்தது. அது மன்னனின் கொற்றத்தை உருவகித்தது. போர்க் காலங்களில் போர்முரசைப் போல வாளையும் வணங்கி நல்லோரையில் போர்க்களத்திற்கு எடுத்துச்சென்றனர். போரிலே வெற்றி பெற்ற பின்னர் நல்ல நாளில் வாளினை புனித நீரால் சுத்தம் செய்து பூமாலைச் சுட்டுவர். இதனை வாள் மங்கலம் என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. இதனை,

“வென்ற வாளின் மண்ணொடு ஒன்ற” (தொல். புறத். 69:11).

என்ற அடிகளால் தொல்காப்பியர் சுட்டுகிறார். உழவன் நிலத்தைக் கலப்பை கொண்டு உழுவது போல் மன்னன் போர்க்களத்தை வாள் கொண்டு உழுவதாக இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளன.

### 4.4.8 கடிமரம்

ஒருவகை காப்புமரம் அதனைக் கடிமரம் அல்லது காவல்மரம் என்றழைக்கப்பட்டது. அது அரசனுக்கும், அவன் குலத்திற்கும், புனிதமானதாகக் கருதப்பட்டது. அம்மரத்தில் ஒரு தெய்வத்தன்மை இருந்ததாகக் கருதப்பட்டது. அரச சின்னங்களில் முரசினைப் போன்று மன்னரின் காவல் மரமும் மன்னருக்கு நிகராகக் கருதப்பட்டது. அதனை வெட்டினால் நகரம் பாழாகும் என்று மன்னர்களால் நம்பப்பட்டது. எனவே, பகைவர்களின் காவல் மரத்தை வெட்டுதல் போரின் முக்கிய நிகழ்வாகக் கருதப்பட்டது. பகையரசரின் காவல் மரத்தில் தமது யானைகளை ஓரரசன் கட்டி வைத்தால் அம்மரம் அழிக்கப்பட்டதற்கு நிகர் என்று கருதினர். அக்கடிமரத்திற்கு உரியோர்க்கு அது பெருத்த அவமானமாகவும் கருதப்பட்டதைப் புறநானூறு குறிப்பிடுகிறது. இதனை

“ஈவோர் உண்மையும் காண்இனி நின்ஊர்க்

கடிமரம் வருந்தத் தந்தியயாம் பிணித்த

நெடுநல் யானைஎம் பரிசில்” (புறம். 162:4-6)

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

### 4.4.9 அரியணை

தொல்காப்பியனார் அரியணையைக் குறிப்பிடாத போதிலும் அஃது ஓர் அரசச் சின்னமாகவே கருதப்படுகின்றது. அரியணையை ‘அரிமா சுமந்த அமளி’ எனப் பொருநராற்றுப்படை குறிப்பிடுகின்றது. அரியணை அரசு கட்டில் என்றும் சுட்டப்படுகின்றது. அமரும் ஆசனத்தைச் சிங்கம் சுமந்து கொண்டிருத்தல் போலச் செய்யப்பட்டதால் அது அரிமா சுமந்த அமளி என்று பெயர் பெற்றது. போரில் பிடிப்பட்ட யானைகளின் தந்தங்களைக் கொண்டு அரியணையின் நான்கு கால்கள் செய்யப்பட்டமையைப் பதிற்றுபத்து குறிப்பிடுகின்றது.

முடிசூடுதல் போல் அரசுகட்டில் ஏறுதலும் ஆட்சியை மேற்கொள்ளலைக் குறிக்கும். அவைக்களத்தில் அரசன் அரியணையில் அமர்ந்து அரச அலுவல்களை மேற்கொண்டனர் என்பதை, அரசுகட்டிலில் அமர்ந்தபடியே இறந்துவிட்ட ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனைப் பற்றிச் சிலப்பதிகாரம் கூறுகின்றது.

### 4.4.10 தலைநகர்

மூவேந்தரும் தங்கள் ஆட்சிப் பரப்பில் அடங்கியிருந்த நகரொன்றைத் தலைநகராகக் கொண்டிருந்தனர். சேரருக்கு, கரூரும் வஞ்சியும் தலைநகராக இருந்தன. உறையூரும் புகாரும் சோழருக்கும், மதுரை பாண்டியருக்கும் தலைநகராய் அமைந்தன. தலைநகர்கள், நகர அமைப்பிலும் பிற வசதிகளிலும், அங்கு வாழ்ந்த மக்கள் திறத்திலும் பழக்க வழக்கங்களிலும் பிற ஊர்களைக் காட்டிலும் மேம்பட்டிருந்தன. அரசவையில் இடம் பெற்ற அமைச்சர்கள், அறங்கூறவையத்தார், வணிகப் பெருமக்கள், அந்தணர்கள், சமணர்கள், பௌத்தர்கள், மற்றும் ஒவ்வொரு துறையிலும் முன்னணியில் திகழ்ந்தவர்கள் தலைநகரங்களில் வாழ்ந்து வந்தனர். இத்தகையவர்கள் வாழ்ந்ததால் தலைநகர வீதிகள் அகலமாகவும், தூய்மையாகவும் இருந்தன. அங்குக் காவல் துறை சிறப்பாக இயங்கி வந்தது. இதனை மதுரைக் காஞ்சி

“நிலனும் வளனும் கண்டு அமைகல்லா
விளங்கு பெருந் திருவின் மான விறல் வேள்
..................................................
வையை அன்ன வழக்குடை வாயில்,
வகை பெற எழுந்து வானம் மூழ்கி,
சில்காற்று இசைக்கும் பல் புழை நல் இல்,
யாறு கிடந்தன்ன அகல் நெடுந் தெருவில்” (மதுரை. 343-359)

என்ற அடிகள் மூலம் எடுத்தோதுகிறது.

### 4.4.11 அரண்மனை

பகைவரால் அழிக்க முடியாத அரண், மதுரையைச் சூழ அமையப்பெற்றிருந்தது. பாதுகாப்பான அரணானது பெரிய காவற்காட்டையும், அதனை அடுத்து பெரிய அகழியையும், உயர்ந்த மதிலையும் கொண்டு அமைந்திருந்தது. பகைவர்கள் காவற்காட்டையும் அகழியையும் கடந்து முன்னேறும் போது அவர்களைத் தடுத்து நிறுத்த பெரிய மதில் சுவரில் பல வகையான பொறிகளைக் கொண்டு தமது பாதுகாப்பை மேலும் வலிமைப்படுத்தியிருந்தனர். பாதுகாப்பு மதிலின் மீது வளைந்து தானே எரியும் வில், கருவிரல் குரங்கு போல் பொரி, கல்லுமிழ் கவண், காய்ந்து இறைத்துச் சேர்ந்தாரை வருத்தும் நெய், செம்புருக்குமிடா, இரும்புருக்கும் உலைகள், கல்லிட்டு வைக்கும் கூடை, மதிலைப் பற்றுவாரைக் கோத்து வலிக்கும் தூண்டில், கழுத்தில் பூட்டி, முறுக்கும் சங்கிலி, உச்சியைக் கொத்தி மூளையைக் கடிக்கும் ஆண்டலைப் புட்பொறி, அடித்துத் தள்ளும் இருப்புக் கவை, கழுக்கோல், அம்புக்கட்டு, ஏவறைகள், ஐயவித்துலாம், மதிலைப் பற்றுவார்கையைப் பொதுக்கும் ஊசி, பகைவர் கண்ணைக் கொத்தும் சிச்சிலிப் பறவை போலும் பொறி, பகைவர் உடலைக்கோட்டால் கிழிக்கும் பன்றிப் பொறி, பணை போழும் பொறீஇ வாயிற் கதவுக்கு வலியாக உள்ளே விட்டுவைக்கும் எழும் சீப்பும், கணையமரம், கோல், குந்தம், வேல், போன்ற பல பொறிகள் மதிலகத்தே வைக்கப்பட்டுள்ளதைச் சிலப்பதிகாரம் எடுத்தியம்புகிறது.

"மிளையும் கிடங்கும், வளைவிற் பொறியும்

சருவிரல் ஊகமும், கல்லுமிழ் கவணும்,

..................................................

எழுவும், சீப்பும், முழுவிறற் கணையமும்,

கோலும் குந்தமும், வேலும் பிறவும்

ஞாயிலும் சிறந்து நாட்கொடி அடங்கும் வாயில்."

(சிலம்பு, அடைக்கலம். 207-18)

இத்தகைய பாதுகாவலையுடைய அரண்களைப் பழந்தமிழ் வேந்தர்கள் பெற்றிருந்தனர். அவர்கள் வாழ்ந்த மனை பாதுகாப்பு மிகுந்த அரண்களால் சூழப் பட்டிருந்தமையால் அரண்மனை எனப்பட்டது. அரண்மனையைக் கோயில் என்று புறநானூறு, பரிபாடல், சிலப்பதிகாரம் ஆகிய இலக்கியங்கள் சுட்டுகின்றன.

வேந்தனைப் பழந்தமிழ் இலக்கியங்கள் இறை, இறைவன் என்று குறிப்பிடுகின்றன. இறைவன் குடிகொண்ட இடத்தைக் கோயில் என அழைத்தது போன்று, வேந்தனின் வாழ்விடத்தையும் கோயில் என்றே அழைத்தனர். இவ்வரண்மனைகள் பரந்தகன்ற இடப் பரப்பில் உயர்ந்த மாடங்களோடு கட்டப்பட்டிருந்தன. அரண்மனையில் எழுநிலை மாடங்கள் அமைந்திருந்தன. அரசரின் அரண்மனைகளுக்குச் சிற்ப நூல் வல்லார் நாள் குறித்து, நாழிகை பார்த்து, நேரறிகயிறிட்டு, திசைகளையும் அத்திசைகளில் உள்ள தெய்வங்களையும் நோக்கி தனைவகுத்துக் கொடுத்தனர். இதனை,

"இரு கோல் குறிநிலை வழுக்காது, குடக்கு ஏர்பு,

ஒரு திறம் சாரா அரை நாள் அமயத்து,

நூல் அறி புலவர் நுண்ணிதின் கயிறு இட்டு,

தேஎம் கொண்டு, தெய்வம் நோக்கி,

பெரும் பெயர் மன்னர்க்கு ஒப்ப, மனை வகுத்து" (நெடுநல். 74-78)

என்னும் இலக்கியப் பகுதியினின்று அறியலாம். இவ்வரண்மனைகள் செங்கற்களாலல் கட்டப்பட்டுச் சாந்தினாலும் உலோகத் தகட்டினாலும் கூரைவேயப்பட்டிருந்தன.

விண்ணில் தோன்றும் தேவருவகுக்கு முட்டுக்காலாக ஊன்றி வைத்த ஒரு பற்றுக்கோடு போல ஓங்கிய மாடம், ஏறுதற்கரிய உச்சியையுடைய சாந்தினால் வேயப்பட்டிருந்தது.

அரண்மனைகளுக்குப் பெரிய வாயில்கள் அமைந்திருந்தன. அவை கோயில் வாயில்கள் போன்று அகன்றும் உயர்ந்தும் இருந்தன. யானையின் மீது அமர்ந்து கொடியை உயர்த்திக் கொண்டு செல்லும் அளவிற்கு உயரமுடையனவாக இருந்தன. முகில் உலாவும் மலைபோல ஓங்கிய மாடத்தினை உடையனவாய், வையையாறு இடைவிடாது ஓடுவது போல மாந்தரும் மாவும் இடையறாமல் செல்லும் செலவினையுடைய சிறப்புடன் இவ்வாயில்கள் இருந்தன.

வாயில் கதவுகள் பல மரங்களை இறுகச் சேர்த்து அவற்றை இரும்பு ஆணிகளால் பிணித்துச் செய்யப் பட்டிருந்தன. சாதிலிங்கம் வழித்து உரு கதவுகளைக் கொண்ட அமைப்பினவாய் அவை விளங்கின. கதவுகள் கைத்தொழிலில் வல்ல தச்சனால் இடைவெளி இன்றித் திறம்பட அமைக்கப் பட்டிருந்தன. கதவுகளின் நிலைப்படியில் குவளைப் பூ , திருமகள், பெண் யானைகள் முதலான சித்திரங்கள் செதுக்கப் பட்டிருந்தன என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. இதனை

“வானம் ஊன்றிய மதலை போல,

ஏணி சாத்திய ஏற்று அருஞ் சென்னி,

விண் பொர நிவந்த, வேயா மாடத்து” (பெரும்பாண். 346-348)

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

**4.4.12 அரசுரிமை**

பழந்தமிழ் வேந்தரின் ஆட்சியுரிமை வழிவழியாக வந்தது. ஆட்சி உரிமையைத் ‘தாயம்’ என்ற சொல்லால் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. தொல்காப்பியம் ‘தாயத்தின் அடையா தாயம்’ என உரிமையைச் சுட்டுகிறது. இதற்கு நச்சினார்க்கினியர், தந்தையின் பொருளை அல்லது சொத்தை மக்கள் பெறுதல் என உரை எழுதியுள்ளார். தந்தைக்குப் பிறகு மகன் அவனுக்குப் பிறகு மகன் அவனுக்குப் பிறகு அவன் மகன் என்ற நிலையில் பரம்பரையாக ஆட்சியுரிமை அமைந்திருந்தது. மகளிர் ஆட்சியுரிமை பெறுதல் சங்க காலத்தில் இல்லை. ஆண் மக்களுள் மூத்தவனே ஆட்சியுரிமை பெற்றான். ஏனையோர் நாட்டின் பல்வேறு பிரிவுகளிலிருந்து ஆட்சிப் பொறுப்பைக் கவனித்து வந்தனர். தந்தைக்குப் பின் மகன் ஆட்சியுரிமை பெற்றதை,

“மூத்தோர் மூத்தோர்க் கூற்ற முய்த்தெனப்

பாறர வந்த பழவிறற் றாயம்” (புறம். 75:1-2)

எனப் புறநானூறு குறிப்பிடுகின்றது. தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறையைப் பாராட்டும் அரிசில் கிழார் இந்நிலவுலகத்து வாழ்வார் பொருட்டுச் சால்பும் நடுவுநிலையும் பிற நற்பண்புகளும், நாடு காத்தற்கு வேண்டும் அரசியலறிவும் பிற பலவும் முற்றும் கற்றுத்துறை போகிய சிறப்பும் நிறைந்த நன்மகனைப் பெற்றுள்ளாய் என்று பாராட்டுவது குறிப்பிடத்தக்கது. இதனை,

“நலம் பெறு திரு மணி கூட்டும் நல் தோள்,

ஒடுங்கு ஈர் ஓதி, ஒண்ணுதல் கருவில்

..............................................

காவற்கு அமைந்த அரசு துறை போகிய

வீறு சால் புதல்வன் பெற்றனை, இவணர்க்கு” (பதிற். 74:16-20)

என்ற அரிசில் கிழாரின் பாடல் அடிகள் தந்தைக்குப் பின் தனயன் ஆட்சியுரிமை எய்துதலைச் சுட்டுகின்றன. கரிகாலன் தாயின் வயிற்றிலிருந்து தாயம் எய்தினான் என்பதைப் பொருநராற்றுப்படை சுட்டுகிறது. “தான் பிறக்கின்ற காலத்ததுப் பிறவாதே நல்ல முகூர்த்தம் வருமளவும் தாயுடைய வயிற்றிலேயிருந்து பிறக்கையினாலே அரசு உரிமையைப் பெற்றுப் பிறந்ததென்றார்”[33] என நச்சினார்க்கினியர் தம் உரையில் இதனை விளக்குகின்றார்.

சோழன் கரிகாலன் மிகவும் இளையவனாக இருந்தமையால் அவன் சுற்றத்தார் அவனைச் சிறையில் அடைத்தனர். கரிகாலன் சிறையிலிருந்து தப்பி, போர் புரிந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றதைப் பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது. பகை வேந்தரும் இவன் இளையன் எனக் கருதிப் போர் தொடுத்தனர். இருபெரு வேந்தரும், ஒன்பது வேளிரும் கரிகாலனுடன் வெண்ணிப் பறந்தலை என்னுமிடத்தில் போர் புரிந்தனர். அவர்கள் அனைவரையும் வெற்றி கொண்டு கரிகாலன் ஆட்சிப் பொறுப்பை ஏற்றான். இச்செய்தியை,

“முலைக் கோள் விடாஅ மாத்திரை, ஞெரேரென,

தலைக்கோள் வேட்டம் களிறு அட்டாங்கு,

இரும் பனம் போந்தைத் தோடும், கருஞ் சினை

.....................................................

வெண்ணித் தாக்கிய வெருவரு நோன் தாள்,

கண் ஆர் கண்ணி, கரிகால் வளவன்” (பொருந. 141-148)

என்னும் பாடற் பகுதியால் அறிய முடிகிறது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் இளையன் என்று கருதியே இருபெரு வேந்தரும் மற்ற வேளிரும் அவனுடன் போருக்கு வந்தனர். அவர்களை ஆலங்கானத்தில் வெற்றிகொண்ட பின் பாண்டியன் தன் ஆட்சியுரிமையைத் தக்க வைத்துக் கொண்டான்.

ஆட்சியுரிமைக்கு ஆண் வாரிசு இல்லாதபோது பட்டத்து யானையிடம் மலர்மாலை கொடுத்து அதனை நகர்வலம் வரச் செய்வார்கள். அப்பொழுது அந்த யானை யாருடைய கழுத்தில் மாலையிடுகின்றதோ அவரே பட்டத்து அரசனாக நியமிக்கப் படுவர். சோழன் கரிகால் வளவன் இவ்வாறு தேர்ந்தெடுக்கப் பட்டான் என்று பழமொழி கூறுகிறது.

“கழுமலத்து யாத்த களிறும் கருவூர்

விழுமியோன் மேற்சென்றதனால், விழுமிய” (பழ. 62)

என்ற பழமொழி அடிகளால் உணரலாம். தொல்காப்பியனார் கரந்தைத் திணைக்குரிய துறைகளுள் ஒன்றாகக் குறிப்பிடும் பிள்ளையாட்டு என்பதற்கு வி.ஆர். இராமச்சந்தர தீட்சிதர் “வாரிசு இல்லாத வேந்தன் போரில் திறம்படச் செயலாற்றி வெற்றி பெறும் அரச குடும்ப வீரன் ஒருவனுக்கு முடிசூட்டி ஆட்சியுரிமை அளித்தல்”[34] என்று பொருள் கொள்வதாக அரங்க இரமலிங்கம் குறிப்பிடுகிறார். இந்தத் தொல்காப்பிய நூற்பாவிற்கு உரை வரைந்த நச்சினார்க்கினியர் அவ்வாறு போரில் சாதனை புரிந்த மறவனை மக்கள் அரசனாக மதித்து ஏற்றுக் கொண்டனர் என்று கூறுகிறார்.

**4.4.13 பட்டங்களும் கவுரவங்களும்**

தமது கடமையை நன்கு செய்து புகழ்பெற்ற தம் அலுவலர்க்கு மன்னர்கள் பட்டங்களும் கவுரவங்களும் வழங்கினர். இது அவர்களை மேலும் நன்முயற்சியில் ஈடுபடத் தூண்டியிருக்கும் அவர்கள் பலராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட தகுதியைப் பெற்றனர் இவற்றால் பெரிய அலுவலர் யாவரும் மன்னனுடைய

ஆதரவாளராயினர். அரசாங்க அலுவலர்க்கு அல்லது நாட்டிலிருந்த, முக்கியமானவர்களுக்கு மன்னன் வழங்கிய கவுரவம், 'பொதுவாக மாராயம்' எனப்பட்டது.

எட்டி, காவிதி, ஏனாதி என்னும் மூவகை மாராயங்களைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் குறிப்புகள் உள்ளன. எட்டியும் காவிதியும் சாதாரண பொதுமக்களுக்கு வழங்கப்படும் கவுரவப் பட்டங்கள் ஆகும். எட்டிப் பட்டம் சிறந்த வணிகர்களுக்கும் வழங்கப்பட்டுள்ளது. ஏனாதிப்பாட்டம் ஆட்சி, ராணுவ அலுவலர்களில் மிகச் சிறந்தோர்க்கு வழங்கப்பட்டுள்ளது. சிறந்த போர்வீரர்கள் ஏனாதிப்பட்டம் பெற்றுள்ளனர். "ஏனாதி என்னும் சொல் சேனாபதி, சேனாதிபதி என்பதன் மரூஉ ஆகும்"[35] என்று நா.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார். எனவே, ஏனாதி என்னும் சொல்லிலிருந்து சேனாதிபதி வந்ததைத் தெரிந்துக் கொள்ளலாம்.

### 4.4.14 காவிதி மாக்கள்

வேந்தனுக்கு உறுதுணையாய் நின்றோருள் காவிதி மாக்களும் குறிப்பிடத்தக்கோர் ஆவர். மதுரைக்காஞ்சி காவிதி மாக்களையும் அவர்களது பணியையும் குறிப்பிடுகின்றது. காவிதி மாக்கள், யாகங்கள் புரிந்து சுவர்க்கம் புகும் சான்றோர்போல் வேந்தனிடத்துக் காணப்பெறும் நன்மை, தீமைகளைத் தம் அறிவாலே கண்டு மேலும் ஆராய்ந்து தெளிந்து, அவர் மனத்தைத் தீதின்பால் செல்லாதவாறு தடுத்து, அன்பு நெறியையும், அறச்செயலையும் மேற்கொற்றச் செய்து, தீவினையினின்றும் விலக்கி, வேந்தன் புகழை நிலைக்கச் செய்தவர்கள் என்பதை,

"ஆவுதி மண்ணி, அவிர் துகில் முடித்து,
மா விசும்பு வழங்கும் பெரியோர் போல,
நன்றும் தீதும் கண்டு ஆய்ந்து அடக்கி,
அன்பும் அறனும் ஒழியாது காத்து,
பழி ஒரீஇ உயர்ந்து, பாய் புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்களும்" (மதுரை. 494-499)

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன. காவிதி மாக்கள் என்பதற்கு நச்சினார்க்கினியர் "காவிதிப் பட்டங்கட்டின அமைச்சரும்"[36] எனப் பொருள் உரைக்கின்றார்

நச்சினார்க்கினியர்.(மதுரை உரை 499) இங்குக் காவிதி மாக்கள் அமைச்சர் நிலையில் கருதப்பட்டமை புலனாகின்றது. "பாண்டி நாட்டுக் காவிதிகளை வேளாளர் என்றும், அவர்கள் தம் அரசர்களோடு மகட்கொடைக்கு உரியர் என்றும்"[37] நச்சினார்க்கினியர் கூறுகிறார். பொன்னால் செய்த பூவைக் காவிதிகள் அணிந்தனர்.

காவிதிப் பட்டம் பெற்றோரை வரியிலார் என்று சிலம்பு பகர்கிறது. காவிதி பட்டம் பெற்றோர்க்கு வரிச் சலுகைகள் வழங்கப்பட்டதை இது சுட்டிக்காட்டுகிறது. அத்துடன் அவர்கள் அரசனது நன்மை, தீமைகளைப் பாராட்டியும், கடிந்தும் அவர்களை நல்வழிப் படுத்தியமை அறிய முடிகின்றது. இவ்வாறு வேந்தர்க்கு உறுதுணையாய் இருந்தலைக் காவிதி மாக்கள் தம் கடமையெனக் கொண்டனர் என்பது நன்கு புலனாகிறது.

### 4.4.15 ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும்

ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்னும் இவ்விரு அமைப்புகள் இருந்தமையைச் சங்கம் மருவிய கால இலக்கியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை பெருங்கதை ஆகிய இலக்கியங்கள் சுட்டுகின்றன. தொன்மை வாய்ந்த தொல்காப்பியத்திலோ, எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களிலோ இவ்விரு குழுக்களைப் பற்றிய செய்திகள் இல்லை. பத்துப் பாட்டில் மதுரைக்காஞ்சி 'நாற்பெருங்குழு' என்ற ஒன்றைச் சுட்டுகின்றது. ஐம்பெருங்குழு இருந்ததைப் பற்றி சிலப்பதிகாரம் இந்திர விழா ஊர் எடுத்த காதையிலும் பெருங்குழுவில் ஒருவரான அமைச்சரைப் பற்றி மதுரைக்காஞ்சியும் குறிப்பிடுகின்றன.

"ஐம்பெருங்குழுவில் அமைச்சரைப் பிரித்து முற்கூறின்மையின் ஈண்டு ஏனை நாற்பெருங்குழுவையும் கூறினர் ஐம்பெருங்குழுவான 'அமைச்சர், புரோகிதர், சேனாபதியர் தூதரொற்றறரிவரென மொழிப"[38] என்று நச்சினார்க்கினியர் கூறுகின்றார். சிலப்பதிகாரத்திற்கு உரையெழுதிய அடியார்க்கு நல்லார் ஐம்பெருங்குழுவைப் பற்றிக் குறிப்பிடுகையில் "மக்கள், பார்ப்பனர், மருத்தர், நிமித்தர், அமைச்சர்"[39] ஆகிய ஐவரை ஐம்பெருங்குழுவின் உறுப்பினராகக் கூறுகின்றார். அமைச்சர், புரோகிதர், சேனாதி, தூதர், ஒற்றர் என்போரை ஐம்பெருங்குழுவாகக் கொள்ளலாம். நச்சினார்க்கினியர் தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் "கரணத்தியலவர், கருமகாரர், கனகச்சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், நளிபடைத்தலைவர், யானை வீரர், இவுளி மறவர்"[40] என்று எண்வரைக் குறிப்பிடுகின்றார். அடியார்க்கு நல்லாரும் இதனையே குறிப்பிடுகின்றார் எனவே, இந்த எண்மரின் துணையோடு வேந்தர் தம் கடமைகளைச்

செய்து வந்தனரெலாம். இக்குழுவையே எண்பேராயம் என்று சிலப்பதிகாரமும் மணிமேகலையும் சுட்டுகின்றன.

சங்க இலக்கியங்களில் இவை குறிப்பிடப்படவில்லையெனினும் இவற்றின் துணையோடு வேந்தர் அரசாட்சி நடத்தியிருப்பர் என ஊகிக்க இடமுண்டு. எனவே, கரணத்தியலவர் (கணக்கர்கள்) கரும்காரர் (செயலக அலுவலர்), கனகச்சுற்றம் (பொக்கிஷம் அதிகாரிகள்), கடை காப்பாளர் (கோயிற் காவலர்), நகர மாந்தர் (நகரத்திலுள்ள பெரியோர்கள், அவர்களிடம் அரசன் மக்களது நலனைக் கேட்டு அறிந்து கொள்வான்), படைத் தலைவர் (காலாட்படைத் தலைவர்), யானை வீரர், இவுளி மறவர் (குதிரைவீரர்கள்) ஆகிய எண்மரை எண்பேராயக் குழுவினர் எனக் கொள்ளலாம்.

சங்க காலத்தில் எண்பேராயம் வழக்கிலிருந்துள்ளது. “சங்ககால ஆட்சி முறை வல்லாட்சியினின்றும் மிக வேறுபட்டது. அரசனுடைய அதிகாரம் ஐந்து மன்றங்களால் மிகவும் கட்டுப்படுத்தப் பெற்றது. அவை மக்கள் பிரதிநிதிகள், புரோகிதர், மருத்துவர், சோதிடர் அல்லது சகுனம் பார்ப்போர் அமைச்சர் என்போர் ஆவர். பிரதிநிதி சபை மக்களுடைய உரிமைகளையும் சலுகைகளையும் பாதுகாத்தது. தலைநகரில் இவ்வொவ்வொரு குழுவும் கூடுதற்கும் அலுவல் பார்த்ததிற்கும் தனித்தனி இடங்கள் ஒதுக்கப்பட்டன.”[41] என்று வெ. கனகசபை ஐம்பெருங்குழு பற்றி குறிப்பிடுகிறார்.

ஊர் பொது விழாக்களில் ஐம்பெருங்குழு முக்கியப் பங்காற்றியதைச் சிலப்பதிகாரம் எடுத்தியம்புகிறது. “ஐம்பெருங் குழு என்பதும் ஐந்து பகுதிகள் கொண்ட, அங்கீகரிக்கப்பட்ட மக்களின் சபை என்பதும் அது ஒரு மன்றமாகச் செயற்பட்டது என்பதும் தெளிவு. அவை மன்னனுடைய நிரந்தர மன்றம். எல்லா முக்கியமான விஷயங்களுக்கும் அதனைக் கலந்தாலோசிப்பது அவனுடைய கடமையாகக் கொண்டிருந்தான். என்று எஸ் கிருஷ்ணசாமி ஐயங்காரும் தடைகள், மன்றம், புரோகிதர், பொதுமக்கள் கருத்து என்பவற்றால் அரசனது அதிகாரம் மிகுதியாகக் கட்டுப்படுத்தப்பட்டமையால் அவன் தனது அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தத் துணிய மாட்டான். என்று வி.ஆர். ராமச்சந்திர தீட்சிதர் குறிப்பிடுவதையும்”[42] நா.சுப்பிரமணியன் எடுத்துக்காட்டுகிறார்.

மேற்கூறிய சான்றோர்களின் கூற்றுப்படி சங்க காலத்தில் ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் இருந்தமையும் அவை வேந்தர்களின் ஆட்சி அதிகாரத்தைக் கட்டுப்படுத்தியதையும் அவதானிக்க இயலுகிறது. ஐம்பெருங்குழு,

எண்பேராயம் பற்றிய செய்தியைச் சங்க இலக்கியம் குறிப்பிட வில்லையாயினும், அரசர் பலருக்கு அறங்கூறியதையும், அரசை ஆற்றுப்படுத்தியதையும் சங்க இலக்கியம் குறிப்பிடுவதால் அச்செயல்கள் இக்குழுவினரால் செய்யப்பட்டன எனக் கொள்வது பொருத்தமானதாகும்.

### 4.4.16 தூதர்

சங்ககாலத்து அரசர் தூதர்களை ஏவல் கொண்டனர். தூதர்கள் தம் அரசர் பிரதிநிதிகளாகப் பிற அரசர் அவைக்குச் செல்வர் அரசர்கள் கல்வி, போர், சந்து செய்வித்தல் என்னும் மூன்று காரணங்களை முன்னிட்டு தங்கள் தலைநகரை விட்டுப் பிரியலாம் என்பதையும், அரசர்கள் அந்தணர்கள் மற்றும் பிற உயர்குடியினர் தூதுவராகலாம் என்பதையும்

"ஓதல் பகையே தூது இவை பிரிவே"

"அவற்றுள்,

ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன". (தொல். பொருள். 973-974)

என்று தொல்காப்பியம் கூறுகிறது. அரசர் சந்து செய்விக்கும் உயர்நிலையில் மட்டும் தூதுவராக செல்வர் மற்ற வேளையில் மற்றவர்கள் தூதுவராகச் செயல்பட்டனர். வள்ளுவர் தூதரைப் பற்றி ஓர் அதிகாரமே படைத்துள்ளார். அதில் தூதர்க்கான இலக்கணத்தைப் படைத்துள்ளார். தனது கடமையை அறிந்து, பொருத்தமான காலத்தைத் தெரிந்து, எதிரிகளின் தன்மையையும் உணர்ந்து எவன் செயல்படுகிறானோ அவனே தூதர்களில் சிறந்தவன் என்று சுட்டுகிறார். இதனை,

"கடன் அறிந்து, காலம் கருதி, இடன் அறிந்து,

எண்ணி, உரைப்பான் தலை" (குறள். 687)

என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார். சங்க காலத்தில் மிகப் புகழ் பெற்ற தூது அதியமான் நெடுமானஞ்சியிடமிருந்து தொண்டைமானிடம் ஔவையார் சென்ற தூது ஆகும். அதியமான் பொருட்டு தொண்டைமானிடம் ஒரு ராணுவ தூதராகச் சென்ற ஔவையார் அவரது படைக்கலக்கொட்டிலைக் கண்டார். அக்கொட்டிலில் நெய்யிட்டுப் பளபளப்பாக வைக்கப்பட்டிருந்த படைக்கலங்களைக் கண்ட ஔவையார் எனது அரசனான அஞ்சியின் கொட்டிலில் படைக்கலங்கள் சில, அவை உடைந்துபோய் கொல்லன் பட்டறையில் உள்ளன. ஆனால் உனது கொட்டிலில் புதியனவாய்

பளபளப்பான படைக்கலங்கள் இருக்கின்றன என்றார். இதனால் தனது அரசன் படைக் கலங்களைப் பயன்படுத்திய சுத்த வீரன் என்பதையும் சுட்டிக்காட்டுகிறார். இதனை,

"இவ்வே, பீலி அணிந்து, மாலை சூட்டி,

கண் திரள் நோன் காழ் திருத்தி, நெய் அணிந்து,

கடியுடை வியல் நகரவ்வே அவ்வே,

பகைவர்க் குத்தி, கோடு, நுதி, சிதைந்து,

..........................................

இல்லோர் ஒக்கல் தலைவன்,

அண்ணல் எம் கோமான், வைந் நுதி வேலே." (புறம். 95)

என்ற புறப்பாடல் வாயிலாக அறியலாம்.

**4.4.17 ஒற்றர்**

பகை வேந்தரின் நாட்டு நடப்புகளை அறிந்து கொள்ளவும், உள் நாட்டுச் சூழ்நிலைகளைத் தெரிந்து கொள்ளவும் ஒற்றர் அக்காலத்தில் வேந்தரால் நியமிக்கப்பட்டனர். தொல்காப்பியனார்

"ஒற்றின் ஆகிய வேயே" (தொல். புறத்.3)

என ஒற்றுத் தொழிலைக் குறிக்கின்றார். ஒற்றறிதல் நாட்டில் நெருக்கடி நிறைந்த காலங்களில் மட்டுமன்றி எல்லாக் காலங்களிலும் நிகழ்ந்து வந்தது. உரையாசிரியர் நச்சினார்க்கினியர் எதிரிப் படைகளிடமிருந்து செய்திகளைத் திரட்டிவந்த ஒற்றர்க்கு நிறையப் பரிசுப் பொருட்கள் வழங்கப்பட்டதாகக் கூறுகிறார். மதுரைக்காஞ்சி குறிப்பிடும் நாற்பெருங் குழுவில் ஒற்றரும் ஒருவர் என்று நச்சினார்க்கினியர் சுட்டுகிறார்.

பரிசில் வேண்டிவந்த இளந்தத்தன் என்னும் புலவனை ஒற்றறிய வந்தவன் எனத் தவறாக உணர்ந்து சோழன் நெழுங்கிள்ளி கொல்லப் புகுந்ததையும், அச்செயலைக் கோவூர்கிழார் தடுத்து நிறுத்திப் புலவரைக் காப்பாற்றியதையும் புறநானூறு

"வள்ளியோர்ப் படர்ந்து, புள்ளின் போகி,

நெடிய என்னாது சுரம் பல கடந்து

......................................

மண் ஆள் செல்வம் எய்திய

நும் ஓரன்ன செம்மலும் உடைத்தே." (புறம். 47)

என்ற பாடல் அடிகளில் விளக்குகிறது. இதிலிருந்து அக்காலத்தில் ஒற்றுக் தொழில் சிறப்பாக இயங்கி வந்ததை அறியலாம். மேலும், வேற்று நாட்டு ஒற்றன் பிடிபட்டால் அவனைக் கொன்றுவிடுதலை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்னும் செய்தியும் இப்பாடலின் மூலம் புலனாகின்றது. சங்க இலக்கிய வேந்தர் நிறைய ஒற்றர்களை நியமித்திருந்தனர் எனவும், அவர்கள் அயல்நாட்டு, உள்நாட்டு, நிலைமைகளை அறிந்து வந்தனரெனவும் இதன் மூலம் அறியலாம்.

திருவள்ளுவர் ஒற்றாடல் என்னும் அதிகாரத்தில் 'ஒற்று' பற்றியும் ஒற்றரைக் குறித்தும் விளக்கியுள்ளார் ஒற்று வேந்தனின் கண்களுள் ஒன்றாகக் கருதப்பட்டது. ஒருவன் ஒற்றினால் அறிந்து வந்த செய்தியை, மற்றோர் ஒற்றன் மூலம் உறுதிப் படுத்துதல் தலையாயதாய் விளங்கிற்று. இதனை,

"ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்

ஒற்றினால் ஒற்றிக் கொளல்" (குறள். 588)

என்று திருக்குறள் குறிப்பிடுகின்றது. தூதுவர் ஒற்றராகவும் திகழ்ந்திருக்கலாம். தூது, ஒற்று இரண்டும் வேராயினும் மிகுதியான வேறுபாடுகளைக் கொண்டதாகத் தெரியவில்லை.

**4.4.18 அமைச்சர்கள்**

மன்னனது ஏவல் கேட்க தனித்தனி அதிகாரிகள் இருந்தனர். அவர்களில் மந்திரி முக்கியமான அதிகாரியாக அமைச்சர்கள் இருந்தனர். அவர்களை உழை இருந்தார்

"அறி கொன்று, அறியான் எனினும், உறுதி

உழையிருந்தான் கூறல் கடன்". (குறள். 638)

என்று வள்ளுவர் கூறுகிறார். அமைச்சரைச் சுற்றம் என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுகிறார். மன்னனிடம் பல அமைச்சர்கள் ஏவல் கேட்டனர். அவர்களது தொழில் அரசன் வேண்டிய இடத்தில் அறிவுரை கூறல் ஆகும். அவர்கள் அரசவையிலிருந்தனர். அவர்களை அரசர் கலந்தாலோசித்து அவர்கள் அறவுரையை வேண்டியபோது அவர்கள் அதனை வழங்கினர். செங்குட்டுவன் அவையில் வில்லவன் கோதை, அழும்பில் வேல் என்னும் இரு அமைச்சர்கள் இருந்ததைப் பதிற்றுப்பத்து பகர்கிறது.

### 4.4.19 கணி

சங்க கால அரசவையில் இன்றியமையாத அலுவலர்களில் சோதிடரும் ஒருவராவார். நல்லோரைகளிலும், நற்சகுனங்களிலும் ஆழ்ந்த நம்பிக்கை இருந்தமையால், அவ்வரசர்கள் சோதிடர்களைத் தமது அவையில் நிரந்தரமாக வைத்திருந்தனர். சோதிடர்க்குக் கணி என்பது பெயர். தலைமைச் சோதிடர் பெருங்கணியாவார். அரச காரியங்களைச் செய்தற்குப் பொருத்தமான காலத்தைக் கூறுதல் அவர்கள் கடமையாக இருந்துள்ளது. அவர்கள் குறித்த நன்னாளும் நல்லோரையும் அரசர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு அதற்கேற்பச் செயலாற்றியுள்ளனர். சங்க காலத்தில் பிற நாட்டின் மீது போர்தொடுக்கும் போது நற்சகுனங்கள் பார்த்துச் செல்லுதல் மரபாக இருந்துள்ளது. ஆனால் சில மன்னர்கள் நற்சகுனங்கள் மீது நம்பிக்கையின்றி செயல்பட்டும் உள்ளனர்.

உன்னம் என்னும் ஒருவகை மரம். அது தளிர்த்தும் பொன்போன்ற பூக்கள் நிறைந்தும் காணப்பட்டால் நற்சகுனம் என்றும் அம்மரம் கரிந்து போயிருந்தால் தீய சகுனம் என்றும் ஒரு நம்பிக்கை சங்க காலத்தில் இருந்துள்ளது. அவ்வாறு உன்னமரம் கருகியிருந்த போதிலும் நாட்டின் சூழல் கருதி பாரியும் நார்முடிச்சேரலும் பகை நாட்டின் மீது போர் தொடுத்து போரில் வெற்றி பெற்ற செய்தி பதிற்றுப்பத்தில் இடம் பெற்றுள்ளது. இதனால் பாரியை உன்னத்துப் பகைவன் என்று கபிலர் போற்றியுமுள்ளார். இதனை,

"பொன்னின் அன்ன பூவின், சிறியிலை,

புன் கால், உன்னத்துப் பகைவன், எம் கோ" (பதிற்.61-5-6)

"தார் மிகு மைந்தின், நார்முடிச் சேரல்

புன் கால் உன்னம் சாய, தெண் கண்" (பதிற்.40-16-17)

என்ற பாடலின் வாயிலாக அறியலாம். சங்க கால மன்னர் சபையில் கணி இடம்பெற்றதையும் அவர்கள் போர்க்குரிய காலங்களை ஆராய்துரைத்ததையும் இவ்வடிகள் உணர்த்துகின்றன.

### 4.4.20 படைகள்

தொல்காப்பியம் அரசருக்குரியனவாகச் சுட்டும் ஒன்பது பொருள்களுள் படையும் ஒன்று வீரத்திற்கு முதன்மையளித்து வந்த அக்காலத்தில் போர் தவிர்க்க முடியாத ஒன்றாக இருந்துள்ளது. அரசுரிமை, நாட்டை விரிவு படுத்துதல், பொறாமையுணர்வு, போரில் பெற்ற வெற்றிப் புகழாகக் கருதப்பட்டமை முதலான காரணங்களால், அக்காலத்தில் போர்கள் அடிக்கடி நிகழ்ந்தன. போர் நிகழ்த்தப் படைக்கலங்கள் தேவைப்பட்டன. சிறந்த படைக்கலங்களும், சிறந்த படைத் தலைவர்களும் கொண்டே போரின் வெற்றித் தோல்வி நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இதையுணர்ந்த பண்டைய வேந்தர் தம் படை வலிமையைப் பெருக்குவதில் ஆர்வம் கொண்டிருந்தனர். காலாட்படை, குதிரைப்படை, யானைப் படை, தேர்ப்படை ஆகிய நாற்பெரும் பாடையை வேந்தர் பெற்றிருந்தனர்.

"புகழ்நு தலவிர் பொற்கோட் டியானையர்
கவர்பரிக் கச்சை நன்மான்
வடிமணி வாங்குள
கொடிமிசை நற்றேர்க் குழுவினர்
கதழிசை வன்கணினர்
வாளின் வாழ்நர்" (புறம். 377:23-28)

மேற்கண்ட புறநானூற்றடிகள் வாயிலாகச் சோழ வேந்தன் நாற்பெரும் படையைக் கொண்டிருந்தான் என்பது தெரிகிறது. பதிற்றுப்பத்தில் செல்வக்கடுங்கோ வாழியாதனின் படைகளைக் கபிலர் குறிப்பிடுகின்றார். ஓடை முதலான அணிகளை அணிந்துள்ள யானைப் படையும், மேகமேறு மயங்குதற்குக் காரணமான கிடுகுப் படையும், கத்திரிகையிட்டு நறுக்கின பிடரி மயிரையுடைய குதிரைப் படையும் சேர வேந்தனிடத்து இருந்தன. என்பதை,

"இழை அணிந்து எழுதரும் பல் களிற்றுத் தொழுதியொடு,

மழை என மருளும் மா இரும் பல் தோல்,

எ.்.கு படை அறுத்த கொய் சுவல் புரவியொடு” (பதிற். 62:1-3)

என்ற அடிகள் சுட்டுகின்றன. கிடுகுப்படை என்னும் ஒருவகைப் படையையும் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

“பூந்தலைக் குந்தம் கத்திக் கிடுகுநிரைத்து” (முல்லை. 41)

என்று முல்லைப்பாட்டும்,

“கிடுகுநிலைத் தெ.்.கூன்றி

நடுகல்லின் அரண்போல” (பட்டின. 78-79)

என்று பட்டினப்பாலையும் கிடுகுப் படையைக் குறிக்கின்றன. கிடுகு என்பதற்கு ‘தேய் பரிசை’ என்னும் பொருளைப் பொ.வே. சோமசுந்தரனார் குறிப்பிடுகின்றார். கிடுகின் அமைப்பு பற்றிக் கூறும் போது “கிடுகின் அமைப்பைத் தன்மையை விளங்கிக் கொள்ள முடியவில்லை. கிடுகு என்பது ஒரு படைக்கலனாக அக்காலத்தில் பயன்படுத்தப்பட்டது எனலாம்.”[43] என்று அரங்க இராமலிங்கம் குறிப்பிடுகிறார். எனவே, கிடுகு என்பது படைக்கருவியாகச் செயல்பட்டுள்ளது.

பண்டைய வேந்தர் நிலத்தில் மட்டுமல்லாது நீரிலும் சென்று போரிட்டனர். கடலில் சென்று போரிட்ட வேந்தனாகச் சேரன் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் விளங்குகிறான். செங்குட்டுவனின் கடற்போரைப் பரணர் பதிற்றுப்பத்தில் விரிவாகக் கூறுகின்றார்.

“கோடு நரல் பௌவம் கலங்க வேல் இட்டு

உடை திரைப் பரப்பின் படு கடல் ஓட்டிய

வெல் புகழ்க் குட்டுவன் கண்டோர்” (பதிற். 46:11-13)

“கெடல் அரும் பல் புகழ் நிலைஇ, நீர் புக்கு,

கடலொடு உழந்த பனித் துறைப் பரதவ!” (பதிற். 48:3-4)

சோழன் கரிகால் வளவனின் முன்னோர் கடலில் சென்று போர் செய்தனர் என்னும் குறிப்பபை,

“நளியிரு முந்நீர் நாவா யோட்டி

வளிதொழி லாண்ட வுரவோன் மருக” (புறம். 66:1-2)

என்று புறநானூறு புகழ்கின்றது. இதன் வாயிலாகவும் பண்டைய வேந்தர் கடற்படை உடையோராய் விளங்கினர் என்பது புலனாகும். மேலும், அவர்கள் படைக்கலங்களை மிகுதியும் கொண்டிருந்தனர் என்பதையும், அவற்றைத் திரட்டி வைக்கப் படைக்கலக் கொட்டிலை அமைத்திருந்தனர் என்பதையும் தொண்டைமானிடம் தூது சென்ற ஔவையாரின் வாய்மொழியால் அறியலாம்.

### 4.5. வேந்தர்கள் போற்றும் பிராமணியம்

வேந்தர்கள் காலத்தில் பிரமணியம் செழித்து வளர்ந்துள்ளது. வேத மரபு அல்லது வைதீக மரபு தீயை மையமாகக் கொண்ட சடங்குகளைக் கொண்டது. அந்தணர்களின் முக்கியப் பணியான வேள்வி வளர்த்தலை வேந்தர்கள் பெருமையோடு கூறிக் கொள்ளும் மரபு சங்க காலத்தில் மேலோங்கியிருந்துள்ளது. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்று வேந்தர்கள் தங்கள் பெயரோடு இணைத்து வழங்குமளவில் யாகங்கள் நடத்துவதை பெருமையாக எண்ணியுள்ளார். அந்தளவிற்கு பிராமணியம் வேந்தர் காலத்தில் வேரூன்றிச் செழித்து வளர்ந்துள்ளது.

வேள்விக்காகவே பிராமணர்களுக்கு வேந்தர்கள் தானம் கொடுத்துள்ளனர். தஞ்சைத் தரணியில் அந்தணன் கவுணியன் விண்ணந்தாயன் என்பவர் இருந்திருக்கிறார் இவரைப் புகழ்ந்து ஆவூர் மூலங்கிழார் பாடிய பாடல் புறநானூறு உள்ளது. நடத்தப்பட்ட கேள்விகளின் எண்ணிக்கை கண்டு எண்ணே வெட்கப்பட்டதாக ஆவூர் மூலங்கிழார் கூறியிருப்பது வேந்தர்கள் வேத மரபிற்கு அளித்த முக்கியத்துவம் புரிதலாகிறது. இதனை,

“நீர்நாண நெய் வழங்கியும்

எண்நாணப் பலவேட்டும்

மண் நாணப் புகழ் பரப்பியும்” (புறம். 166:21-23)

என்ற பாடல் அடிகள் புலப்படுத்துகிறது. நான்மறை பிராமணர்கள் சுற்றம் நிற்க, வேந்தர்கள் பலர் ஏவல் செய்ய, நிலைபெற்ற வேள்வி செய்து முடித்த வாளோடு

வீற்றிருக்கிறான் நெடுஞ்செழியன் என்று வேந்தர்கள் யாகம் நடத்துவதற்கு அளித்த முக்கியத்துவத்தை

"நான்மறை முதல்வர் சுற்றமாக

மன்னர் ஏவல் செய்ய மன்னிய,

வேள்வி முற்றிய வாய்வேள் வேந்தே" (புறம். 26:13-15)

என்ற வரிகளில் புறநானூறு சித்தரிக்கிறது. மேலும், அந்தணர்கள் வளர்க்கும் யாகங்களிலிருந்து எழும் முத்தீ வேந்தர்களின் வெண்கொற்றக்குடைக்கு உவமையாகப் புலவர்களால் பாடப்பெற்றமை அன்றையத் தமிழ்ச் சமூகம் வேத மரபிற்கு முழுமையாக மாறிய நிகழ்வைச்சுட்டுகிறது. "சங்க இலக்கியப் பாக்கள் பாடியவர்களில் பிராமணர்களும் உண்டு. புறநானூற்றுப் புலவர் கபிலர் அவர்களில் ஒருவர் அவர் மாமிச உணவு உண்ணுவதையும் மது குடிப்பதையும் ரசித்து பாடியிருக்கிறார் வேத காலத்தில் பிராமணர்கள் மாமிசமும் மதுவும் உண்டவர்கள் என்பதை அறிவோம். அந்த வேத மரபு சங்க இலக்கியத்திலும் வெளிப்படுகிறது."[44] என்று அருணன் சங்க இலக்கியத்தில் பயின்று வரும் வேத மரபு பற்றிக் குறிப்பிடுகிறார்.

புறநானூறு உள்ள பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் பாடல் கல்வியின் முக்கியத்துவம் குறித்துப் பாடுவதோடு கல்வியின் மூலம் கீழ் வர்ணத்தார்களும் மேல் வர்ணத்தார்களால் மதிக்படுவார்கள் என்று கூறுகிறது. இதிலிருந்து வேந்தர் காலத்தில் வைதீக மரபான நால் வர்ண முறை மேலோங்கியிருந்த நிலைப் புலப்படுகிறது. இதனை,

"உற்றுழி உதவியும், உறு பொருள் கொடுத்தும்,

பிற்றை நிலை முனியாது, கற்றல் நன்றே

................................

வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்,

கீழ்ப்பால் ஒருவன் கற்பின்,

மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே" (புறம். 183)

என்ற பாடல் வழி தெளியலாம். சங்க காலத்திலேயே பிராமணர்கள் மட்டும் தனித்து வாழுகிற ஊர்கள் வந்துவிட்டன. அந்தணர் பள்ளி பற்றி மதுரைக்காஞ்சி வருணித்துள்ளது. அவை ‘பார்ப்பனச்சேரி’ என்றழைக்கப்பட்டுள்ளது. சிறுபாணாற்றுப்படை அந்தணர்கள் மட்டும் வாழும் ஊராக ஆமூரைக் குறிப்பிடுகிறது. காஞ்சிக்குப் போகும் வழியில் மறைக்காப்பாளர் முறைப்படி இருந்ததாக பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது. சில கிராமங்களில் பிராமணர்கள் மட்டும் வசிக்கின்ற வீதிகள் இருந்ததை ‘ஆசில் தெரு” என்று குறுந்தொகை அழைக்கிறது. அந்தணர்கள் பிறர் வாழும் பகுதிகளுக்குச் செல்வதில்லை என்ற நிலைப்பாட்டை

“அந்தணர் அருகா அருங்கடிவியனகர்” (சிறுபாண். 187)

என்று சிறுபாணாற்றுப்படை குறிப்பிடுவதிலிருந்து வேந்தர்கள் காலத்தில் நால்வர்ண முறையும் அந்தணர்களே உயர்ந்தோர் மற்றவர் தாழ்ந்தோர் என்ற நிலைப்பாடும் ஓங்கியிருந்தது புலனாகிறது.

### 4.5.1 வேந்தர் அவையில் அந்தணர்

தமிழ் இலக்கியத்தின் தொடக்கக் காலத்திலிருந்து அரசவையில் பிராமணர்கள் முக்கிய பொறுப்பு வகித்து வந்துள்ளனர். வேந்தரது அரசவையில் புரோகிதர் பதவி தோற்றுவிக்கப்பட்டு அதில் பிராமணர்கள் மட்டுமே அரசனது புரோகிதர்களாயினர். புரோகிதனை ஆசான் அல்லது கரும வினைஞன் என்றும் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.

“வெம்பரி யானை வேந்தற்கு ஓங்கிய

கரும வினைஞரும், கணக்கியல் வினைஞரும்”

(சிலம்பு.கால்கோள். 2639-40)

என்ற வரியின் மூலம் இதனை அறியலாம். “அரசின் சிறப்பான அங்கங்களின் பட்டியலிலிருந்து புரோகிதனை நீக்கிவிட்டதன் மூலம் அர்த்தசாஸ்திரம் அரசியல் கொள்கைக்குப் பெரிய சேவை செய்து விட்டது. ஏழு அங்கங்கள் பட்டியலில் புரோகிதன் காணப்படவில்லை என்று டாக்டர் கோஷால் கூறுவதாகவும் ஆனால் வி. ஆர். ராமச்சந்திர தீட்சிதர் அமைச்சர்களுள், புரோகிதர் அடக்கம்”[45] என்று கூறுவதாகவும் ந.சுப்பிரமணியம் எடுத்துரைக்கிறார். அந்தணர்கள் வேந்தரது அவையில் முக்கியப் பொறுப்பு வகித்ததைச் சங்க இலக்கியங்கியம் பதிவு செய்துள்ளது.

சங்க காலத்தில் அரசர்கள் அந்தணர்களைப் போற்றி மதித்துள்ளனர். அந்தணர் அறவுரைக்கு அரசர் அடங்கி நடக்க வேண்டும் என்பது பொதுவான விதியாக இருந்துள்ளது. ஓர் அந்தணப் புலவனை அவமதித்த சோழன் மாவளத்தான் பின் தன் வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டாதாகப் புறநானூறு குறிப்பிடுகிறது. இதனை,

"..................................முன்னோ ரெல்லாம்

பார்ப்பார் நோவன செய்யலர் மற்றிது

நீர்த்தோ நினக்கென வெறுப்பக் கூறி

நின்யான் பிழைத்தது நோவா யென்னினும்

நீபிழைத் தாய்போ னனிநா ணினையே" (புறம். 43:13-17)

என்ற அடிகளின் மூலம் சங்க காலத்தில் அந்தணர்கள் அரசவையில் முக்கிய பொறுப்பிலிருந்துள்ளதையும் அவர்களது அறிவுரையை வேந்தர்கள் கடமையாகக் கொள்ளவேண்டும் என்பதையும் கண்ணனார் எடுத்தியம்புகிறார்.

### 4.6 புலவர் மரபு

பழந்தமிழ் புலவர்களுடைய சிறப்புகளுள் ஒன்று, வேந்தர்களுடன் அவர்கள் கொண்டிருந்த நட்பு ஆகும். வேந்தரைப் பாடிப் பரிசில் வேண்டுவதே தொழிலாகக் கொள்ளாமல், அவர்கள் தவறு செய்தவிடத்து அஞ்சாது கண்டித்து அறநெறிப்படுத்தும் இயல்பினராகவும் புலவர் பெருமக்கள் திகழ்ந்தனர். "பண்டைத் தமிழக அரசரும், புலவரும் கொண்டிருந்த நட்புணர்ச்சி, அதிகாரம், செல்வ, இன வேறுபாடுகளையெல்லாம் கடந்த ஒரு சமநிலைச் சமுதாயம் பண்பு காட்டுவதாக உள்ளது. சாதி வேறுபாடுகளும், வருண பாகுபாடுகளும், பொருளாதார உயர்வு தாழ்வுகளும் நிலவிய சமூகம் சங்க காலத்தது என்பது ஐயமின்றி தெளியப்படும். இத்தகைய சமூக நிலையில் புலவர்கள் மன்னருடன் நெருங்கிப் பழகும், அவர்களின் தவறுகளை உரிமையுடன் கண்டிக்கவும் முடிந்த நிலை அரசர்க்கும் புலவர்க்கும் இருந்த நெருங்கிய நட்புணர்ச்சியைக் காட்டுகிறது"[46] என்று புலவருக்கும் அரசருக்குமிடையே உள்ள நட்புணர்வைப் பற்றி கு.வெ.பாலசுப்பிரமணியம் எடுத்துரைக்கிறார்.

"நாடாளும் தலைவர்கள், இலக்கியம் இயற்றும் புலவர்களையே விழுமியோராகப் போற்றி வந்தனர். அரசனை 'அவன்' என்றும், புலவரை 'அவர்' என்றும் சுட்டியதில் உள்ளது நாகரிக மதிப்பு. அரசியலில் தலையிட்டு அறிவுரை கூறியும் அறவுரை நல்கியும் அரசரின் போக்கைத் திருத்தும் உரிமை புலவர்க்கு இருந்தது. அரசர், குறுநில மன்னர் ஆகியோரின் குடும்ப வாழ்விலும் புலவர் தலையிட்டு ஆவன செய்யும் ஆர்வம் கொண்டிருந்தனர்"[47] என்று மு. வரதராசனார் கூறுவது கருதத்தக்கது. புலவர்கள் தங்களைப் புகழ்ந்து பாடுவதைப் பெரும் பேறாக வேந்தர்கள் எண்ணினர் என்பதை,

"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவ னேவா வான வூர்தி
எய்துப வென்பதஞ் செய்வினை முடித்தென" (புறம்.126:11-13)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

### 4.6.1 வேந்தர் புலவர்களைப் போற்றிய முறை

வேந்தர், புலவர்பால் கொண்டிருந்த மதிப்பு குறிப்பிடத்தக்கதாயிருந்தது. வேந்தர்கள் புலவர்களைப் பெரும் புலமையாளராகவும், சான்றோராகவும் கருதிப் போற்றினர். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் உரைத்த வஞ்சினம், பழந்தமிழப் புலவர் பெருமக்களின் சிறப்பான வாழ்வை உணர்த்துகிறது.

"ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் றலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை" (புறம்.72:13-16)

எனக் குறிப்பிடும் செழியனின் கூற்று கருதத்தக்கது. ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி எனப் புலவரின் புலமைத் திறத்தைக் குறிப்பிட்டு, அப்புலவரால் தன் நாடும் தானும் பாராட்டுப் பெறுவதை உயர்வாக மதித்ததிலிருந்து வேந்தர்கள் புலவர்களைப் போற்றிய விதம் புலப்படுகிறது. கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், ஐந்தாம் பத்து பாடிய பரணருக்குத் தன் மகன் குட்டுவன் சேரலைத் தொல் கடனாகக் கொடுத்த செய்தி குறிப்பிடத்தக்க ஒன்றாகும், புலவரைப் போற்றியுரைப்பது, அவருக்குப் பரிசில்

தருவது இவற்றோடு அமையாது, தன் மகனையே அவருக்குத் தொண்டு செய்ய அனுப்புவது புலமைக்குப் பழந்தமிழ் ஆட்சியாளர்கள் தந்த மதிப்பினை உணர்த்துகிறது.

பழந்தமிழ் வேந்தரிடம் புலவர்கள் பெற்றிருந்த செல்வாக்கு, புகழத்தக்கது. தம்மை நாடிவந்த புலவர் பெருமக்களை அன்புடன் வரவேற்று, வேண்டியன நல்கிப் போற்றினர் வேந்தர். தம்மை விட்டுப் பிரியும்பொழுது ஏழடி புலவரின் பின்சென்று வழியனுப்பும் பண்பாட்டையும் பெற்றிருந்தனர். இத்தகைய பண்பு நலன்களைப் பழந்தமிழ் வேந்தர் பெற்றிருந்ததால், அவர்களைப் புலவர்கள் தாங்கள் விரும்பிய நேரத்தில் காணவும், கண்டு பேசவும் உரிமை பெற்றிருந்தனர். இதனை,

"உடையோர் போல விடையின்று குறுகிச்
செம்ம னாளவை யண்ணாந்து புகுதல்
எம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே" (புறம். 54:2-4)

என்ற பாடல் அடிகள் மூலம் தெளியலாம். வேந்தன் புலவரை அன்புடன் வரவேற்று அவருக்கு வேண்டுவன தந்து, அன்பொழுக, கனிவுடன் அவர்களைப் பார்ப்பான் என்றும், அவனது அருள் பார்வையில் புலவரின் உள்ளம் உருகுவதைவிட, எலும்புகளே மெழுகென உருகுவதாக முடத்தாமக்கண்ணியார் கூறுகிறார்.

"ஒன்று யான் பெட்டா அளவையின்
ஒன்றிய கேளிர் போல, கேள் கொளல் வேண்டி,
வேளாண் வாயில் வேட்பக் கூறி,
கண்ணில் காண நண்ணு வழி இரீஇ,
பருகு அன்ன அருகா நோக்கமோடு,
உருகுபவை போல் என்பு, குளிர் கொளீஇ" (பொருந. 73-78)

இவ்வாறு புலவர்கள் வேந்தர்களிடம் சிறப்புப் பெற்றிருந்ததால், மன்னன் மகளைத் தன் மகள் எனக் கூறும் அளவிற்கு உரிமை பெற்று விளங்கினர். தம்மைப் புரந்த மன்னன் போரில் உயிர் துறந்தபோது, அத்துன்பம் பொறாது புலவர் கலங்கிக் கூறியிருப்பது புலவருக்கும் வேந்தருக்குமிடையே இருந்த உறவுமுறையைக் காட்டுகிறது. சிந்தனையைத் தூண்டுவதாக அமைந்துள்ளது.

### 4.6.2 வேந்தர்களின் ஒற்றுமையைப் போற்றுதல்

நாடாளும் மன்னர்களைப் போர் வெற்றிகளைப் பாராட்டியும் பகைவர்களின் அழிவைப் பாடியும் பரிசு பெறுதலை நோக்கமாகக் கொள்ளாமல் அவர்கள் பிற ஆட்சியாளர்கள் மத்தியில் கொண்டிருக்கும் நட்பினையும் புலவர்கள் பதிவு செய்யத் தவறியதில்லை. வேந்தர் காக்கும் நாடு அனைத்து வளங்களையும் உடையதாக இருப்பினும், அவர் இறக்கும்பொழுது அந்நாடு உடன் செல்வதில்லை அதுவரை அந்நாட்டுடன் தொடர்பில்லாதவரிடம் நாட்டின் ஆட்சியுரிமை சென்றடைகிறது. எனவே, இவ்வாட்சியுரிமை அழிவுடையது, நிலையற்றது என்பதை நினைவில் இருத்தல் வேண்டும். இறந்தபிறகு இறுதிவரை வருவது நல்வினை ஒன்றே. எனவே, நாடி வருவோர்க்கு வளம் பலவும் வழங்கி நல்வினையுடையோர்களாக ஆகுங்கள். உங்களுக்குக் கூறத்தக்க உண்மைகளுள் இதுவே தலையாயது இதனை உணர்ந்து நீங்கள் மூவரும் இனிது வாழ்க. நீங்கள் மூவரும் ஒன்றுகூடி உலகாளின், உலகில் இன்பம் உண்டாகும். ஒருவர் பகைக்கொண்டு பிரியினும் உலக இன்பம் பாழுறும். எனவே, இன்றேபோல் ஒரு மனப்பட்டு உலகாளுதல் வேண்டும் என அறிவுரை கூறி மூவேந்தர்களின் நட்பு என்றும் நிலைத்திருக்க ஔவையார் வேண்டுகிறார். இதனை,

“கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்தர்

யானறி பளவையோ விதுவே வானத்து

வயங்கித் தோன்று மீனினு மிம்மென

இயங்கு மாமழை யுறையினும்

உயர்ந்துமேந் தோன்றிப பொலிகநுந் நாளே” (புறம். 367:14-18)

என்ற அடிகளின் மூலம் அறியலாம். இதைப்போல் சோழ குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவனும் பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெரு வழுதியும் நட்பு பூண்டு ஒருங்கியிருந்தனர். இவ்விருவரின் ஒற்றுமையைக்கண்ட காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் மகிழ்ந்து அவர்களை வாழ்த்துகிறார். உங்கள் ஒற்றுமை நிலைத்திருக்குமானால், இந்நிலவுலகெலாம் உங்கள் காலடியின் கீழ் வருதல் உறுதி. நீங்கள் ஒற்றுமையோடு இருப்பின் அதுகண்டு பொறாது உங்கள் ஒற்றுமைக்குக் கேடு சூழ்வர் பகைவர். நல்லவர் போலவும், உங்களுக்கு நன்மையைத் தேர்த்து உரைப்பவர் போலவும், முன்னோர் முறைகளைத் தேர்த்து மொழிபவர் போலவும் எடுத்துக்கூறி உங்களுக்குள் பகை சேர்ப்பர். எனவே, அவற்றையெல்லாம் கேளாது இன்றுபோல்

ஒற்றுமையுடன் வாழ்க. இவ்வொற்றுமையால் நீங்கள் பல நாடுகளை வென்று, அந்நாட்டுக்குன்றுகள் தோறும் உங்கள் கொடிகள் பறக்கும்படி செய்யுங்கள் என்று அவர்களது நட்பை

"………நல்ல போலவு நயவ டோலவும்

தொல்லோர் சென்ற நெறிய போலவும்

காத னெஞ்சினும் மிடைபுகற் கலமரும்

ஏதின்மாக்கள் பொதுமொழி கொள்ளா

தின்றே போல்கநும் புணாச்சி" (புறம். 54: 24-28)

என்ற பாடல் வரிகளில் காரிக்கண்ணனார் போற்றுகிறார்.

### 4.6.3 அஞ்சாது அறிவுரை வழங்குதல்

வேந்தரிடம் பரிசில் பெற்ற புலவர்கள் பரிசிலுடன் மீளாது, தக்க அறிவுரையினைக் கூறிச் செல்லுதல் மரபாகக் கொண்டிருந்தனர். வேந்தனிடம் தவறு கண்டபொழுது தமக்குப் பரிசில் நல்கியவன் எனத் தாழ்ந்து விடாமல் கடுமையாக அறிவுறுத்தும் அரும்பணியைச் செய்துள்ளனர். இதனையே வள்ளுவர்,

"இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்

கெடுப்பா ரிலானுங் கெடும்" (குறள். 448)

என்று கூறுகிறார். ஆளும் வேந்தனிடத்தில் அன்பும் அருளும் நீங்காது நிறைவுற்றிருத்தல் வேண்டும். அவை அவன் மாட்டு இல்லையாயின், அவன் ஆட்சி நெடிதுநாள் நிலைபெற்றிராது. அன்பையும், அருளையும் அடிப்படையாகக் கொண்ட ஆட்சியினையே மக்கள் விரும்புவர். இவற்றின் அடிப்படையில் அமையாதது அறநெறியற்ற ஆட்சியாகும். அறனற்ற ஆட்சி அழியும். எனவே, பெற்ற குழந்தையைத் தாய் பேணுவது போல நாட்டைக் காக்க வேண்டும் என்று சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாட் கோப்பெருஞ் சேரலிரும்பொறைக்குப் புலவர் நரிவெரூஉத்தலையனார் நல்லாட்சி நடத்தும் முறை பற்றி அறிவுரை வழங்கியுள்ளார். இதை

"அருளு மன்பு நீக்கி நீங்கா

நிரயங் கொள்பவரொ டொன்றாது காவல்

குழவி கொள்பவரி னோம்புமதி

அளிதோ தானேயது பெறலருங் குறைத்தே”                (புறம்.5:5-8)

என்ற பாடலின் மூலம் தெளியலாம். நல்லரசைப் பல்லோர் பழிக்கும் கொடுங்கோல் அரசால் ஆக்குதல் அவ்வரசுடையான் கொள்ளும் சினம், காமம், கையிகந்த கண்ணோட்டம், அச்சம், பொய் ஆகியவற்றால் ஆகும். எனவே, தீச்செயலை நின் மனத்தாலும் நினையாது, அறவினைகளை நாள்தோறும் செய்க. நாட்டு மக்கள் ஒருவரையொருவர் துன்புறுத்தாமலும், பிறர் பொருளைத் திருட விரும்பாமலும், கடலும், கானலும் பயன்பல ஈனுமாறும் நல்லாட்சி நடத்துக. குற்றமறக் கற்றுத் துறைபோகிய அறிவுடையோர் கூறும் அறநெறி வழி ஆட்சி நடத்துக. அன்பு மனைவியரோடு மகிழ்ந்து பிரிவின்றி வாழ்க. உள்ள பொருளை ஊராரோடு உண்டு மகிழ்க, எனப் புலவர் பாலைக்கௌதமனார் பல்யானைச் செல்குழுகுட்டுவனுக்கு அறிவுரை பகர்கிறார். இதனை,

“சொல், பெயர், நாட்டம், கேள்வி, நெஞ்சம், என்று

ஐந்துடன் போற்றி அவை துணையாக,

..............................................

ஊனத்து அழித்த வால் நிணக் கொழுங் குறை

குய் இடுதோறும் ஆனாது ஆர்ப்ப”                (பதிற். 22:1-11)

என்ற வரிகளின் மூலம் அறியலாம். ஊலகமெலாம் ஆள ஆசை கொள்ளும் வேந்தர்க்கும் உறுதுணை புரிவோர் உழவர். நாட்டிற்கு அரணாக நிற்கும் உழவர்களுக்கு நல்லன செய்தலை வேந்தன் நாள்தோறும் அறிந்து தக்கன செய்தல் வேண்டும் என்று புலவர் வெள்ளைக்குடி நாகனார் கூறுகிறார். வேந்தர்கள் மண்ணாசை கொண்டு போரிடுவதை நிறுத்திவிட்டு, உழவரைப் பேணி, நாட்டு மக்கள் நல்வாழ்வில் கருத்துச் செலுத்தினால், மக்களே விரும்பித் தம்மை ஆளும் உரிமையை இவ்வேந்தனுக்குக் கொடுப்பர் என்றும் இவர் அறிவுறுத்தியுள்ளார்.

உழவுத் தொழிலுக்கு அடிப்படைத் தேவையாக அமைந்திருப்பது நீர். உழவுத் தொழிலைப் போற்ற நினைக்கும் வேந்தன் முதலில் நீர் நிலைகளைப் பெருக்க வேண்டும் எனப் புலவர் குட புலவியனார் அறிவுறுத்துகிறார். பசியும், பகையும் இன்றி மக்கள் வாழும் நாடே சிறந்த நாடாகக் கருதப்படும். பசியும், பிணியும்,

பகையுமின்றி மக்கள் வாழ வேண்டுமானால், உணவுக்குறை உண்டாதல் கூடாது. உணவு நன்னிலமும், நிறை நீரும் உண்டாய வழியே உண்டு. நீர் அற்றவழி நிலம் இருந்தும் பயன் இன்று. எனவே, நீர் நிறைத்து நிறையக கிடைக்குமாறு நீர்நிலை பலவற்றை ஆங்காங்கே ஆக்கித் தருதல் வேந்தனுடைய தலையாயக் கடமை. இம்மண்ணுலகில் நிலைத்த புகழை விரும்புவோர். நீரின் இன்றியமையை உணர்ந்து அதற்கு வேண்டுவன செய்வர் என்பதை,

"நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்

உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே

உண்டி முதற்றே யுணவின் பிண்டம்

உணவெனப் படுவது நிலத்தொடு நீரே

நீரு நிலனும் புணரியோரீண்

டுடம்பு முயிரும் படைத்திசி னோரே" (புறம். 18:18-23)

எனப் புலவர் குடபுலவியனார், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்கு அறிவுரை பகர்கிறார். விளைநிலம், மா அளவு மிகச்சிறிது என்றாலும், அதையும் முறையாகப் பயிரிட்டு அதில் விளையும் உணவுப் பொருளை, நாள்தோறும் கணக்கிட்டுத் தந்து வந்தால், அச்சிறு நிலத்தில் விளைந்த உணவே, யானைக்குப் பலநாள் உணவாகும் பல வேலியளவு பரந்துள்ள விளைநிலத்தில் யானை ஒன்றை அது விரும்பியவண்ணம் உண்ணச் செய்தால், விளைந்த பயிர் அனைத்தும் ஒரே நாளில் பாழாகிவிடும். யானையின் வாயினுள் சென்று உணவாகிப் பயன்படுவதினும் அதன் கால்களால் மிதியுண்டு அழிவதே மிகுதியாகும். இதனைச் சான்றாகக் கொண்டு, ஆளும் வேந்தன் அறிவுடையோனாகிக் குடிகளிடமிருந்து வரி வாங்கும் முறையை எடுத்தோதுகிறார். இதனை,

"காய் நெல் அறுத்துக் கவளம் கொளினே,

மா நிறைவு இல்லதும், பல் நாட்கு ஆகும்

நூறு செறு ஆயினும், தமித்துப் புக்கு உணினே,

வாய் புகுவதனினும் கால் பெரிது கெடுக்கும்

அறிவுடை வேந்தன் நெறி அறிந்து கொளினே" (புறம். 184)

என்ற பாடல் வழி அறியலாம். இவ்வாறு முறையறிந்து வரி வாங்கினால் நாட்டு மக்கள் வேந்தனுக்குக் கொடுக்க வேண்டிய பொருளை விரும்பிக் கொடுத்து வேந்தனையும் வாழவைத்துத் தாங்களும் நன்கு வாழ்வர். பிழை புரிந்தவர் நம்மவர். எனவே, பிழைத்துச் செல்க என ஒறுக்காது விடுத்தலும், இவர் நம் பகைவர் எனவே, பிழை புரியாராயினும் பெருந்தண்டம் கொடுக்க என ஒறுத்தலும் அறத்தின்பாற்பட்டதன்று. வேந்தனாய் ஆட்சிப் பொறுப்பேற்றிருப்பவனுக்கு வேண்டியவர் வேண்டாதவர் என்ற வேறுபாடு இருத்தல் கூடாது. இவ்வாறு நடுநிலை நின்று, நாடு காப்பவர்பால் ஆண்மையும் அருளும், அருட்பெருங்கொடையும் ஆகிய பண்புகள் இன்றியமையாது இருத்தல் வேண்டும் என வேந்தனுக்கு இருக்க வேண்டியப் பண்புகளை

“............................அரசின் கொற்றம்

அதனால், “நமர்“ எனக் கோல் கோடாது,

பிறர் எனக் குணம் கொல்லாது,

ஞாயிற்று அன்ன வெந் திறல் ஆண்மையும்,” (புறம். 55:11-14)

என்ற பாடலின் மூலம் எடுத்தியம்பிய மதுரை மருதநில நாகனாரின் அறிவுரை போற்றத்தக்கது. இவ்வாறு புலவர் பெருமக்கள் ஆட்சிப் பொறுப்பில் இருப்பவர்கள் பெரும் வேந்தர்கள் என்றும்கூட பாராமல் அவர்களுக்கு வேண்டியமிடத்தும் தவறு செய்யுமிடத்தும் தக்க அறிவுரைகளை வழங்கி அவர்களது ஆட்சி சிறந்தோங்க பேருதவி புரிந்துள்ளனர். வேந்தர்களும் புலவர்களின் அறிவுரைகளைக் கேட்டு தம் ஆட்சிப் பொறுப்பினைச் சிறந்து விளங்கச் செய்துள்ளனர்.

**4.6.4 வேந்தரின் பகை கடிதல்**

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், சேரமான் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுடன் பகை கொண்டு, சேரனின் கருவூர்க் கோட்டையை முற்றுகையிட்டான். சோழனை எதிர்க்குமளவிற்குத் தன்னிடம் படைவலிமை இல்லையென்பதை அறிந்த சேரன், கோட்டைக்குள்ளேயே அடங்கியிருந்தான். சோழர் படை கருவூர்க்கோட்டையைச் சுற்றியுள்ள காவற்காட்டை அழித்தொழித்தது. தன் காவல் மரம் வெட்டப்படும் ஓசைகேட்டும் வெளிவராது கோட்டைக்குள்ளேயே அடைந்திருந்தான் சேரன். போர் நடைபெறாது காலம் நீட்டித்லால் இருபெரும் படைகளும் மக்களும் துன்புறுவதைக் கண்ட புலவர் ஆலத்தூர் கிழார் கிள்ளிவளவனிடம் சென்று, வேந்தரின் மறப்பண்பை எடுத்துரைத்து போரைத் தவிர்க்க

முற்பட்டார். நின்படை கோட்டையில் பலகால் முற்றுகையிட்டிருந்தும், அவன் காவல் மரங்களை வெட்டி வீழ்த்திய ஓசைகேட்டும் வெளிவராது காரணத்தால் சேரன் வீரனல்லன். வீரர் நிகர்த்த வீரரோடே போரிடுவர். பெரு வீரனாய் நீ வீரனல்லாத சேரனுடன் போரிடுவது பெருமை தருவதன்று,

"கடிமரந் தடியு மோசை தன்னூர்

நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப

ஆங்கினி திருந்த வேந்தன்னா டீங்குநின்

சிலைத்தார் முரசங் கறங்க

மலைத்தனை யென்பத நாணத்தக வுடைத்தே" (புறம். 36:9-13)

எனச் சோழனுக்கு வீரத்தின் தன்மையை உணர்த்திப் போரைத் தடுத்து நிறுத்தக் கருதிய புலவரின் பணி குறிப்பிடத்தக்கது.

### 4.6.5 வேந்தரின் பழிகாத்தல்

வேந்தர்கள் தவறு செய்ய நேர்ந்தபொழுது, உரிய நேரத்தில் அவர்களது தவற்றினை உணர்த்தி, அதனால் அவர்களுக்கு ஏற்பட இருந்த பழியினின்றும் காத்துள்ளனர் புலவர் பெருமக்கள் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், திருக்கோவிலூரைத் தலைநகராகக் கொண்டு, மலைநாட்டை ஆட்சிபுரிந்த மலைய மானுடன் பகைக்கொண்டு போருடற்றினான். வெற்றி பெற்ற வளவன் மலையமான மக்கள் இருவரையும் கைப்பற்றிக் கொணர்ந்து யானைக்காலின் கீழிட்டுக் கொல்லத் துணிந்தான். இச்செயலால் கிள்ளிவளவனின் புகழ் குன்றும். வரலாற்றில் நிலைத்த பழி நேரும் என்பதை உணர்ந்த கோவூர்கிழார் புறாவுக்காகத் தன் ஊனைக் கொடுத்துப் புரந்த முன்னோன் மரபில் வந்தவனே! நீ கொல்லத் துணிந்திருக்கும் மக்களோ சிறுவர்கள். தம்மை நாடி வந்தோர்க்கு வாரி வாரி வழங்கிய வள்ளலின் மக்கள். எதிர்த்து நிற்கும் பருவமும் ஆற்றலும் அற்றோர். இவர்களைக் கொல்லுதல் நினக்கு அருளாகாது.

"நீயே, புறவின் அல்லல் அன்றியும், பிறவும்

இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை,

..........................................................................................

புன் தலைச் சிறாஅர் மன்று மருண்டு நோக்கி,

விருந்தின் புன்கண் நோவுடையர்

கேட்டனைஆயின், நீ வேட்டது செய்ம்மே!" (புறம். 46)

எனக் கூறி, வளவனின் கொலைச் செயலைத் தவிர்த்தார். தன்னிடம் தோற்ற மன்னனின் குழந்தைகளைக் கொன்ற பழி வளவனுக்கு ஏற்பட்டிருக்கும் மலையமானின் மக்களைக் காப்பாற்றி, கிள்ளிக்கு ஏற்பட இருந்தது பழியினின்றும் அவனைக் காப்பாற்றினார்.

கோப்பெருஞ்சோழனுக்கு எதிராக அவன் பெற்ற மக்களே போருக்கு எழுந்த நிலையைக் கண்ட புலவர் புல்லாற்றூர் எயிற்றியனார். கோப்பெருஞ் சோழனுக்குப் பின்வருமாறு அறிவுரை நல்கினார். நின்னோடு போருக்கு வந்திருப்பவர் நின் பகைவராகிய சேரரோ, பாண்டியரோ அல்லர். உனக்குப் பின்னால் ஆட்சிப் பொறுப்பேற்க இருப்பவர் நின் மக்கள். நீ வெற்றி பெற்றால் உனக்குப் பிறகு ஆட்சியினை யாருக்கு வழங்குவாய் நீ தோற்றாலும் அது நின் புகழுக்கு மாசு உண்டாக்கும். எனவே, போரைத் தவிர்த்து அமைதி பெறச் செய்வாய் என்பதை,

"எண்ணில் காட்சி யினையோர் தோற்பின

நின்பெருஞ் செல்வம் யார்க்கெஞ் சுவையே

அமர்வெஞ் செல்வ நீயவாக் குலையின்

இகழுந ருவப்பப் பழியெஞ் சுவையே

அதனால், ஒழிகதி லத்தைநின் மறனே" (புறம்.213:15-19)

என்ற பாடலின் மூலம் எடுத்துரைக்கிறார்.

### 4.6.6 புலவர் வேந்தர் நட்பு

பழந்தமிழ் வேந்தரிடம் புலவர்கள் கொண்டிருந்த தொடர்பு, புரவலர், இரவலர் என்ற நிலையினைக் கடந்து உள்ளம் உணர்ந்த உயிர் நட்பாக விளங்கியது. வேந்தன் உயிர்துறக்கும் பொழுது தாமும் உடனிருந்து உயிர்துறக்கும் அளவிற்கு அவர்களது நட்சி சிறந்துவிளங்கியுள்ளது. "அரசருக்கும் புலவர்க்கும் இடையே இருந்த நெருங்கிய தொடர்பு, தமிழ்நாட்டு அரசரின் சிறந்த பண்புகளில் ஒன்று. அதனை

வடநாட்டு அரசரிடம் காணுதல் அரிது”[48] எனத் தமிழக அரசருக்கும் புலவர்க்கும் உள்ள நட்பை சு.வித்தியானந்தம் விவரிக்கிறார்.

புல்லாற்று எயிற்றியனார், கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார், பொத்தியார் என்னும் புலவர்கள் கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர் துறக்கும் தருவாயில் உடன் இருந்தனர். இவர்கள் அனைவரும் கோப்பெருஞ்சோழனுடன் தோழமைபூண்டு உறையூரில் வாழ்ந்தவர்கள். இவர்களைவிடப் பாண்டிய நாட்டில் உள்ள பிசிர் என்னும் ஊரில் வாழந்த ஆந்தையார் என்னும் புலவர் கோப்பெருஞ்சோழன் மீது கொண்டிருந்த நட்பே குறிப்பிடத்தக்கதாகும். “கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும் போல உணர்ச்சியொப்பின் அதுவே உடனுயிர் நீங்குமுரிமைத்தாய் நட்பினைப் பயக்குமென்பதாம்”[49] எனப் பரிமேலழகர் இவ்விருவரின் நட்பினை விளக்குகிறார்.

### 4.6.7 கொடை

புலவர்க்கு வரையாது வழங்கும் வள்ளல்களாக வேந்தர் விளங்கினர். அவர்களது சிறப்பான பண்புகளில் இவ்வள்ளன்மைப் பண்பு குறிப்பிடத்தக்க ஒன்று. வேந்தரே அன்றி வீரரும் கொடைப் பண்பு மிக்கோராய் இருந்துள்ளனர். புலவரின் உண்ணாத வயிற்றினைக் காணப்பெறாது, போருக்குச் சென்று பகைவரை வென்று பொருள் கொணர வேண்டி, தன்னூர்க் கொல்லனை வேல் வடித்துக் கொடுக்கச் சொல்லும் வீரனின் நிலையினை,

“உண்ணா மருங்குல் காட்டித் தன்னூர்க்
கருங்கைக் கொல்லனை யிரக்கும்
திருந்திலை நெடுவேல் வடித்திசி னெனவே” (புறம். 180:11-13)

எனப் புலவர் குறிப்பிடுகிறார். தன்னை நாடி இரவலர் வாராத நிலையிலும், தான் அவர்களைத் தேடிச் சென்று, பரிசில் நல்கும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின வள்ளன்மையை,

“வாரா ராயினு மிரவலர் வேண்டித்
தேரிற் றந்தவர்க் கார்பத னல்கும்
நுசைசால் வாய்மொழி யிசைசா றோன்றல்” (பதிற். 55:10-12)

எனக் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் பாராட்டுகிறார். இவ்வாறு வேந்தர் பரிசில் நல்கியது, அவர்தம் மறுமை இன்ப வாழ்வை நோக்கியன்று, பரிசிலரின் வறுமை வாழ்வை நோக்கியே என்பதை,

“மறுமை நோக்கின்றோ வன்றே

பிறர், வறுமை நோக்கின்றவன் கைவண் மையே” (புறம். 141:14-15)

எனப் பரணர் குறிப்பிடுகின்றார். மூவேந்தருள், சேர வேந்தரின் கொடைப் பண்பு குறிப்பிடத் தக்கதாய் அமைந்துள்ளது. இவர்தம் கொடைத்திறத்தை அறிந்து கொள்வதற்குப் பதிற்றுப்பத்து நல்ல சான்றாகும். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், புலவர் குமட்டூர்க் கண்ணனாருக்கு உம்பற்காட்டுப் பகுதியில் உள்ள ஐந்நூறு ஊர்களைப் பிரமதேயமாகக் கொடுத்தான். அத்தோடு அமையாது முப்பத்தெட்டாண்டுகள் தென்னாட்டுள் வருவாயில் பாகமும் கொடுத்ததாக அறிய முடிகிறது.

பல்யானைச் செல்கெழுகுட்டுவன், புலவர் பாலைக் கௌதமனாருக்கு அளித்த பரிசில் குறிப்பிடத்தக்கதாய் அமைந்துள்ளது. யானும் என் பார்ப்பனியும் சுவர்க்கம் புகல் வேண்டும் எனப் பாலைக் கொளதமனார் பரிசில் வேண்ட, அவர் விரும்பியபடியே சேரனும், பார்ப்பாரில் பெரியோரைக் கேட்டு ஒன்பது பெரு வேள்வி வேட்பித்தாகவும், பத்தாவது வேள்வியிற் புலவரும், புலவரின் மனைவியும் காணாராயினர் எனவும் மூன்றாம் பத்தின் பதிகவுரை கூறுகின்றது.

களங்காயக்கண்ணி நார்முடிச் சேரல் புலவர் காப்பியாற்றுக் காப்பியனாருக்கு நாற்பது நூறாயிரம் பொன் கொடுத்து, தான் ஆளுவதில் பாகமும் கொடுத்தாக அறியமுடிகிறது. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் புலவர் பரணருக்குத் தன் உம்பற்காட்டு வருவாயினையும், தன் மகன் குட்டுவன் சேரலையும் கொடுத்ததாக அறியமுடிகிறது. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் புலவர் காக்கைப் பாடினியார் நச்செள்ளையாருக்கு, ஒன்பதுகாப் பொன்னும் நூறாயிரங் காணமும் கொடுத்ததாகப் பதிற்றுப்பத்தின் பதிகம் குறிப்பிடுகிறது.

செல்வக்கடுங்கோ வாழியாதன் புலவர் கபிலருக்குச் சிறுபுறமென நூறாயிரங் காணங் கொடுத்து நன்றாவென்னும் குன்றேறி நின்று தன் கண்ணிற்கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடையாகக் கொடுத்தான். தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை, புலவர் அரிசில் கிழாருக்குத் தன் ஆட்சியையே கொடுக்க, புலவர் அதனையேற்காது அமைச்சர் பதவியினை ஏற்றுக் கொண்டார். குடக்கோ இளஞ்சேரல்

இரும்பொறை புலவர் பெருங்குன்றூர் கிழார் மருளுமாறு முப்பத்தீராயிரம் காணங்கொடுத்ததாகத் தெரிகிறது. வேந்தர்களின் கொடைப் பண்பில் குறிப்பிடத்தக்கன, புலவருக்காக வேள்வி செய்ததும், தன் மகனைத் தொல் கடனாகப் பணித்ததும் ஆகும். பல்யானைச் செல்கெழு குட்டுவன் வேள்வியியற்றிப் புலவரைச் சுவர்க்கம் அனுப்பிய செய்தியினை,

"நான்மறை யாளன் செய்யுள் கொண்டு

மேனிலை யுலகம் விடுத்தோன்" (சிலம்பு. நடுகல். 137-138)

என சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது. இவ்வாறு வரையின்றி வாரி வழங்கும் வள்ளண்மைப் பண்பு படைத்தவர்களாகத் தமிழ் வேந்தர்கள் விளங்கினர். வேந்தர்தம் கொடைப் பண்பிற்கு வேறு நோக்கில் காரணம் கூறுவோரும் உள்ளனர்.

"புலவர்கள் அரசர்களை இறையெனக் கருதி போற்றி அவர்களின் கொடையையும் வீரத்தையும் புகழ்ந்து பாடிய மக்கள் உள்ளத்தில் அரசர்களைக் குறித்து ஒரு விழுமிய எண்ணம் உருவாகச் செய்தனர்., அரசர்கள் புலவர்களால் பாடப்பெறுதல் ஒரு பெரும்பேறு எனவும், புலவருக்கு கொடை நேர்தல் மறுமை உலகத்து செலுத்துமெனவும் ஒரு நம்பிக்கையைத் தம் செயல் வழி மக்கள் உள்ளத்தில் வளர்த்தனர் எனவும், இவ்வகையான ஒரு சொல்லப்பெறாத ஒப்பந்தம் வேந்தர், புலவர் ஆகிய இரண்டு இனத்திடையே நிலவியதென்றும் அறிஞர் கருதுவது உண்மையான கருத்துக்கள் யாகும். வேந்தரைக் குறித்துச் சமூகத்தில் ஓர் உயர் எண்ணம் ஏற்படப் புலவர்கள் காரணமாயிருந்தனர். புலவர்களின் வறுமை நீங்க வேந்தர் காரணமாக இருந்தனர். சமுதாயம் புலவர்கள் சான்றோர் என்று மதித்த தன்மையும், கல்வியும் புலமையும் உயர்ந்த தகுதிகளாகப் போற்றிய தன்மையும், அரசர்க்கும் புலவர்க்கும் நெருங்கிய பிணைப்பு ஏற்படக் காரணம் எனலாம்."[50] என்று கு.வெ. பாலசுப்பிரமணியம் வேந்தர்களைப் புலவர்கள் பாடுவதற்குரிய காரணங்களாக எடுத்தியம்புகிறார். மேலும் அவர்,

அரசர்களின் கொடை மடப்பண்பு புலவரால் போற்றற் கூறியதாக இருந்திருக்கிறது. புரவி பூண்ட தேரும், பிடியும் களிறும், பொற்றாமரையும், அணிகலன், பட்டுடையும், தண்ணடையும், குன்றும், ஊரும், நாடும், பத்து நூறாயிரம் பசும்பொன்னும், அரசவாழ்வும், பெற்ற புதல்வன் கொடைப்பொருளில் வழங்கப்பட்டமையினைச் சங்க நூல்களும் பதிகங்களும் காட்டுகின்றன. இவையெல்லாம் சமூக வறுமையைப் போக்க நிகழ்ந்த கொடைச் செயல்கள் இல்லை

மனைவி மகவு ஈனுதற்குரிய மெய் நோவுற்ற நேரம், ஊரவர் விழாவிற்குச் சென்ற பொழுது, கார்ப்பருவ அந்திமாலை, இச்சமயத்தில் ஒருவன் பகலொளியாய் துணையாகக் கொண்டு கட்டில் பின்னிப் பொருளீட்டும் நெருக்கடி நிலையிலிருக்கிறான். இத்தகையோர் மலிந்த சமூகத்தில் பாணர்க்கும் புலவர்க்கும் வழங்கிய செல்வம் சமூகத்தின் வறுமை துடைக்கும் நோக்கத்தில் அளிக்கப்பட்டதன்று என்பதும் அரச இயந்திரம் மக்களின் ஆதரவிற்குரியதாக இயங்க வேண்டுதற்குப் புலவர் ஒரு விளம்பர வாயில் என்ற கருத்தின் அடிப்படையில் நிகழ்ந்தது இக்கொடை என்பதும் அறியப்படும்.

சங்க இலக்கியத்தில் கேட்கப் பெறும் எல்லாக் கொடை நிகழ்ச்சிகளுக்கும் அன்பும் அருளும் அடிப்படை எனக்கூறற்கில்லை. வறுமைத்துயர், என்ற அளவில் புலவர்களின் அவல வாழ்க்கை பலபடியாக வர்ணிக்கப்படுகிறது. உடும்பு உரித்தது போன்ற என்பெழுந்த விலா பக்கம், கூதிர்ப்பருந்தின் சிறகு போலக்கிழிந்த ஆடை, புற்கென்ற பார்வை ஆகியன புலவர்க்கும் பாணர் முதலிய கலைஞர்க்கும் உரியனவாக உரைக்கப்படும். இத்தகையோரின் வறுமைத் துயரம் துடைத்தல் அரசர்களின் கடமை என அறிவுறுத்தப்படுகிறது. ஆகவே, போர் நிகழ்ச்சிகளைப் போலவே கொடை நிகழ்ச்சிகளும் பெரும்பான்மையும் புகழ் விருப்பத்தால் செய்யப் பட்டனவே என்பது விளங்கும்.”[51] என்று கு.வெ.பாலசுப்பிரமணியம் குறிப்பிடுகிறார். இவரின் கருத்துப்படி புலவர்கள் வேந்தனின் புகழையும், அவனது ஆட்சியின் சிறப்பையும் எடுத்துப்பரப்பி, வேந்தனது ஆட்சிக்கு உறுதுணையாகச் செயல்பட்டனர் என்பதும் அவர்களுக்கே, வேந்தர் பொருள் கொடுத்தனர் என்பதை உணரலாம். புலவர்களின் புகழ் மயக்கத்திற்காகவும் தம்மைப் பற்றி மக்களிடையே நல்மதிப்பைப் பெருக்கச் செய்வதற்காகவும் வேந்தர்கள் புலவர்களுக்குப் பொன்னையும் பொருளையும் வாரி வழங்கியுள்ளனர் என்பதை இதன் மூலம் அவதானிக்கலாம்.

### 4.7 புலவராக விளங்கிய வேந்தர்

சங்ககால வேந்தர். நல்ல புரவலராக மட்டுமின்றி சிறந்த புலவர்களாகவும் திகழ்ந்துள்ளனர். வேந்தர் ஆட்சித்துறைக்கு வேண்டிய அறிவைப் பெற்றதோடு, இலக்கிய இலக்கணங்களிலும் தேர்ந்த புலமை பெற்றிருந்தனர். சங்கப் புலவர்களைப் போலச் சிறந்த அக, புறப்பாடல்களை இவர்கள் இயற்றியுள்ளனர். இவர்களது பாடல்கள் எட்டுத்தொகை நூல்களில் இடம்பெற்றுள்ளது சிறப்புக்குரியதாகும்.

#### 4.7.1 கணைக்கால் இரும்பொறை

மேற்கு கடற்கரையில் அமைந்துள்ள தொண்டி, மாந்தை, நறவு ஆகிய பேரூர்களைத் தலைநகரங்களாகக் கொண்டு, ஆட்சி செலுத்தியவன் கணைக்கால் இரும்பொறை என்னும் சேர வேந்தன். இவன் பாடிய பாடலொன்று புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. மனிதருக்கு இருக்க வேண்டிய மானப் பண்பை இவன் தன் பாடலில் விளக்கியுள்ளான்.

சேரமான் கணைக்கால் இரும்பொறை சோழன் கோச்செங்கணானுடன் கழுமலம் என்ற நகரை அடுத்துள்ள திருப்போர்ப்புறம் என்னுமிடத்தில் போரிட்டுத் தோற்றான். வென்ற சோழன், தோற்ற சேரனைக் குடவாயிற் கோட்டத்தில் சிறை வைத்தான். சிறையில் சேரமான் கேட்ட குடிநீரைச் சிறைக் காவலர் காலந்தாழ்த்தித் தந்ததினால் அந் நீரைப் பருக அவனுடைய மான உணர்ச்சி இடம் தரவில்லை. மானமிழந்து வாழ்வதைவிட மாள்வதே மேல் எனக் கருதிய சேரமான், தன் உள்ளத்து உணர்ச்சியை ஒரு பாட்டாக்கினான். குழந்தை இறந்து பிறந்தாலும், தசைப் பிண்டமாகப் பிறந்தாலும் அது துறக்கம் புகவேண்டி, அதனை வாளால் வெட்டிப் புதைப்பர். போரில் பகைவரின் வாளால் மடியாது, இச்சிறையினில் சங்கிலியால் கட்டப்பட்டு நாய்போல் நான் துன்புறுத்தப்படுகிறேன். இந்நிலையிலும் என் நீர் வேட்கையை அடக்காது, சிறைக் காவலரை இரந்து வேண்டுமளவிற்கு உறுதியற்றவன் ஆனேன் எனத் தன் நிலைக்கு இரங்கி, அவன் பாடிய பாடல் புறநானூற்றில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதனை,

“குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும்,

...................................................................

தாம் இரந்து உண்ணும் அளவை

ஈன்மரோ, இவ் உலகத்தானே” (புறம். 74)

என்ற அடிகளால் உயத்துணரலாம்.

#### 4.7.2 பாலை பாடிய பெருங்கடுங்கோ

பெருங்கடுங்கோ வஞ்சி நகர்க்கண் இருந்து ஆட்சி புரிந்தவன் ஆவான். வேந்தர்க்கு அவர்தம் வீரத்தின் அடிப்படையில் பட்டப்பெயர் அமைய, இவ்வேந்தனுக்குப் புலமைச் சிறப்பால் பெயர் அமைந்தது அவரின் இலக்கியத்திறத்தைக் காட்டுகிறது. “ஐந்திணைகளுள் ஒன்றான பாலைத் திணைக்குரிய

முதல், கரு, உரிப்பொருள்களை ஊன்றி உணர்ந்து, உயர்ந்தோர் போற்றப் பாடியுள்ள சிறப்பால், பாலை பாடிய எனும் அடை அவன் பெயரோடு சேர்ந்தது."[52] என பெருங்கடுங்கோவின் அடைப் பெயருக்குக் காரணம் தருகிறார் அரங்க. இராமலிங்கம். இவர் பாடிய அறுபத்தெட்டு பாடல்கள் எட்டுத்தொகையில் இடம்பெற்றுள்ளது. சங்க கால வேந்தர்களில் அதிகமான பாடிய வேந்தர் இவரே ஆவார். இவரது பாடல்கள் கலித்தொகையில் பாலைக்கலியாகிய முப்பத்தைந்து பாடல்களும், அகநானூற்றில் பன்னிரண்டு பாடல்களும் குறுந்தொகையில் பத்தும் நற்றிணையில் பத்தும் புறநானூற்றில் ஒன்றும் இடம்பெற்றுள்ளன.

வேந்தனாய் இருந்து ஆட்சி புரிந்தமையால் அரசியல் நுட்பங்களையெல்லாம் நன்கு உணர்ந்தவன். நாட்டின் ஆட்சி மேன்மையுறுவது அரசனைக் காட்டிலும் அமைச்சனையே பொறுத்துள்ளது. அமைச்சன் நல்லவனாக இருப்பின், ஆட்சியும் நன்றாக இருக்கும், அரசனும் நல்லவனாக விளங்குவான். அமைச்சன் தீயவனாக இருப்பின், நல்லாட்சியும் தீதாகிவிடும். அதனால், அந்நாட்டுக் குடிகளிடமிருந்து பொருள் பறிக்கப்படும். இத்தகைய நாட்டினுள் பகையரசர் படை எளிதில் புகுந்துவிடும் எனும் அரசியல் நுட்பத்தைப் பாலைக்கலியில் பெருங்கடுங்கோ எடுத்துரைக்கிறார். இதனை,

"நடுவு இகந்து ஒரீஇ நயன் இல்லான் வினை வாங்க,

கொடிது ஓர்த்த மன்னவன் கோல் போல, ஞாயிறு

கடுகுபு கதிர் மூட்டிக் காய் சினம் தெறுதலின்," (கலி. 8:1-3)

என்ற பாடலின் வாயிலாக அறியலாம்.

### 4.7.3 மருதம் பாடிய இளங்கடுங்கோ

பாலை பாடிய பெருங்கடுங்கோ போன்று மருதத்திணையைப் பாடியமையால். இவன் மருதம் பாடிய இளங்கடுங்கோ என அழைக்கப்பட்டான். இவன் பாடியவை, மூன்று பாடல்கள். இவன் வரலாற்றுணர்வு மிக்கவனாகக் காணப்படுகிறான். இவன் சேர வேந்தனாக இருந்தும், கருவூர்ப் பறந்தலைப் போரில் சேரனையும், பாண்டியனையும் வெற்றி கொண்ட சோழனின் வெற்றியைக் குறித்துள்ளான். மருதத்திணையிலமைந்த பாடல் ஒன்று இவனது நுட்பமான அறிவைப் புலப்படுத்துகிறது.

தன் மனைவியைப் பிரிந்து, பரத்தையோடு நெடுநாள் வாழ்ந்திருந்தான் தலைவன். அவளை விட்டு ஒருநாள் மட்டும் சற்றுப் பிரிந்தான். அப்பிரிவினைப் பொறாத பரத்தை ஊரெல்லாம் அவனைத் தேடிச் சினந்தாள். இதைக்கண்ட தோழி தலைவனிடம் இல்லத்தில் ஆற்றியிருக்கும் தலைவியின் சிறப்பையும், பரத்தையின் இயல்பையும், இழியையும் எடுத்துரைத்து அவனைத் திருத்தும் முயற்சியில் ஈடுபடுவதாக இப்பாடல் அமைகிறது. இதனை,

"................தன்முகத்

தெழுதெழில் சிதைய வழுதன ளேங்கி

வடித்தென வுருத்த தித்திப் பல்லூழ்

நொடித்தெனச் சிவந்த மெல்லிரற் றிருகுபு

கூர்முனை மழுகிய வெயிற்றள்

ஊர்முழுது நுவலுநிற் காணிய சென்மே" (அகம். 176:21-26)

என்ற பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. இவன் பாடிய மூன்று பாடல்களும் மருதத்திணை ஒழுக்கத்தில் அமைந்து, பரத்தையர் பிரிவின் இழிவைச் சுட்டுகின்றன.

### 4.7.4 முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன்

பெருஞ்சோற்றுதியன் சேரலாதன் வழிவந்த சேர வேந்தருள் இவனும் ஒருவன். இவன் பாடிய நெய்தல் திணைப் பாட்டொன்று அகநானூற்றில் இடம் பெற்றுள்ளது. வலைஞர்தம் அன்றாட வாழ்க்கையினை விளக்கும் பாடலாக அது அமைந்துள்ளது. வலைஞர் கடலிடையே கலங்கொண்டு செல்வர். வலையினாலே மிகுதியான மீன்களைப் பிடிப்பர். பிடித்தவற்றை இரவலர்களுக்கு வழங்குவர். எஞ்சியவற்றைப் பல கூறுகளாக்கி விற்பர். கரையின் கண் குவிந்திருக்கும் மணல் மீது உறங்குவர் என வலைஞரின் அன்றாட வாழ்க்கையினை,

"நெடுங் கயிறு வலந்த குறுங் கண் அவ் வலை,

கடல் பாடு அழிய, இன மீன் முகந்து,

.................................................................

தண் நறுங் கானல் வந்து, நும்

வண்ணம் எவனோ? என்றனிர் செலினே?" (அகம். 30)

இப்பாடல் விளக்குகிறது.

### 4.7.5 குளமுற்றுத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

உறையூரை ஆண்ட சோழ வேந்தருள் சிறக்க வாழ்ந்தவன் கிள்ளிவளவன். அவன் வீரனாகவும், வள்ளலாகவும் நன்னெஞ்சம் கொண்ட வேந்தனாகவும் விளங்குகிறான். தன்னைப் பல புலவர்கள் வாழ்த்தும் சிறப்பினைப் பெற்றிருந்த சோழன், தன் ஆட்சியின் கீழ் அமைந்த, குறுநில மன்னனான சிறுகுடிப் பாணனை வாழ்த்தும் கிள்ளியின் பண்பு போற்றத்தக்கது.

காவிரிக் கரையில் சிறுகுடில் என்னும் ஊரில் பாணன் என்னும் வள்ளல் வாழ்ந்து வந்தான். இப் பாணனின் வள்ளல் தன்மையைக் கிள்ளிவளவன் பின்வருமாறு பாராட்டுகிறான். பழமரத்திலே பறவை இனம் ஒலித்தாற்போல ஊன் உண்பார் ஆரவாரம் கேட்கின்றது. எறும்புகள் முட்டைகளைக் கொண்டு மேடு நிலத்தை நோக்கிச் செல்வது போல, பெரிய சுற்றத்தோடும் கூடிய பிள்ளைகள், கையில் சோறு பெற்றுக்கொண்டு போகிறார்கள். இவ்வாறு எளியவருக்கும் மருத்துவன் எனப் பாராட்டி, அவனது இல்லத்தைப் 'பசிப்பிணி மருத்துவன் இல்லம்' எனப் புகழும் அவனது பண்புடைமை போற்றத்தக்கது. இப்பாடலில் பாணனைப் பாராட்டுவதோடு அமையாது, 'யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய' எனக் வாழ்த்தவும் செய்கிறான்.

"யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய!

பாணர்! காண்க, இவன் கடும்பினது இடும்பை

யாணர்ப் பழு மரம் புள் இமிழ்ந்தன்ன

..........................................................................

பசிப்பிணி மருத்துவன் இல்லம்

அணித்தோ? சேய்த்தோ? கூறுமின், எமக்கே." (புறம். 173)

இப்பாடலின் மூலம் மூவேந்தருள் புரவலனைப் புகழும் புரவலானாக் கிள்ளி வளவன் விளங்குவதை அறிய முடிகிறது.

### 4.7.6 கோப்பெருஞ்சோழன்

கோப்பெருஞ் சோழன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தவன். இவன் புறநானூற்றில் மூன்று பாடல்களும் குறுந்தொகையில் நான்கு பாடல்களும் பாடியுள்ளான். இவனைப் பாராட்டிய புலவர்கள் அனைவரும், இவனது ஆட்சிச் சிறப்பை விட, இவனது பண்பு நலத்தையே போற்றி உரைத்துள்ளனர். புலவர்கள் பெரிதும் விரும்பி இவனிடம் நட்பு பூண்டனர். இவன் வடக்கிருந்த பொழுது, புலவர் பலர், இவனுடன் வடக்கிருந்த உயிர்துறந்தனர். புலவர்கள் தொடர்பால் இப்பெருவேந்தனும் பெரும்புலவனாக விளங்கியுள்ளான். தன்னுடன் வடக்கிருக்கப் பிசிராந்தையார் வருவார் என இவன் உரைத்த புறப்பாடல்கள் இரண்டும், புலவர் பால் இவன் கொண்டிருந்த நம்பிக்கையைக் காட்டுகிறது.

தன் மக்களின் மாறுபட்ட செய்கையினால், ஆட்சிப் பொறுப்பைத் துறந்த கோப்பெருஞ்சோழன் வேந்தனாக ஆட்சிப் பொறுப்பை மட்டும் கவனியாது, புலவர்களிடம் பழகி வாழ்வியல் உண்மைகளையும் உணர்ந்தவனாகத் திகழ்ந்துள்ளான். யானை வேட்டைக்குச் சென்றவன் எளிதாக யானையைப் பெற்றுவிடலாம். குறும்பூழ் வேட்டைக்குச் சென்றவன் அது பெறாமலும் திரும்பலாம் எனவே, செய்த செயலின் பயனைப் பாராது உயர்ந்த குறிக்கோளுடையவராக விளங்க வேண்டும். அப்படி வாழ்ந்தால் நிலைத்த புகழைப் பெறலாம். என்பதை,

“யானை வேட்டுவன் யானையும் பெறுமே
குறும்பூழ் வேட்டுவன் வறுங் கையும் வருமே:
அதனால், உயர்ந்த வேட்டத்து உயர்ந்திசினோர்க்கு” (புறம். 214:3-6)

என்ற பாடலில் சிறப்பாக எடுத்துரைக்கிறான். நுட்பமான மன உணர்வுகளை வெளிப்படுத்தும் அகத்துறையமைந்த பாடல்களையும் கோப்பெருஞ்சோழன் பாடியுள்ளான். தலைவன் பொருள்வயிற்பிரியக் கருதியதை அறிந்த தோழி, அதனைத் தலைவிக்கு உணர்த்துகிறாள். அதனைக் கேட்ட தலைவி, அருளையும் அன்பையும் அறவே மறந்துவிட்டு பொருள்வயிற்பிரிதல் அற உள்ளம் உடையார்க்கு இயலாது, அருளும் அன்பும் அற்ற தன்மை உரம் பெற்ற உள்ளத்தினர்க்கே உண்டு. நம் தலைவர்க்கு அத்தகைய உரம் பெற்ற உள்ளம் உண்டாயின், அவர் அன்பும் அருளும் அற்றவராயின் பொருள் வயிற் பிரியட்டும் என அகத்துறையில் அமைந்த சிறந்த பாடலையும் பாடியுள்ளான்.

"அருளும் அன்பும் நக்கீத் துணைதுறந்து

பொருள்வயிற் பிரிவோர் உரவோர் ஆயின்

உரவோர் உரவோர் ஆக

மடவம் ஆக மடந்தை நாமே" (குறுந். 20)

என்பது அகத்துறையில் அமைந்த கோப்பெருஞ்சோழனின் பாடலாகும்.

**4.7.7 நல்லுருத்திரன்**

கலித்தொகையில் முல்லைக்கலியைப் பாடிய பெரும்புலவன் நல்லுருத்திரன் என்னும் சோழ வேந்தன் ஆவான். முல்லைத்திணை குறித்து இவன் பாடிய கலித்தொகைப் பாடல்கள் பதினேழும், ஒரு புறப்பாட்டும் இவன் பாடியவை ஆகும். முல்லை நிலச் சிறப்புகளையும், பழக்க வழக்கங்களையும் தம்பாடலில் விளக்கியுள்ளான். ஏறுதழுவல் விழாக்காலத்தே தன்னைக் கைப்பற்றத் தவறி, தன்முன் விழுந்த ஆயர் இளைஞன் ஒருவனை முட்டித்தாக்க முனையாது மீளுகின்ற காளைக்குப் போர்க்களத்தே வாள் பெற்றிருந்தும் வெற்றி கொள்ளாது, தன் கையிலகப்பட்ட வீரனை அவனது மறமின்மை காரணமாகக் கொல்லாது உய்ந்து போகவிடும் மறவனைக் காளைக்கு உவமையாகக் கூறியுள்ளதை,

"கோள்வழுக்கித் தன்முன்னர் வீழ்ந்தான்மேற் செல்லாது

மீளும் புகரேற்றுத் தோற்றங்காண் மண்டமருள்

வாளகப் பட்டானை யொவ்வா னெனப்பெயரு

மீளி மறவனும் போன்ம்" (கலி. 104:47-50)

என்ற பாடலில் அறியலாம். இப்பாடல் நல்லுருத்தின் மறப்பண்பை விரும்பும் மாண்புடையவன் என்பதை விளக்குகிறது. முற்றிய விளை வயலைக் கண்ணுற்றதும், பிறர் உழைப்பில் விளைந்த நெற்கதிர்களைத் திருடிச் சென்று, தன் வளையுள் சேர்க்கும் இயல்புடையது எலி. இவ்வாறு பிறர் செல்வத்தையும் தமக்கென இறுகப்பற்றிச் சேமித்துப் பதுக்கி வைத்து வாழும் இயல்புடையோர் பலரிடையே கொடிய காட்டுப் பன்றி தன் இடப்பக்கத்தே தானே இறந்து வீழ்ந்து கிடப்பினும், அதனை உண்ணாது கொன்றுண்ணும் இயல்புடைய புலிபோல், குறிக்கோள் மனம் கொண்டோர் உலகில் உள்ளனர். அவர்கள் உறுதியான உள்ளமும் கொள்கை

உரமும் கொண்டவர்கள். கொண்ட கொள்கையிலிருந்து மாறுபட்டு நடப்பதால் வரும் பொருள் எப்படிப்பட்டதாக இருப்பினும், அதனை அவர்கள் விரும்பமாட்டார்கள். அப்படிப் பட்ட மனவலிமையும், கொள்கை உரமும் கொண்டவர்களின் பழக்கமே வேண்டும்.

கடுங்கட் கேழ லிடம்பட வீழ்ந்தென:

அன்றவ னுண்ணா தாகி வழிநாட்

........................................

துரனுடை யாளர் கேண்மையொ

டியைந்த வைக லுளவா கியரே" (புறம். (192:6-12)

என்னும் நல்லுருத்திரனின் குறிக்கோள் உள்ளம் கருதத்தக்கது. வேந்தனாக இருந்து ஆட்சி செய்தமையினால், தன்னைச் சுற்றியிருப்போரின் மன இயல்புகளை நன்றாக உணர்ந்தவன் என்பதை இப்பாடல் சுட்டுகிறது.

**4.7.8 அறிவுடை நம்பி**

அறிவிற் சிறந்து விளங்கியமையால், இவன் அறிவுடை நம்பி என அழைக்கப்பெற்றிருக்கலாம். இவன் பாடிய நான்கு பாடல்கள் தொகை நூலில் இடம் பெற்றுள்ளன. இவனைப்பற்றிய வேறு செய்திகள் அறிந்து கொள்ள முடியவில்லை. இவன் பாடிய பாடலொன்று மக்கட் செல்வத்தின் பயனை உணர்த்துகிறது.

"இம்மை யுலகத் திரையொடும் விளங்கி

மறுமை யுலகமும் மறுவின் றெய்துப

செறுநரும் விழையுஞ் செயிர் தீர் காட்சிச்

சிறுவர்ப் பயந்த செம்ம லோர்" (அகம். 66:1-4)

என இலக்கியங்கள் மக்கட் பேற்றின் சிறப்பினைக் குறிப்பிடுகின்றன. பலகோடி செல்வத்தைக் குவித்து வைத்து, அச்செல்வத்துப் பயனாம் பலரோடு இருந்து பகுத்துண்ணும் பெரு வாழ்வு பெற்ற மிகப்பெரிய செல்வர்க்கு மக்கட்பேறு இல்லாதாயின், அவர்தம் பெருவாழ்வு, பயனுடைய பெருவாழ்வு எனப் போற்றப்படமாட்டாது.

"படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்

உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்

.......................................

மயக்குறு மக்களை இல்லோர்க்குப்

பயக் குறை இல்லை தாம் வாழு நாளே." (புறம். 188)

என அறிவுடை நம்பி பாடியிருப்பது, எண்ணி இன்புறத்தக்கதாகும்.

**4.7.9 ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்**

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது. சிலப்பதிகாரம் தவிர, ஏனைய பழந்தமிழ் நூல்களில் இவனைப்பற்றிய குறிப்புகள் இல்லை. இவன் பாடிய பாடலொன்று புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. புறநானூற்றில் நெடுஞ்செழியன் என்ற பெயரில் மூவர் இடம் பெற்றுள்ளனர். இவனது ஆரியப் படையெடுப்பைச் சிறப்பித்து, ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் எனக் குறிப்பிட்டனர். பாண்டிய வேந்தருள் காலத்தால் பிற்பட்டவன். கல்வியின் இன்றியமையாமையை உணர்ந்தவன். தன்னை, அரசன் முதலிய அனைவராலும் பாராட்டப்படும் சிறப்பைக் கல்வியினால் மட்டுமே பெறமுடியும் எனவே, இச்சிறப்புக்குரிய கல்வியை எப்பாடுபட்டேனும் கற்க வேண்டும் என்பதை,

"உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்

பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே

.......................................

கீழ்ப்பால் ஒருவன் கற்பின்,

மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே." (புறம். 183)

என்னும் பாட்டில் எடுத்துரைக்கிறான். தன் நாட்டு மக்கள், அறிவுடையவர்களாக விளங்க வேண்டும் என்று விரும்பும் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் உள்ள வேட்கை இப்பாட்டில் புலனாகிறது.

**4.7.10 ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்**

பூதப்பாண்டின் அறிவும், ஆற்றலும், ஒழுக்கமும் நிரம்பியவனாகவும். நண்பர்களைப் போற்றும் பண்புடையவனாகவும் இருந்துள்ளான். மாவன், ஆந்தை, அந்துவஞ்சாத்தன், ஆதன் அழிசி, இயக்கன் ஆகியோர் பூதப் பாண்டியனுக்கு நண்பராக இருந்துள்ளனர். மனைவி கோப்பெரும் பெண்டின்பால் பேரன்புடையவனாகவும் ஒழுக்கத்தை உயிரினும் மேலாகக் கருதுபவனாகவும் விளங்கியுள்ளான். இதனை, இவன் கூறிய வஞ்சினத்திலிருந்து அறிய முடிகிறது. இவன் பாடிய இரண்டு பாடல்கள் அகநானூற்றிலும் புறநானூற்றிலும் இடம் பெற்றுள்ளன. இவன் திதியன் என்பானுடன் கொண்டிருந்த நட்பினை,

"......................................பொருநர்

சேல்சமங் கடந்த வில்கெழு தடக்கைப்

போதியிற் செல்வன் பொலந்தேர்த் திதியன்" (அகம். 25:18-20)

என பாராட்டியுரைப்பதன் மூலம் அறியமுடிகிறது. பாண்டியன் குடியில் பிறந்ததைப் பெருமையாகக் கருதுபவன் என்பதை,

"முன்பதை காக்கு நீள்குடிச் சிறந்த

தேன்புலங் காவலி னொரீஇப் பிறர்

வன்புலங் காவலின் மாறியான் பிறக்கே" (புறம். 71:17-19))

என்ற வஞ்சின மொழியின் மூலம் அறியலாம். வேந்தர் குடிகளைப் புலவர்கள் வாழ்த்துதல் மரபு. தன் குடியின் பெருமையினைத் தானே எடுத்துக்கூறி, இத்தகு சிறப்புமிகு குடியில் மீண்டும் பிறக்க விரும்பும் இவன் வேட்கை குறிப்பிடத்தக்கது.

**4.7.11 கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி**

கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி சிறந்த புலமையாளனாகவும் சிந்தனையாளனாகவும் விளங்குகிறான். இவன் பாடிய பாடல்கள் பரிபாடலில் ஒன்றும், புறநானூற்றில் ஒன்றும் இடம் பெற்றுள்ளன. உலகில் உயிர்கள் தோன்றுகின்றன, அழிகின்றன, மக்கள் பிறக்கின்றனர், மாள்கின்றனர் ஆனால் உலகு மட்டும் அழியாது நின்று நிலை பெறுகின்றது. இவ்வாறு உலகியல் அழியாது உயங்குவதற்குக் காரணமாக இருக்கும் சான்றோரின் இயல்புகளைக் குறிப்பிடுகின்றான். இந்திரருக்குரிய

அமுதமே கிடைப்பதாயினும், அது தமக்கு இனியது எனக் கருதி, தாமே தனித்து உண்ணாதவர், சினமற்றவர், பிறர் அஞ்சும் துன்பத்திற்குத் தாமும் அஞ்சி, அது தீர்த்தற் பொருட்டுச் சோம்பியிருக்கும் இயல்பு இல்லாதவர், புகழ் எனின் உயிரையும் கொடுப்பவர், பழி எனின், அதனால் உலகம் முழுவதும் பெறினும் கொள்ளாதவர், தமக்கென எதையும் செய்து கொள்ளாதவர், பிறக்காக உண்மையாக உழைக்கும் இயல்பு உடையவர். இப்பண்புகளை உடையவர் சிலராவது இருப்பதனால்தான் என இவ்வுலகம் நிலைத்திருக்கிறது. இதனை,

"உண்டால் அம்ம, இவ் உலகம் இந்திரர்

அமிழ்தம் இயைவது ஆயினும், "இனிது" எனத்

தமியர் உண்டலும் இலரே முனிவு இலர்

...................................................................

தமக்கு என முயலா நோன் தாள்,

பிறர்க்கு என முயலுநர் உண்மையானே." (புறம். 182)

என்ற பாடலின் மூலம் எடுத்துரைக்கிறார். தன்னைத் தனியே விடுத்துப் பொருள் தேடிப் போயிருக்கும் தலைவனை நினைத்து வருந்தும் தலைவி தோழியிடம் 'சென்ற தலைவரைத் தேடிப் பின் சென்ற என் உள்ளம். அவர் செய்யும் வினைக்குத் துணையாய் நின்று, வினையை முற்றுவித்து அவருடன் ஒருங்குவர எண்ணியுள்ளதோ? அல்லது, அவர் தனக்கு அருள் செய்யாமையால் மீண்டும் அவன் வந்து, அது பிரிந்து செல்லுங்கால் இருந்த பண்டை நலம் அழியப் பசலைப் பாய்ந்து விளங்கும் என் உடலைக்கண்டு, இவள் நம் தலைவி அல்லள். அயவாள் ஒருத்தி என எண்ணி வருந்தி என்னைத் தேடி வேற்றிடம் சென்று விடுமோ, என்று புலம்புவதாக

"பல எனின், ஆங்கு அவை பலவே: பலவினும்,

நிலவரை ஆற்றி, நிறை பயன் ஒருங்கு உடன்

.............................................................

மலர் அகல் மார்பின் மை படி குடுமிய

குல வரை சிலவே: குல வரை சிலவினும்" (பரி. 15:5-10)

அகத்திணைப் பாடல் ஒன்றையும் பரிபாடலில் பாடியுள்ளான்.

### 4.7.12 தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெழுஞ்செழியன்

பாண்டியன் நெடுஞ்செழியன் ஆலங்கானத்தில் இருபெரு வேந்தரையும் எழுபெரு வேளிரையும் வெற்றி கொண்ட சிறப்பின் காரணமாகத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என அழைக்கப் பெற்றான். இவன் பாடிய வஞ்சினப் பாடல் ஒன்று புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. பழந்தமிழ் வேந்தருள் மிகப்பல புலவர்களின் பாராட்டைப் பெற்ற சிறப்புக்குரியவன். பத்தொன்பது புலவர்கள் இவனது வெற்றிச் சிறப்பையும், பண்பு நலன்களையும் போற்றிப் புகழ்ந்துள்ளனர். புலவரைப் போற்றுவதிலும், தனி மனித ஒழுக்கத்திலும், தன் குடிமக்களைப் பேணுவதிலும் மிகுந்த நாட்டமுடையவன் என்பதை இவன் உரைத்த வஞ்சினத்தால் அறியலாம்.

"ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி

மூாங்குடி மருதன் றலைவ னாக

உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்

புலவர் பாடாது வரைகவென் னிலவரை" (புறம். 72:13-16)

என்னும் கூற்றிலிருந்து புலவர் கூறும் புகழ்ச்சியைப் பெரிதாக இவன் கருதினான் என அறியலாம். பத்துப்பாட்டுள் மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை இரண்டும் இவன் புகழ் எடுத்துரைக்கும் நூல் களாகும்.

### 4.7.13 முடத்திருமாறன்

இவன் பாடிய இரண்டு பாடல்கள் நற்றிணையில் இடம் பெற்றுள்ளன. கபாடபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்து இடைச் சங்கத்தைக் கட்டிக்காத்த ஐம்பத்தொன்பதின்மருள் இறுதியில் வாழ்ந்தவன். இப்பொழுதுள்ள மதுரையில் கடைச் சங்கத்தைத் தோற்றுவித்த பெருமைக்குரியவன் எனச் சிலப்பதிகாரமும், இறையனார் களவியல் உரையும் இவனைக் குறிப்பிடுகின்றன. சேரன் செங்குட்டுவன் மலையின் இயற்கை எழிலையும் கண்ணொளி மறையும் பனிப் படரும் மாரிக்காலத்துப் பேரிருளையும் சிறப்பாக முடத்திருமாறன் பாடியுள்ளான்

"............ குட்டுவன்

குடவரைச் சுனைய மாயிதழ்க் குவளை" (நற். 105:7-8)

"………. மின்னுவசிபு

அதிர்குரல் எழிலி முதிர்கடனி தீரகச்

கண்டுர்பு விரநித கனையிருள் நடுநாள்" (நற். 228:1-3)

என இயற்கை நலம் தோன்றப் பாடியுள்ளான். முடத்திருமாறன் சேரனின் மலையினைப் புகழ்ந்துள்ளமை போற்றத்தக்கது. இவ்வாறாக நாடாளும் வேந்தர்களும் தாம் கொண்ட தமிழுணர்வால் சிறந்த புலவர்களாகவும் விளங்கிமையைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

**முடிவுரை**

சங்க இலக்கியங்கள் ஆட்சித் தலைவர்கள் வேந்தன், மன்னன், அரசன், இறை அல்லது இறைவன், காவலன், கோ எனப் பல்வேறு பெயர்களால் குறிக்கப்பெறுகின்றனர். இதில் மன்னர், வேந்தர் ஆகிய சொல்லாட்சியே அதிகமாக இலக்கியங்களில் கையாளப்பட்டுள்ளது.

வேந்தர் என்ற சொல்குறித்து அறிஞர்கள் பல காரணங்கள் கூறியுள்ளனர். அதில் முடி வேய்ததால் வேந்தர் என்ற சொல் வந்ததது என்பது பொருத்தமானதாக அமைகிறது. வேந்தர்களுக்கும் மன்னர்களுக்கும் மிகுந்த வேறுபாடு காணப்படுகிறது. ஆட்சி பரப்பில் குறைந்த நிலப் பரப்பை உடையவர்களை மன்னர்கள் என்றும் பெரும் பரப்பை ஆண்டவர்கள் வேந்தர்கள் என்றும் சுட்டும் மரபு சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளது.

தமிழகச் சூழலில் சேர, சோழ, பாண்டியர் மரபினரை வேந்தர்கள் என்றழைக்கும் மரபு நிலவி வந்துள்ளது. அவர்களில் சில காலம் ஒற்றுமையுடனும் பல காலம் போர் பூசலில் ஈடுபட்டு வந்துள்ளமையும் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்பகின்றன.

மூவேந்தர்களின் ஆட்சிக் காலத்தில் அவர்களது ஆட்சிப் பரப்பு போரிட்டு பெறும் வெற்றிகளின் அடிப்படையில் பல மாறுதல்களைக் கொண்டுள்ளது. மூவேந்தர்களில் தலை நகரங்களும், அரண்மனையும் புலவர்களால் சிறப்பித்துப் பாடப்பட்டுள்ளன.

மூவேந்தர்களின் அரசு சின்னங்களாகக் கொடி, அரசுப் பொறி, குடை, முரசு, அரசுக் கட்டில், படை, வாள், முடி, தார், செங்கோல், கடிமரம் போன்றவை புலவர்களால் போற்றிப் பாடப்பட்டுள்ளன.

வேந்தர்களின் ஆட்சிப் பொறுப்பில் சிறந்து விளங்கியவர்களுக்குக் காவிதி, ஏனாதி, எட்டி போன்ற சிறப்புப் பட்டங்கள் வழங்கப்பட்டுள்ளன. அதில் காவிதி பட்டம் வேளாண் செய்பவர்க்கும் ஏனாதி பட்டம் இராணுவ தலைவர்களுக்கும் வழங்கப்பட்டுள்ளது.

வேந்தர்களின் அவைக் களத்தில் வேந்தர்களுக்கு அறிவுரை வழங்க ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் இருந்துள்ளது. இத்தகைய குழுக்களில் இருந்த ஒற்றர், தூதுவர், அமைச்சர்கள் போன்றவர்களின் பணி முக்கியமானதாக அமைந்துள்ளது.

வேந்தர்கள் நால்வகைப் படைகளான யானைப்படை, குதிரைப் படை, தேர்ப்படை, தூசிப்படை ஆகியவற்றைக் கொண்டு சிறந்த போர் வேந்தராகத் திகழ்ந்துள்ளனர். மேலும், சேரர்கள் கப்பற்படை என்னும் புதிய வகைப் படை கொண்டு பல இடங்களை வெற்றிப் பெற்றதைப் பதிற்றுப்பத்து இயம்புகிறது.

வேந்தர்கள் அவையில் அந்தணர்களுக்கென்று சிறப்பிடம் தரப்பட்டுள்ளது. புரோகிதர்களாக அவர்கள் அவையில் இடம் பெற்றிருந்தனர். அவர்கள் யாகம் நடத்துவதற்காகப் பெரும் பொருட்களை வேந்தர்கள் செலவிட்டுள்ளனர். வேந்தர்களாக இருந்த புலவர்களுக்குப் பெருமளவில் பொன்னும் பொருளும் வழங்கப்பட்டுள்ளது. சில அந்தணப் புலவருக்காகத் தன் மகனையும் அரச பதவியையும் பரிசாகக் கொடுக்குமளவிற்கு அந்தணர்கள் சிறந்து விளங்கினர். வேத மரபும் வேந்தர்கள் ஆட்சியில் சிறந்து விளங்கிற்று.

வேந்தர்களின் ஆட்சியில் புலவர்களுக்குச் சிறப்பிடம் தரப்பட்டுள்ளது. புலவர்கள் அரசு இயந்திரத்தின் செயல்பாடுகளை மக்களிடையே கொண்டு சேர்க்கும் விளம்பர வாயில்களாகச் செயல்பட்டுள்ளனர். அதனால், புலவர்களில் வறுமை வேந்தர்களால் போக்கப்பட்டுள்ளது. புலவர்களுக்கும் வேந்தர்களுக்குமிடையே சிறந்த நட்பு தோன்றியுள்ளது. அந்த நட்பானது உயிரக் கொடுக்குமளவில் இருந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

புலவர்களின் கவித்திறனுக்கு ஏற்றவாறும் அவர்களின் விருப்பத்திற்கு ஏற்பவும் பல்வேறு பொருட்கள் பரிசுகளாக வழங்கப்பட்டுள்ளன. புலவர்கள் தான்

பெறும் பரிசுக்காக மட்டும் வேந்தரை அணுகாமல் அவர்கள் செய்யும் தவறுகளைத் துணிச்சலோடு எடுத்துரைக்கும் மனத்துணிவோடும் செயல்பட்டுள்ளனர்.

வேந்தர்களின் அவையில் அமைச்சர்களும் இன்ன பிறரும் அறிவுரை வழங்கத் தவறும் பட்சத்தில் மக்களின் பொது நலன் கருதியும் பகை வேந்தர்களின் நலன் கருதியும் வேந்தருக்கு அறிவுரை வழங்கியுள்ளனர். அதனால் வேந்தர்கள் தான் செய்யும் தவறினால் ஏற்படும் வரலாற்றுப் பிழையிலிருந்து அவர்களைக் காத்துள்ளனர்.

வேந்தர்களில் பலர் புலவராகவும் விளங்கியுள்ளனர். அகத்துறையிலும் புறத்துறையிலும் அறிவுத்திறம் சார்ந்த பல பாடல்களை வேந்தர்கள் இயற்றியுள்ளனர். நாடாளும் திறமை மட்டுமின்றி மக்களுக்குப் பயனுள்ள செய்திகளையும் தன்மான உணர்வுகளையும் தம்பாடல்களில் வேந்தர்கள் பதிவு செய்துள்ளனர்.

## சான்றெண் விளக்கம்

1. அரங்க. இராமலிங்கம் - சங்க இலக்கியத்தில் வேந்தர் ப. 18
2. மேலது. ப. 18
3. சி. பாலசுப்பிரமணியன் - சி.பா நெஞ்சின் நினைவுகள் ப. 69
4. அரங்க. இராமலிங்கம் - சங்க இலக்கியத்தில் வேந்தர் ப. 23
5. தமிழகராதி தொகுதி மூன்று ப. 1736
6. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை - புறநானூறு உரை ப. 197
7. அரங்க. இராமலிங்கம் - சங்க இலக்கியத்தில் வேந்தர் ப. 24
8. மேலது. ப. 25
9. ஞா. தேவநேயன் - பழந்தமிழராட்சி ப. 18
10. சு. வித்தியானந்தன் - தமிழர் சால்பு ப. 23
11. வ. குருநாதன் - சங்க கால அரச வரலாறு ப. 56
12. சி. இலக்குவனார் - இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் ப. 87
13. சு. வித்தியானந்தன் - தமிழர் சால்பு ப. 23
14. மு. இராகவையங்கார் - சேரன் செங்குட்டுவன் ப. 6
15. துரை அரங்கசாமி - சங்ககாலச் சிறப்புப்பெயர்கள் ப. 232
16. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை - சேரமன்னர் வரலாறு ப. 58
17. அ. சிதம்பரனார். - சேரர் வரலாறு ப. 8
18. துரை அ.அரங்கசாமி. - சங்க காலச் சிறப்பு பெயர்கள் ப. 236
19. கௌரா தமிழகராதி ப. 534
20. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை - சேரமன்னர் வரலாறு ப. 22
21. மேலது. ப. 21
22. சீனி வேங்கடசாமி. - கொங்கு நாட்டு வரலாறு ப. 16
23. புலவர் கா.கோவிந்தன் - சேரர் சோழர் பாண்டியர் பக். 103-104
24. அரங்க. இராமலிங்கம் - சங்க இலக்கியத்தில் வேந்தர் ப. 41
25. மா. இராசமாணிக்கனார் - சோழர் வரலாறு ப. 23
26. மயிலை சீனி.வேங்கடசாமி - ரேன் செங்குட்டுவன் ப. 2
27. புலவர் கா.கோவிந்தன் - சேரர் சோழர் பாண்டியர் ப. 216
28. மேலது. ப. 215
29. நக்கீரர் (உ.ஆ) - இறையனார் களவியல் பக். 5-6
30. அடியார்க்கு நல்லார் (உ.ஆ) - சிலப்பதிகாரம் ப. 354
31. ந.சுப்பிரமணியன் - சங்ககால வாழ்வியல் ப. 94

32. அரங்க. இராமலிங்கம் - சங்க இலக்கியத்தில் வேந்தர் ப. 196
33. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - பொருநராற்றுப்படை பா.எண். 115.
34. அரங்க. இராமலிங்கம் - சங்க இலக்கியத்தில் வேந்தர் ப. 203
35. ந.சுப்பிரமணியன் - சங்ககால வாழ்வியல ப. 103
36. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - மதுரைக்காஞ்சி பா.எண் 499
37. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - தொல்காப்பியம், எழுத்ததிகாரம் நூ.எண் 154
38. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - பத்துப்பாட்டு ப. 396
39. அடியார்க்கு நல்லார் (உ.ஆ) - சிலப்பதிகாரம் ப. 156
40. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - தொல்காப்பியம், சொல்லதிகாரம் நூ.எண் 57
41. வெ. கனகசபை - 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம் ப. 109
42. ந.சுப்பிரமணியன் - சங்ககால வாழ்வியல ப. 105
43. அரங்க. இராமலிங்கம் - சங்க இலக்கியத்தில் வேந்தர் ப. 226
44. அருணன் - காலந்தோறும் பிராமணியம் ப. 120
45. ந.சுப்பிரமணியன் - சங்ககால வாழ்வியல ப. 122
46. கு.வெ.பாலசுப்பிரமணியம் - சங்க இலக்கியத்தில் புறப்பொருள் ப.141
47. ம.ரா.போ.குருசாமி - சங்க காலம் ப. II
48. சு. வித்தியானந்தன் - தமிழர் சால்பு ப. 58
49. பரிமேழகர் உரை திருக்குறள் ப. 315
50. கு.வெ.பாலசுப்பிரமணியம் - சங்க இலக்கியத்தில் புறப்பொருள் ப.142
51. மேலது. பக். 143-144
52. அரங்க. இராமலிங்கம் - சங்க இலக்கியத்தில் வேந்தர் ப. 104

# தெகுப்புரை

மனித இனம் தோற்றம் பற்றி மதக்கோட்பாடுகள் இறைவனால் படைக்கப்பட்டவன் என்றும் அறிவியல் விலங்கு பிறந்தவன் என்றும் குறிப்பிடுகின்றன. தொடக்க கால மனிதனிடத்தில் விலங்கியல் குணங்கள் நிறைந்துள்ளதால் மனிதன் காட்டுமிராண்டித்தனமாகவும் பின்னர் குழுவாக இணைந்து வாழும் நிலையிலும் இருந்துள்ளான்.

குழுவாக இணைந்து வாழும் மனித இனத்தினைக் காட்டுமிராண்டி நிலை, அநாகரிக நிலை, நாகரிக நிலை என மூவகையாகப் பகுக்கலாம். கற்களின் பயன்பாடுகளைக் கொண்டு இயற்கைப் பொருட்களை உண்ணும் நிலையைக் காட்டுமிராண்டி நிலையாகவும், விலங்குகளைப் பழக்கத்தில் கொண்டு வந்து உணவுப் பொருட்களைப் பெருக்கும் நிலையை அநாகரிக நிலையாகவும், இயற்கைப் பொருட்களை விளைவித்தலும் கலை உணர்வை வளர்த்தலுமாகிய நிலையை நாகரிக நிலையாகவும் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

தொடக்க காலத்தில் மனிதன் தன் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்வதற்காகவும் இயற்கை சீற்றங்களிலிருந்து தற்காத்துக் கொள்ளவும் குழுவாக இணைந்து செயல்படத் தொடங்கினான். குழுவாக இணைந்து வாழ்ந்த ஆதிமனிதர்கள் தங்கள் குழுக்களுக்குப் பெயரிடும் முறையைக் கொண்டுள்ளனர். அப்பெயர்கள் அவர்கள் வாழும் நிலத்தைச் சார்ந்த விலங்குகள், பறவைகள், மரஞ் செடிக் கொடிகள் ஆகியவற்றைப் பொறுத்து அமைந்துள்ளது. குழுக்களின் தலைமைப் பொறுப்பு முதலில் பெண்களுக்கும் பின்னர் ஆண்களுக்குமானதாக இருந்துள்ளது.

தமிழ்ச் சூழலில் இனக்குழுச் சமூகத்தைத் திணை நிலைச் சமூகமாகச் சங்க இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன. திணை நிலைச் சமூக முறை ஐவகை நிலங்களாகப் பிரிக்கப்பட்டு அவற்றின் வாழ்வியல் கூறுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. சீறூர் மன்னர்களும் முதுகுடி மன்னர்களும் வேளிர்களும் இனக்குழுத் தலைவர்களாக இருந்துள்ளனர்.

தமிழக இனக்குழு வாழ்வானது வேடர் சமூகமாக சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதனை வேடர் சமூக வாழிவிடம், சடங்கு முறைகள், ஆநிரை கவர்தல், நடுகல் வழிபாடு ஆகியவற்றின் மூலம் அறியலாம். ஐந்திணை

வாழ்வில் வேடர்கள், இடையர்கள், பரதவர்கள், உமணர்கள் வாயிலாக இனக் குழு வாழ்வு முறை சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

குறிஞ்சி நில மக்களான வேடர் சமூக வாழ்வு எயினர், ஆறலைக்கள்வர், குறவர்கள் ஆகியவரின் வாழ்வியல் நிகழ்வுகளும் முல்லை நில மக்களான இடையர்கள் நெய்தல் நில மக்களான பரதவர்கள், உணமர்கள் ஆகிய மக்களின் வாழ்வியல் இனக்குழு மக்களின் கடைநிலை வாழ்வியலோடு பொருந்திச் செல்கின்றன.

வாய் மொழி இலக்கியத்தின் தோற்றமாகப் பாணர்களின் காலம் வரையறை செய்யப்படுகிறது. பாணர்களின் வாழ்வியலைச் சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு ஆற்றுப்படை நூல்கள் விரிவாகப் பேசுகின்றன. பாண் என்னும் சொல்லோடு அர் என்னும் சிறப்பு விகுதி சேர்ந்து பாணர் என்ற சொல் உருவானதாக அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். பாண் என்பது பாட்டு என்று கொண்டால் பாடல் பாடுவதை மட்டும் தொழிலாகக் கொண்டவர்கள் பாணர் என்பதும் பாடலின் மூலம் அக்காலச் சமூகத்தை மகிழ்வித்த கலைஞர்கள் பாணர்கள் என்பதும் தெரியவருகிறது.

அத்தகைய பாணர்கள் ஓர் இடத்தில் நிலைப் பெற்றிராத நாடோடி வாழ்வை மேற்கொண்டுள்ளனர். மேலும், அவர்கள் தனித்து வாழாது கூட்டமாக ஒருங்கிணைந்து வாழும் முறைமையை மேற்கொண்டுள்ளனர். பாணர்கள் நாடோடிகளாகத் திரிவதினால் நிலையான குடியிருப்பைப் பெற்றிலர். அவர்களது வாழிடம் தற்காலிகமானதாக அமைந்துள்ளது. பாணர்களில் ஒருவர் ஈட்டிய பொருளைப் பலரும் பகிர்ந்துள்ளமையைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

பாணர்களின் வாழ்வானது எப்பொழுதும் வறுமை சூழ்ந்த வாழ்வாக அமைந்துள்ளது. வள்ளல்களிடம் வெகுமதியைப் பெற்றே தம் வாழ் நாளைக் கழிப்பவர்களாகப் பாணர்கள் விளங்கியமையால் பெரும் பொழுதுகள் வறுமையோடு போராடும் வாழ்வாகப் பாணர்கள் வாழ்வு அமைந்துள்ளது.

பாணர்கள் தங்களுக்கென தனியுடைமை இல்லாதிருப்பதினால் அவர்களுடைய சிந்தை எப்பொழுதும் பொதுவுடைமைச் சிந்தையாக இருந்துள்ளது. அதனை அவர்களது பாடல் வழி அறியலாம்.

பாணர்களின் கடவுள் கொள்கையானது எந்த ஒரு சமயத்தையும் பின்பற்றி அமையாமல் செய்யும் தொழிலை மையமாகக் கொண்டுள்ளது. அவர்கள்

எப்பொழுதும் தம்முடைய யாழ் போன்ற தொழில் கருவிகளையே போற்றும் அமைவில் கடவுள் கொள்கை அமைந்துள்ளது.

பாணர்களில் சிலர் உயர்குடிகளாகவும் கீழ் குடிகளாகவும் மதிப்பிடப்படும் சூழலைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. இத்தகையப் பகுப்பு பெரும்பான்மை அவர்கள் பெற்றிருக்கும் செல்வத்தின் அளவைக் கொண்டு மதிப்பிடப்பட்டுள்ளது. நிலையான ஓர் அரசவையில் தங்கியிருந்து பாடல் இயற்றும் பொறுப்பில் உள்ள பாணர்களை உயர் குடியினர் என்றும் நாடோடிகளாக வாழும் பாணர்களைக் கீழ்க் குடியினர் என்றும் இலக்கியங்கள் சுட்டுகின்றன. இத்தகைய கிழ் குடிப்பாணர்கள் கைவினைக் கலைஞராகவும், மீன்பிடித் தொழிலைச் செய்பவர்களாகவும் இருந்துள்ளனர்.

பாணர்களை அவர்கள் வைத்திருக்கும் இசைக் கருவியின் அடிப்படையில் யாழ்ப்பாணர்கள், மண்டைப்பாணர்கள், இசைப்பாணர்கள் என்று வகைப்படுத்தலாம். பாணர் இனத்தைச் சார்ந்த பெண்களைப் பாடினி என்றும் விறலி என்றும் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

பாடல் பாடும் தொழிலை மேற்கொள்ளும் பெண் பாணர்களைப் பாடினி என்றும் ஆடற் கலை நிகழ்த்தும் பெண் பாணர்களை விறலி என்றும் நடிப்புக்கலையில் வல்லவர்களாகத் திகழும் ஆண் பாணர்களைப் பொருநர் இசைக் கலையில் வல்லவர்களான பாணர்களைக் கூத்தர் என்றும் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

மேலும், அகத்துறையில் குறிப்பிடப்படும் இளையர், கோடியர், கிணைவர், துடியர், வரியர், கண்ணுளர், இயவர், கட்டுவிச்சி, அகவன் மகள், அகவர், அகவுநர், வருவதுரைப்போர், சென்னியர், வரிக் கூத்து பாடுவோர், வருவதுரைப்போர், நகைவர், குறங்கூளியர் ஆகியோர் பாணர் இனத்தைச் சார்ந்தவர்கள் என்பதையும் அவர்களது வாழ்வியல் முறைமைகளையும் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன.

புறத்துறையில் பாணர்கள் முரசறைவோர்களாகவும், அரசியல் அமைப்பில் அரசுப் பணியிலும் சூதர் பணியிலும் மறத்துறையிலும் ஈடுபட்டவர்களாகவும் இருந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. போர்க்களங்களுக்குச் சென்று பாடும் பாணர்கள் போர்ப் பாணர்கள் என்று அழைக்கப்பட்டுள்ளனர்.

பாணர்கள் அகத்துறையில் தலைவன் தலைவியிடையே ஏற்படும் ஊடலைத் தீர்த்துவைக்கும் வாயில்களாகச் செயல்பட்டு பல்வேறு பரிசுகளைப் பெற்றுள்ளதைச் சங்க அக இலக்கியங்கள் காட்டுகின்றன.

வேளிர்கள் என்பவர்கள் இனக்குழுச் சமூகத்திலிருந்து தோன்றிய பூர்வ குடிகள். வேளிர்கள் வடபுலத்தவர்களின் பரம்பரையைச் சார்ந்தவர்கள் என்று அறிஞர்கள் கூறிவந்தாலும் அவர்கள் தமிழகத்தின் பூர்வ குடிகள்தான் என்பதை நச்சினார்க்கினியரின் கூற்று மூலம் தெளியலாம். வேளிர் என்ற சொல் வேளாண்மையாகிய பிறருக்குக் கொடுத்தல் என்ற பொருளால் பெயர் பெற்றது. வேளிர்களின் அடிப்படைத் தொழில் கொடை நல்குதலும் வறியவர்களுக்கு உதவுதலும் ஆகும்.

வேளிர்களின் காலத்தில் பாணர்கள், கூத்தர்கள், விறலியர் போன்றோர்களின் வாழ்வும் கலைகளும் சிறப்புறப் பேணி காக்கப்பட்டு வந்துள்ளது. இவர்கள் குறுநில மன்னர்கள், சீறூர் மன்னர்கள், வேளிர்கள் என்ற பல பெயர்களால் இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளனர். இவர்கள் வேளாண்மைத் தொழிலை அடிப்படையாகக் கொண்டவர்கள். இவர்கள் புன்செய் நிலத்தை விளைநிலமாகக் கொண்டவர்கள். இவர்களின் வாழ்விடம் மலை சார்ந்த நிலமாக இருந்துள்ளது.

சீறூர் மன்னர்களாகிய வேளிர்கள் தங்கள் வறுமையுற்ற காலத்திலும் தமது கொடைப் பண்பை மறவாது போற்றி ஒழுகி வந்துள்ளனர். தங்களிடம் இருக்கும் பொருட்களைக் கொண்டு விருந்தோம்பல் பண்பையும் கொடைத்தன்மையையும் போற்றி வந்துள்ளனர்.

வேளிர்கள் வேந்தர் சமூகத்தில் வேந்தர்களுக்கு ஆட்பட்டுச் சிறு நிலப்பரப்பை ஆண்டு வந்துள்ளார். சில சமயங்களில் வேந்தர்களை எதிர்த்தும் போர் புரிந்துள்ளனர். வேளிர்களில் சிலர் வேந்தர்களுக்குப் படை உதவி புரிந்தும் படைக்குத் தலைமை ஏற்றும் வந்துள்ளனர். இந்நிகழ்வை வேந்துவிடு தொழில் என்ற பெயரால் இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

வேளிர் என்று பொதுப்பெயரால் இவர்கள் அழைத்தாலும் இவர்களில் சிலர் மட்டும் தங்களை வேளிர் என்ற சிறப்புப் பெயரால் அழைத்துக் கொண்டனர். அவர்களில் வேள் பாரி, வேள் பேகன் போன்றோர் குறிப்பிடப்பிடத்தக்கவர்கள்.

வேளிர்களில் கொடைத்தன்மையில் மட்டும் சிறந்துவிளங்காது போர்க்கலையிலும் சிறப்புற்று விளங்கியுள்ளனர். மூவேந்தர்கள் ஒரு சேர படையெடுத்துவரினும் அவர்களை எதிர்த்து போரிட்டு அப்போரில் அவர்களால் தன்னை வெற்றிபெற இயாலுது படை நடத்திச் செல்லும் தன்மையையும் வீரத்தையும் ஒருங்கே பெற்றவர்களாக விளங்கியுள்ளதைப் பாரியின் வாயிலாகத் தெளியலாம்.

அதியமான் பற்றிய பாடல்கள் வாயிலாக வேந்தர்களைப் போலப் போருக்குத் தூது அனுப்பும் செயல்பாட்டை வேளிர்களும் பெற்றிருந்தனர் என்பதையும் தனக்குக் கிடைத்தர்க்கரிய பொருள் கிட்டினாலும் பிறருக்குக் கொடுக்கும் இயல்பினை வேளிர்கள் பெற்றிருந்தது தெரிய வருகிறது. தன்னுயிரை விடத் தன்னை நாடிவருப்பர்களைக் காக்கும் பண்பு வேளிர்களிடம் இயல்பாக இருந்ததை அதியமான் மூலமாகத் தெரிந்து கொள்ளலாம்.

பேகன், பாரி போன்ற வள்ளல்கள் வாயிலாக மனித உயிர்கள் மட்டுமின்றி அ∴றிணை உயிர்களின் துன்பத்தைக் கண்டும் மனம் வருந்தி அதற்குத் தன்னால் இயன்ற கொடை வழங்குதலை அடிப்படை நோக்கமாகக் கொண்டிருக்கும் வேளிர்களின் இயல்பு வெளிப்படுகிறது.

வேளிர்களில் பலர் செல்வச் செழிப்பான மலைவளம் கொண்ட பகுதியை ஆட்சி செலுத்தி வந்துள்ளனர். இவர்களின் கொடைப் பொருளாக யானை சிறந்த இடத்தைப் பிடித்துள்ளது. மலை நாடுகளை ஆட்சி செய்யும் ஆய் போன்ற வேளிர்கள் யானையைக் கொடைப் பொருளாக வழங்குதலை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

தன்னை நாடிவரும் புலவர்களுக்கு அவர்கள் விரும்பும் பொருள் எதுவாயினும் அதனைப் பரிசாகக் கொடுக்கும் பழக்கம் வேளிரிடம் இருந்துள்ளதைப் பேகன் பற்றிய பரணர் கூற்று மூலமாக வெளிப்படுகிறது. பரணர் வேண்ட உடனடியாக தனது மனைவியின் துயர் துடைக்கப் பேகன் தன் பரத்தமை தொழிலைவிடுத்து தன்துணைவியுடன் சேர்ந்து வாழ முற்பட்ட நிகழ்வானது வேளிர்கள் தமிழ்ப் புலவர்கள் மீது கொண்ட பற்றும் புலவர்களுக்கு வேளிர்காலத்தில் இருந்த மதிப்பும் அவர்களின் சொல்லுக்குப் வேளிர்கள் செவி மடுக்கும் நிலையும் வெளிப்படுகிறது.

சங்க இலக்கியங்கள் ஆட்சித் தலைவர்கள் வேந்தன், மன்னன், அரசன், இறை அல்லது இறைவன், காவலன், கோ எனப் பல்வேறு பெயர்களால்

குறிக்கப்பெறுகின்றனர். இதில் மன்னர், வேந்தர் ஆகிய சொல்லாட்சியே அதிகமாக இலக்கியங்களில் கையாளப்பட்டுள்ளது.

வேந்தர் என்ற சொல்குறித்து அறிஞர்கள் பல காரணங்கள் கூறியுள்ளனர். அதில் முடி வேய்ததால் வேந்தர் என்ற சொல் வந்ததது என்பது பொருத்தமானதாக அமைகிறது. வேந்தர்களுக்கும் மன்னர்களுக்கும் மிகுந்த வேறுபாடு காணப்படுகிறது. ஆட்சி பரப்பில் குறைந்த நிலப் பரப்பை உடையவர்களை மன்னர்கள் என்றும் பெரும் பரப்பை ஆண்டவர்கள் வேந்தர்கள் என்றும் சுட்டும் மரபு சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளது.

தமிழகச் சூழலில் சேர, சோழ, பாண்டியர் மரபினரை வேந்தர்கள் என்றழைக்கும் மரபு நிலவி வந்துள்ளது. அவர்களில் சில காலம் ஒற்றுமையுடனும் பல காலம் போர் பூசலில் ஈடுபட்டு வந்துள்ளமையும் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்பகின்றன.

மூவேந்தர்களின் ஆட்சிக் காலத்தில் அவர்களது ஆட்சிப் பரப்பு போரிட்டு பெறும் வெற்றிகளின் அடிப்படையில் பல மாறுதல்களைக் கொண்டுள்ளது. மூவேந்தர்களில் தலை நகரங்களும், அரண்மனையும் புலவர்களால் சிறப்பித்துப் பாடப்பட்டுள்ளன.

மூவேந்தர்களின் அரசு சின்னங்களாகக் கொடி, அரசுப் பொறி, குடை, முரசு, அரசுக் கட்டில், படை, வாள், முடி, தார், செங்கோல், கடிமரம் போன்றவை புலவர்களால் போற்றிப் பாடப்பட்டுள்ளன.

வேந்தர்களின் ஆட்சிப் பொறுப்பில் சிறந்து விளங்கியவர்களுக்குக் காவிதி, ஏனாதி, எட்டி போன்ற சிறப்புப் பட்டங்கள் வழங்கப்பட்டுள்ளன. அதில் காவிதி பட்டம் வேளாண் செய்பவர்க்கும் ஏனாதி பட்டம் இராணுவ தலைவர்களுக்கும் வழங்கப்பட்டுள்ளது.

வேந்தர்களின் அவைக் களத்தில் வேந்தர்களுக்கு அறிவுரை வழங்க ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் இருந்துள்ளது. இத்தகைய குழுக்களில் இருந்த ஒற்றர், தூதுவர், அமைச்சர்கள் போன்றவர்களின் பணி முக்கியமானதாக அமைந்துள்ளது.

வேந்தர்கள் நால்வகைப் படைகளான யானைப்படை, குதிரைப் படை, தேர்ப்படை, தூசிப்படை ஆகியவற்றைக் கொண்டு சிறந்த போர் வேந்தராகத்

திகழ்ந்துள்ளனர். மேலும், சேரர்கள் கப்பற்படை என்னும் புதிய வகைப் படை கொண்டு பல இடங்களை வெற்றிப் பெற்றதைப் பதிற்றுப்பத்து இயம்புகிறது.

வேந்தர்கள் அவையில் அந்தணர்களுக்கென்று சிறப்பிடம் தரப்பட்டுள்ளது. புரோகிதர்களாக அவர்கள் அவையில் இடம் பெற்றிருந்தனர். அவர்கள் யாகம் நடத்துவதற்காகப் பெரும் பொருட்களை வேந்தர்கள் செலவிட்டுள்ளனர். வேந்தர்களாக இருந்த புலவர்களுக்குப் பெருமளவில் பொன்னும் பொருளும் வழங்கப்பட்டுள்ளது. சில அந்தணப் புலவருக்காகத் தன் மகனையும் அரச பதவியையும் பரிசாகக் கொடுக்குமளவிற்கு அந்தணர்கள் சிறந்து விளங்கினர். வேத மரபும் வேந்தர்கள் ஆட்சியில் சிறந்து விளங்கிற்று.

வேந்தர்களின் ஆட்சியில் புலவர்களுக்குச் சிறப்பிடம் தரப்பட்டுள்ளது. புலவர்கள் அரசு இயந்திரத்தின் செயல்பாடுகளை மக்களிடையே கொண்டு சேர்க்கும் விளம்பர வாயில்களாகச் செயல்பட்டுள்ளனர். அதனால், புலவர்களில் வறுமை வேந்தர்களால் போக்கப்பட்டுள்ளது. புலவர்களுக்கும் வேந்தர்களுக்குமிடையே சிறந்த நட்பு தோன்றியுள்ளது. அந்த நட்பானது உயிரக் கொடுக்குமளவில் இருந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

புலவர்களின் கவித்திறனுக்கு ஏற்றவாறும் அவர்களின் விருப்பத்திற்கு ஏற்பவும் பல்வேறு பொருட்கள் பரிசுகளாக வழங்கப்பட்டுள்ளன. புலவர்கள் தான் பெறும் பரிசுக்காக மட்டும் வேந்தரை அணுகாமல் அவர்கள் செய்யும் தவறுகளைத் துணிச்சலோடு எடுத்துரைக்கும் மனத்துணிவோடும் செயல்பட்டுள்ளனர்.

வேந்தர்களின் அவையில் அமைச்சர்களும் இன்ன பிறரும் அறிவுரை வழங்கத் தவறும் பட்சத்தில் மக்களின் பொது நலன் கருதியும் பகை வேந்தர்களின் நலன் கருதியும் வேந்தருக்கு அறிவுரை வழங்கியுள்ளனர். அதனால் வேந்தர்கள் தான் செய்யும் தவறினால் ஏற்படும் வரலாற்றுப் பிழையிலிருந்து அவர்களைக் காத்துள்ளனர்.

வேந்தர்களில் பலர் புலவராகவும் விளங்கியுள்ளனர். அகத்துறையிலும் புறத்துறையிலும் அறிவுத்திறம் சார்ந்த பல பாடல்களை வேந்தர்கள் இயற்றியுள்ளனர். நாடாளும் திறமை மட்டுமின்றி மக்களுக்குப் பயனுள்ள செய்திகளையும் தன்மான உணர்வுகளையும் தம்பாடல்களில் வேந்தர்கள் பதிவு செய்துள்ளனர்.

# துணைநூற்பட்டியல்

**முதன்மைச் சான்றாதாரங்கள்**


1. ஆலிஸ் (உ.ஆ) - பத்துப்பாட்டு மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை.
2010.

2. ஆலிஸ் (உ.ஆ) - பரிபாடல் மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை.
2010.

3. ஆலிஸ் (உ.ஆ) - கலித்தொகை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை.
2010.

4. சாமிநாதையர் உ.வே (உ.ஆ.) - குறுந்தொகை மூலமும் உரையும்
உ.வே.சா பதிப்பகம் அடையார்,
சென்னை.
1992.

5. சோமசுந்தரனார் பொ.வே (உ.ஆ.) - நற்றிணை மூலமும் உரையும்
கழக வெளியீடு,
பிராட்வே, சென்னை.
1982.

6. சோமசுந்தரனார் பொ.வே (உ.ஆ.) - பத்துப்பாட்டு மூலமும் உரையும்
கழக வெளியீடு,
பிராட்வே, சென்னை.
1982.

7. சோமசுந்தரனார் பொ.வே (உ.ஆ.) - ஐங்குநுறூறு மூலமும் உரையும்
கழக வெளியீடு,
பிராட்வே, சென்னை.
1992.

8. துரைசாமிப்பிள்ளை.சு.ஔவை. (உ.ஆ) - புறநானூறு மூலமும் உரையும்
கழக வெளியீடு,
பிராட்வே, சென்னை.
1988

9. துரைசாமிப்பிள்ளை.சு.ஔவை. (உ.ஆ) - பதிற்றுப்பத்து மூலமும் உரையும் கழக வெளியீடு, பிராட்வே, சென்னை. 1988

10. வேங்கடசாமி நாட்டார் ந.மு (உ.ஆ) - அகநானூறு கழகம் கழக வெளியீடு, பிராட்வே, சென்னை. 1982

**துணைமைச் சான்றாதாரங்கள்**

1. அடியார்க்கு நல்லார் (உ.ஆ) - சிலப்பதிகாரம் உ.வே.சா பதிப்பகம் அடையார், சென்னை. 1992.

2. அம்மன்கிளி முருகதாஸ் - சங்கக் கவிதையாக்கம் மரபும் மாற்றமும் குமரன் புத்தகாலயம் தியாகராய நகர், சென்னை. 2005.

3. அரங்கசாமி. அ துரை - சங்க காலச் சிறப்பு பெயர்கள் குமரன் பதிப்பகம், சென்னை. 2004.

4. அருணன் - காலந்தோறும் பிராமணியம் வசந்தம் வெளியீட்டகம் சிம்மக்கல், மதுரை. 2008.

5. இராகவையங்கார் மு. - சேரன் செங்குட்டுவன் சாரதா பதிப்பகம் இராயப்பேட்டை, சென்னை 2010.

6. இராசமாணிக்கனார் மா. - சோழர் வரலாறு சாரதா பதிப்பகம் இராயப்பேட்டை, சென்னை. 2009.

7. இராமலிங்கம் அரங்க. - சங்க இலக்கியத்தில் வேந்தர்
பாரி புத்தகாலயம், மதுரை.
1994.

8. இலக்குவனார் சி. - இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல்
வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை.
1998.

9. இளங்குமரன். இரா - பாணர்
குமரன் பதிப்பகம்
தியாகராயர் நகர், சென்னை.
1996.

10. இளம்பூரணர் (உ.ஆ) - தொல்காப்பியம், பொருளதிகாரம்
சாரதா பதிப்பகம்
இராயப்பேட்டை, சென்னை.
2000.

11. இளம்பூரணர் (உ.ஆ) - தொல்காப்பியம், எழுத்ததிகாரம்
சாரதா பதிப்பகம்
இராயப்பேட்டை, சென்னை.
2000.

12. ஏங்கல்ஸ் - குடும்பம் அரசு சொத்து ஆகியவற்றின் தோற்றம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை.
2010.

13. கதிர். முருகு - திருவாசகம்
சாரதா பதிப்பகம்
இராயப்பேட்டை, சென்னை.
2004.

14. கதிர். முருகு - பழமொழி
சாரதா பதிப்பகம்
இராயப்பேட்டை, சென்னை.
2006.

15. கனகசபை வெ. - 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்
சாரதா பதிப்பகம்
இராயப்பேட்டை, சென்னை.
2011.

16. குருசாமி ம.ரா.போ. - சங்க காலம்
மெர்குரி புத்தகக கம்பெனி
கோயம்புத்தூர்
1987.

17. குருநாதன் வ. - சங்க கால அரச வரலாறு
தஞ்சை பல்கலை பதிப்பு
தஞ்சாவூர்.
1998.

18. கோவிந்தனார் கா. - தமிழக வரலாறு சங்க கால அரசர்கள்
எழிலகம்
இராயப்பேட்டை, சென்னை.
1993.

19. கோவிந்தனார் கா. - சேரர் சோழர் பாண்டியர்
சாரதா பதிப்பகம்
இராயப்பேட்டை, சென்னை.
2014.

20. சாமிநாதையர் உ.வே (உ.ஆ) - புறநானூறு
உ.வே.சா பதிப்பகம்
அடையார், சென்னை.
1994.

21. சிதம்பரனார். அ. - சேரர் வரலாறு கழக வெளியீடு
பிராட்வே, சென்னை.
1987

22. சிவத்தம்பி. கா - சங்ககால திணைச் சமுதாயம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை.
2006.

23. சிவத்தம்பி. கா - பண்டை தமிழ்ச் சமூகத்தில் நாடகம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை.
2007

24. சிவத்தம்பி.கா - திணைக்கோட்பாட்டின் சமூக அடிப்படைகள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை.
2007.

25. சுப்பிரமணியன் ந. - சங்ககால வாழ்வியல்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை.
2010.

26. சுப்பிரமணியன் கா. - சங்ககாலச் சமுதாயம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை.
2011.

27. சோமசுந்தரனார் பொ.வே (உ.ஆ.) - புறப்பொருள் வெண்பாமாலை
கழக வெளியீடு
பிராட்வே, சென்னை.
1996

28. துரைசாமிப்பிள்ளை ஔவை சு. (உ.ஆ) - சேரமன்னர் வரலாறு
கழக வெளியீடு
பிராட்வே, சென்னை.
1994.

29. துரைசாமிப்பிள்ளை ஔவை சு. (உ.ஆ) - புறநானூறு
கழக வெளியீடு
பிராட்வே, சென்னை.
1990.

30. தேவநேய பாவணார் (உ.ஆ) - திருக்குறள்
கழக வெளியீடு
பிராட்வே, சென்னை.
1995.

31. தேவநேயன் ஞா. - பழந்தமிழராட்சி பாரி நிலையம்
பிராட்வே, சென்னை.
1989.

32. தேவிபிரசாத் சட்டோபாத்யாயா - இந்தியத் தத்துவியலில்
நிலைத்திருப்பனவும் அழிந்தனவும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை.
2006.

33. நக்கீரர் (உ.ஆ) - இறையனார் களவியல்
சாரதா பதிப்பகம்
இராயப்பேட்டை, சென்னை.
2011.

34. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - பத்துப்பாட்டு மூலமும் உரையும்
கழக வெளியீடு
பிராட்வே பேட்டை, சென்னை.
1987.

35. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - மதுரைக்காஞ்சி
கழக வெளியீடு
பிராட்வே, சென்னை.
1987.

36. நச்சினார்க்கினியர் (உ.ஆ ) - பொருநராற்றுப்படை
கழக வெளியீடு
பிராட்வே, சென்னை.
1987.

37. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - தொல்காப்பியம், எழுத்ததிகாரம்
கழக வெளியீடு
பிராட்வே, சென்னை.
2002.

38. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - தொல்காப்பியம், சொல்லதிகாரம்
கழக வெளியீடு
பிராட்வே, சென்னை.
2002.

39. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - தொல்காப்பியம், பொருளதிகாரம்
கழக வெளியீடு
பிராட்வே, சென்னை.
2002.

40. நம்பூதிரிபாத் - இந்திய வரலாறு ஓர் அறிமுகம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை.
2004.

41. பக்தவச்சல பாரதி - பாணர் இனவரைவியல்
அடையாளம் பதிப்பகம்
புத்தாநத்தம், திருச்சி.
2015.

42. பரிமேழகர் உரை - திருக்குறள்
கழக வெளியீடு
பிராட்வே, சென்னை.
2003.

43. பழனிவேல் - சங்க இலக்கியத்தில் பாட்டு மரபும் எழுத்து மரபும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை.
2011.

44. பாலசுப்பிரமணியன். கு.வெ - சங்க இலக்கியத்தில் புறப்பொருள்
மெய்யப்பன் பதிப்பகம்
பாரி முனை, சென்னை.
2007.

45. பாலசுப்பிரமணியன் சி. - சி.பா நெஞ்சின் நினைவுகள்
பாரி நூல்நிலையம்
பிராட்வே, சென்னை.
1980.

46. பெருமாள்சாமி. வெ - சங்க காலத் தமிழகத்தின் சமூக நிலை
பாரதி புத்தகாலயம்
அண்ணாசாலை, சென்னை.
2010.

47. மயிலை சீனி.வேங்கடசாமி. - சேரன் செங்குட்டுவன்
சாரதா பதிப்பகம்
இராயப்பேட்டை, சென்னை.
2012.

48. மாதையன் பெ - சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை.
2014.

49. வளர்மதியும். மு - தமிழர் கலை வரலாற்றின் முகம்
அம்ருதா பதிப்பகம்
போரூர், சென்னை.
2009.

50. வரதராசன் வெ. - தமிழ்ப் பாணரின் வாழ்வும் வரலாறும் பண்ணன் பதிப்பகம்,
சென்னை.
1987.

51. வித்தியானந்தன் சு. - தமிழர் சால்பு பாரி நிலையம்
பிராட்வே, சென்னை.
1995.

| | | | |
|---|---|---|---|
| 52. | வேங்கடசாமி. சீனி | - | கொங்கு நாட்டு வரலாறு<br>சாரதா பதிப்பகம்<br>இராயப்பேட்டை, சென்னை.<br>2014. |
| 53. | ராகவையங்கார் மு. | - | வேளிர்<br>சாரதா பதிப்பகம்<br>இராயப்பேட்டை, சென்னை.<br>2014. |
| 54. | ராகுல் சாகிருதியாயன் | - | வால்கா முதல் கங்கை வரை<br>தமிழ் புத்தகாலயம்<br>தியாகராய நகர், சென்னை.<br>2001. |
| 55. | ராஜ்கௌதமன் | - | பாட்டும் தொகையும்<br>தொல்காப்பியமும் தமிழ் சமூக<br>உருவாக்கமும்<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்<br>அம்பத்தூர், சென்னை.<br>2012. |
| 59. | ராஜ்கௌதமன் | - | ஆகோல் பூசல் மாற்றும்<br>பெருங்கற்கால நாகரிகமும்<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்<br>அம்பத்தூர், சென்னை.<br>2012. |
| 57. | ஆசிரியர் குழு | - | கௌரா தமிழகராதி<br>சாரதா பதிப்பகம்<br>இராயப்பேட்டை, சென்னை.<br>2009. |
| 58. | ஆசிரியர் குழு | - | சென்னைப் பல்கலைக்<br>கழகப் பேரகராதி<br>தொகுதி மூன்று<br>சென்னை பல்கலைக் கழக<br>வெளியீடு, சென்னை. |
| 59. | ..................... | - | பைபிள் பழைய ஏற்பாடு<br>கிளாடன் இன்டர்னேசனல் இன்<br>இந்தியா திருச்சி.<br>2009. |

# தெகுப்புரை

மனித இனம் தோற்றம் பற்றி மதக்கோட்பாடுகள் இறைவனால் படைக்கப்பட்டவன் என்றும் அறிவியல் விலங்கு பிறந்தவன் என்றும் குறிப்பிடுகின்றன. தொடக்க கால மனிதனிடத்தில் விலங்கியல் குணங்கள் நிறைந்துள்ளதால் மனிதன் காட்டுமிராண்டித்தனமாகவும் பின்னர் குழுவாக இணைந்து வாழும் நிலையிலும் இருந்துள்ளான்.

குழுவாக இணைந்து வாழும் மனித இனத்தினைக் காட்டுமிராண்டி நிலை, அநாகரிக நிலை, நாகரிக நிலை என மூவகையாகப் பகுக்கலாம். கற்களின் பயன்பாடுகளைக் கொண்டு இயற்கைப் பொருட்களை உண்ணும் நிலையைக் காட்டுமிராண்டி நிலையாகவும், விலங்குகளைப் பழக்கத்தில் கொண்டு வந்து உணவுப் பொருட்களைப் பெருக்கும் நிலையை அநாகரிக நிலையாகவும், இயற்கைப் பொருட்களை விளைவித்தலும் கலை உணர்வை வளர்த்தலுமாகிய நிலையை நாகரிக நிலையாகவும் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

தொடக்க காலத்தில் மனிதன் தன் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்வதற்காகவும் இயற்கை சீற்றங்களிலிருந்து தற்காத்துக் கொள்ளவும் குழுவாக இணைந்து செயல்படத் தொடங்கினான். குழுவாக இணைந்து வாழ்ந்த ஆதிமனிதர்கள் தங்கள் குழுக்களுக்குப் பெயரிடும் முறையைக் கொண்டுள்ளனர். அப்பெயர்கள் அவர்கள் வாழும் நிலத்தைச் சார்ந்த விலங்குகள், பறவைகள், மரஞ் செடிக் கொடிகள் ஆகியவற்றைப் பொறுத்து அமைந்துள்ளது. குழுக்களின் தலைமைப் பொறுப்பு முதலில் பெண்களுக்கும் பின்னர் ஆண்களுக்குமானதாக இருந்துள்ளது.

தமிழ்ச் சூழலில் இனக்குழுச் சமூகத்தைத் திணை நிலைச் சமூகமாகச் சங்க இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன. திணை நிலைச் சமூக முறை ஐவகை நிலங்களாகப் பிரிக்கப்பட்டு அவற்றின் வாழ்வியல் கூறுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. சீறூர் மன்னர்களும் முதுகுடி மன்னர்களும் வேளிர்களும் இனக்குழுத் தலைவர்களாக இருந்துள்ளனர்.

தமிழக இனக்குழு வாழ்வானது வேடர் சமூகமாக சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதனை வேடர் சமூக வாழிவிடம், சடங்கு முறைகள், ஆநிரை கவர்தல், நடுகல் வழிபாடு ஆகியவற்றின் மூலம் அறியலாம். ஐந்திணை

வாழ்வில் வேடர்கள், இடையர்கள், பரதவர்கள், உமணர்கள் வாயிலாக இனக் குழு வாழ்வு முறை சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

குறிஞ்சி நில மக்களான வேடர் சமூக வாழ்வு எயினர், ஆறலைக்கள்வர், குறவர்கள் ஆகியவரின் வாழ்வியல் நிகழ்வுகளும் முல்லை நில மக்களான இடையர்கள் நெய்தல் நில மக்களான பரதவர்கள், உணமர்கள் ஆகிய மக்களின் வாழ்வியல் இனக்குழு மக்களின் கடைநிலை வாழ்வியலோடு பொருந்திச் செல்கின்றன.

வாய் மொழி இலக்கியத்தின் தோற்றமாகப் பாணர்களின் காலம் வரையறை செய்யப்படுகிறது. பாணர்களின் வாழ்வியலைச் சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு ஆற்றுப்படை நூல்கள் விரிவாகப் பேசுகின்றன. பாண் என்னும் சொல்லோடு அர் என்னும் சிறப்பு விகுதி சேர்ந்து பாணர் என்ற சொல் உருவானதாக அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். பாண் என்பது பாட்டு என்று கொண்டால் பாடல் பாடுவதை மட்டும் தொழிலாகக் கொண்டவர்கள் பாணர் என்பதும் பாடலின் மூலம் அக்காலச் சமூகத்தை மகிழ்வித்த கலைஞர்கள் பாணர்கள் என்பதும் தெரியவருகிறது.

அத்தகைய பாணர்கள் ஓர் இடத்தில் நிலைப் பெற்றிராத நாடோடி வாழ்வை மேற்கொண்டுள்ளனர். மேலும், அவர்கள் தனித்து வாழாது கூட்டமாக ஒருங்கிணைந்து வாழும் முறைமையை மேற்கொண்டுள்ளனர். பாணர்கள் நாடோடிகளாகத் திரிவதினால் நிலையான குடியிருப்பைப் பெற்றிலர். அவர்களது வாழிடம் தற்காலிகமானதாக அமைந்துள்ளது. பாணர்களில் ஒருவர் ஈட்டிய பொருளைப் பலரும் பகிர்ந்துள்ளமையைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

பாணர்களின் வாழ்வானது எப்பொழுதும் வறுமை சூழ்ந்த வாழ்வாக அமைந்துள்ளது. வள்ளல்களிடம் வெகுமதியைப் பெற்றே தம் வாழ் நாளைக் கழிப்பவர்களாகப் பாணர்கள் விளங்கியமையால் பெரும் பொழுதுகள் வறுமையோடு போராடும் வாழ்வாகப் பாணர்கள் வாழ்வு அமைந்துள்ளது.

பாணர்கள் தங்களுக்கென தனியுடைமை இல்லாதிருப்பதினால் அவர்களுடைய சிந்தை எப்பொழுதும் பொதுவுடைமைச் சிந்தையாக இருந்துள்ளது. அதனை அவர்களது பாடல் வழி அறியலாம்.

பாணர்களின் கடவுள் கொள்கையானது எந்த ஒரு சமயத்தையும் பின்பற்றி அமையாமல் செய்யும் தொழிலை மையமாகக் கொண்டுள்ளது. அவர்கள்

எப்பொழுதும் தம்முடைய யாழ் போன்ற தொழில் கருவிகளையே போற்றும் அமைவில் கடவுள் கொள்கை அமைந்துள்ளது.

பாணர்களில் சிலர் உயர்குடிகளாகவும் கீழ் குடிகளாகவும் மதிப்பிடப்படும் சூழலைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. இத்தகையப் பகுப்பு பெரும்பான்மை அவர்கள் பெற்றிருக்கும் செல்வத்தின் அளவைக் கொண்டு மதிப்பிடப்பட்டுள்ளது. நிலையான ஓர் அரசவையில் தங்கியிருந்து பாடல் இயற்றும் பொறுப்பில் உள்ள பாணர்களை உயர் குடியினர் என்றும் நாடோடிகளாக வாழும் பாணர்களைக் கீழ்க் குடியினர் என்றும் இலக்கியங்கள் சுட்டுகின்றன. இத்தகைய கிழ் குடிப்பாணர்கள் கைவினைக் கலைஞராகவும், மீன்பிடித் தொழிலைச் செய்பவர்களாகவும் இருந்துள்ளனர்.

பாணர்களை அவர்கள் வைத்திருக்கும் இசைக் கருவியின் அடிப்படையில் யாழ்ப்பாணர்கள், மண்டைப்பாணர்கள், இசைப்பாணர்கள் என்று வகைப்படுத்தலாம். பாணர் இனத்தைச் சார்ந்த பெண்களைப் பாடினி என்றும் விறலி என்றும் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

பாடல் பாடும் தொழிலை மேற்கொள்ளும் பெண் பாணர்களைப் பாடினி என்றும் ஆடற் கலை நிகழ்த்தும் பெண் பாணர்களை விறலி என்றும் நடிப்புக்கலையில் வல்லவர்களாகத் திகழும் ஆண் பாணர்களைப் பொருநர் இசைக் கலையில் வல்லவர்களான பாணர்களைக் கூத்தர் என்றும் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

மேலும், அகத்துறையில் குறிப்பிடப்படும் இளையர், கோடியர், கிணைவர், துடியர், வரியர், கண்ணுளர், இயவர், கட்டுவிச்சி, அகவன் மகள், அகவர், அகவுநர், வருவதுரைப்போர், சென்னியர், வரிக் கூத்து பாடுவோர், வருவதுரைப்போர், நகைவர், குறங்கூளியர் ஆகியோர் பாணர் இனத்தைச் சார்ந்தவர்கள் என்பதையும் அவர்களது வாழ்வியல் முறைமைகளையும் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன.

புறத்துறையில் பாணர்கள் முரசறைவோர்களாகவும், அரசியல் அமைப்பில் அரசுப் பணியிலும் தூதர் பணியிலும் மறத்துறையிலும் ஈடுபட்டவர்களாகவும் இருந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. போர்க்களங்களுக்குச் சென்று பாடும் பாணர்கள் போர்ப் பாணர்கள் என்று அழைக்கப்பட்டுள்ளனர்.

பாணர்கள் அகத்துறையில் தலைவன் தலைவியிடையே ஏற்படும் ஊடலைத் தீர்த்துவைக்கும் வாயில்களாகச் செயல்பட்டு பல்வேறு பரிசுகளைப் பெற்றுள்ளதைச் சங்க அக இலக்கியங்கள் காட்டுகின்றன.

வேளிர்கள் என்பவர்கள் இனக்குழுச் சமூகத்திலிருந்து தோன்றிய பூர்வ குடிகள். வேளிர்கள் வடபுலத்தவர்களின் பரம்பரையைச் சார்ந்தவர்கள் என்று அறிஞர்கள் கூறிவந்தாலும் அவர்கள் தமிழகத்தின் பூர்வ குடிகள்தான் என்பதை நச்சினார்க்கினியரின் கூற்று மூலம் தெளியலாம். வேளிர் என்ற சொல் வேளாண்மையாகிய பிறருக்குக் கொடுத்தல் என்ற பொருளால் பெயர் பெற்றது. வேளிர்களின் அடிப்படைத் தொழில் கொடை நல்குதலும் வறியவர்களுக்கு உதவுதலும் ஆகும்.

வேளிர்களின் காலத்தில் பாணர்கள், கூத்தர்கள், விறலியர் போன்றோர்களின் வாழ்வும் கலைகளும் சிறப்புறப் பேணி காக்கப்பட்டு வந்துள்ளது. இவர்கள் குறுநில மன்னர்கள், சீறூர் மன்னர்கள், வேளிர்கள் என்ற பல பெயர்களால் இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளனர். இவர்கள் வேளாண்மைத் தொழிலை அடிப்படையாகக் கொண்டவர்கள். இவர்கள் புன்செய் நிலத்தை விளைநிலமாகக் கொண்டவர்கள். இவர்களின் வாழ்விடம் மலை சார்ந்த நிலமாக இருந்துள்ளது.

சீறூர் மன்னர்களாகிய வேளிர்கள் தங்கள் வறுமையுற்ற காலத்திலும் தமது கொடைப் பண்பை மறவாது போற்றி ஒழுகி வந்துள்ளனர். தங்களிடம் இருக்கும் பொருட்களைக் கொண்டு விருந்தோம்பல் பண்பையும் கொடைத்தன்மையையும் போற்றி வந்துள்ளனர்.

வேளிர்கள் வேந்தர் சமூகத்தில் வேந்தர்களுக்கு ஆட்பட்டுச் சிறு நிலப்பரப்பை ஆண்டு வந்துள்ளார். சில சமயங்களில் வேந்தர்களை எதிர்த்தும் போர் புரிந்துள்ளனர். வேளிர்களில் சிலர் வேந்தர்களுக்குப் படை உதவி புரிந்தும் படைக்குத் தலைமை ஏற்றும் வந்துள்ளனர். இந்நிகழ்வை வேந்துவிடு தொழில் என்ற பெயரால் இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

வேளிர் என்று பொதுப்பெயரால் இவர்கள் அழைத்தாலும் இவர்களில் சிலர் மட்டும் தங்களை வேளிர் என்ற சிறப்புப் பெயரால் அழைத்துக் கொண்டனர். அவர்களில் வேள் பாரி, வேள் பேகன் போன்றோர் குறிப்பிடப்பிடத்தக்கவர்கள்.

வேளிர்களில் கொடைத்தன்மையில் மட்டும் சிறந்துவிளங்காது போர்க்கலையிலும் சிறப்புற்று விளங்கியுள்ளனர். மூவேந்தர்கள் ஒரு சேர படையெடுத்துவரினும் அவர்களை எதிர்த்து போரிட்டு அப்போரில் அவர்களால் தன்னை வெற்றிபெற இயாலுது படை நடத்திச் செல்லும் தன்மையையும் வீரத்தையும் ஒருங்கே பெற்றவர்களாக விளங்கியுள்ளதைப் பாரியின் வாயிலாகத் தெளியலாம்.

அதியமான் பற்றிய பாடல்கள் வாயிலாக வேந்தர்களைப் போலப் போருக்குத் தூது அனுப்பும் செயல்பாட்டை வேளிர்களும் பெற்றிருந்தனர் என்பதையும் தனக்குக் கிடைத்தர்க்கரிய பொருள் கிட்டினாலும் பிறருக்குக் கொடுக்கும் இயல்பினை வேளிர்கள் பெற்றிருந்தது தெரிய வருகிறது. தன்னுயிரை விடத் தன்னை நாடிவருப்பர்களைக் காக்கும் பண்பு வேளிர்களிடம் இயல்பாக இருந்ததை அதியமான் மூலமாகத் தெரிந்து கொள்ளலாம்.

பேகன், பாரி போன்ற வள்ளல்கள் வாயிலாக மனித உயிர்கள் மட்டுமின்றி அ.்.றிணை உயிர்களின் துன்பத்தைக் கண்டும் மனம் வருந்தி அதற்குத் தன்னால் இயன்ற கொடை வழங்குதலை அடிப்படை நோக்கமாகக் கொண்டிருக்கும் வேளிர்களின் இயல்பு வெளிப்படுகிறது.

வேளிர்களில் பலர் செல்வச் செழிப்பான மலைவளம் கொண்ட பகுதியை ஆட்சி செலுத்தி வந்துள்ளனர். இவர்களின் கொடைப் பொருளாக யானை சிறந்த இடத்தைப் பிடித்துள்ளது. மலை நாடுகளை ஆட்சி செய்யும் ஆய் போன்ற வேளிர்கள் யானையைக் கொடைப் பொருளாக வழங்குதலை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

தன்னை நாடிவரும் புலவர்களுக்கு அவர்கள் விரும்பும் பொருள் எதுவாயினும் அதனைப் பரிசாகக் கொடுக்கும் பழக்கம் வேளிரிடம் இருந்துள்ளதைப் பேகன் பற்றிய பரணர் கூற்று மூலமாக வெளிப்படுகிறது. பரணர் வேண்ட உடனடியாக தனது மனைவியின் துயர் துடைக்கப் பேகன் தன் பரத்தமை தொழிலைவிடுத்து தன்துணைவியுடன் சேர்ந்து வாழ முற்பட்ட நிகழ்வானது வேளிர்கள் தமிழ்ப் புலவர்கள் மீது கொண்ட பற்றும் புலவர்களுக்கு வேளிர்காலத்தில் இருந்த மதிப்பும் அவர்களின் சொல்லுக்குப் வேளிர்கள் செவி மடுக்கும் நிலையும் வெளிப்படுகிறது.

சங்க இலக்கியங்கள் ஆட்சித் தலைவர்கள் வேந்தன், மன்னன், அரசன், இறை அல்லது இறைவன், காவலன், கோ எனப் பல்வேறு பெயர்களால்

குறிக்கப்பெறுகின்றனர். இதில் மன்னர், வேந்தர் ஆகிய சொல்லாட்சியே அதிகமாக இலக்கியங்களில் கையாளப்பட்டுள்ளது.

வேந்தர் என்ற சொல்குறித்து அறிஞர்கள் பல காரணங்கள் கூறியுள்ளனர். அதில் முடி வேய்ததால் வேந்தர் என்ற சொல் வந்ததது என்பது பொருத்தமானதாக அமைகிறது. வேந்தர்களுக்கும் மன்னர்களுக்கும் மிகுந்த வேறுபாடு காணப்படுகிறது. ஆட்சி பரப்பில் குறைந்த நிலப் பரப்பை உடையவர்களை மன்னர்கள் என்றும் பெரும் பரப்பை ஆண்டவர்கள் வேந்தர்கள் என்றும் சுட்டும் மரபு சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளது.

தமிழகச் சூழலில் சேர, சோழ, பாண்டியர் மரபினரை வேந்தர்கள் என்றழைக்கும் மரபு நிலவி வந்துள்ளது. அவர்களில் சில காலம் ஒற்றுமையுடனும் பல காலம் போர் பூசலில் ஈடுபட்டு வந்துள்ளமையும் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்பகின்றன.

மூவேந்தர்களின் ஆட்சிக் காலத்தில் அவர்களது ஆட்சிப் பரப்பு போரிட்டு பெறும் வெற்றிகளின் அடிப்படையில் பல மாறுதல்களைக் கொண்டுள்ளது. மூவேந்தர்களில் தலை நகரங்களும், அரண்மனையும் புலவர்களால் சிறப்பித்துப் பாடப்பட்டுள்ளன.

மூவேந்தர்களின் அரசு சின்னங்களாகக் கொடி, அரசுப் பொறி, குடை, முரசு, அரசுக் கட்டில், படை, வாள், முடி, தார், செங்கோல், கடிமரம் போன்றவை புலவர்களால் போற்றிப் பாடப்பட்டுள்ளன.

வேந்தர்களின் ஆட்சிப் பொறுப்பில் சிறந்து விளங்கியவர்களுக்குக் காவிதி, ஏனாதி, எட்டி போன்ற சிறப்புப் பட்டங்கள் வழங்கப்பட்டுள்ளன. அதில் காவிதி பட்டம் வேளாண் செய்பவர்க்கும் ஏனாதி பட்டம் இராணுவ தலைவர்களுக்கும் வழங்கப்பட்டுள்ளது.

வேந்தர்களின் அவைக் களத்தில் வேந்தர்களுக்கு அறிவுரை வழங்க ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் இருந்துள்ளது. இத்தகைய குழுக்களில் இருந்த ஒற்றர், தூதுவர், அமைச்சர்கள் போன்றவர்களின் பணி முக்கியமானதாக அமைந்துள்ளது.

வேந்தர்கள் நால்வகைப் படைகளான யானைப்படை, குதிரைப் படை, தேர்ப்படை, தூசிப்படை ஆகியவற்றைக் கொண்டு சிறந்த போர் வேந்தராகத்

திகழ்ந்துள்ளனர். மேலும், சேரர்கள் கப்பற்படை என்னும் புதிய வகைப் படை கொண்டு பல இடங்களை வெற்றிப் பெற்றதைப் பதிற்றுப்பத்து இயம்புகிறது.

வேந்தர்கள் அவையில் அந்தணர்களுக்கென்று சிறப்பிடம் தரப்பட்டுள்ளது. புரோகிதர்களாக அவர்கள் அவையில் இடம் பெற்றிருந்தனர். அவர்கள் யாகம் நடத்துவதற்காகப் பெரும் பொருட்களை வேந்தர்கள் செலவிட்டுள்ளனர். வேந்தர்களாக இருந்த புலவர்களுக்குப் பெருமளவில் பொன்னும் பொருளும் வழங்கப்பட்டுள்ளது. சில அந்தணப் புலவருக்காகத் தன் மகனையும் அரச பதவியையும் பரிசாகக் கொடுக்குமளவிற்கு அந்தணர்கள் சிறந்து விளங்கினர். வேத மரபும் வேந்தர்கள் ஆட்சியில் சிறந்து விளங்கிற்று.

வேந்தர்களின் ஆட்சியில் புலவர்களுக்குச் சிறப்பிடம் தரப்பட்டுள்ளது. புலவர்கள் அரசு இயந்திரத்தின் செயல்பாடுகளை மக்களிடையே கொண்டு சேர்க்கும் விளம்பர வாயில்களாகச் செயல்பட்டுள்ளனர். அதனால், புலவர்களில் வறுமை வேந்தர்களால் போக்கப்பட்டுள்ளது. புலவர்களுக்கும் வேந்தர்களுக்குமிடையே சிறந்த நட்பு தோன்றியுள்ளது. அந்த நட்பானது உயிரக் கொடுக்குமளவில் இருந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

புலவர்களின் கவித்திறனுக்கு ஏற்றவாறும் அவர்களின் விருப்பத்திற்கு ஏற்பவும் பல்வேறு பொருட்கள் பரிசுகளாக வழங்கப்பட்டுள்ளன. புலவர்கள் தான் பெறும் பரிசுக்காக மட்டும் வேந்தரை அணுகாமல் அவர்கள் செய்யும் தவறுகளைத் துணிச்சலோடு எடுத்துரைக்கும் மனத்துணிவோடும் செயல்பட்டுள்ளனர்.

வேந்தர்களின் அவையில் அமைச்சர்களும் இன்ன பிறரும் அறிவுரை வழங்கத் தவறும் பட்சத்தில் மக்களின் பொது நலன் கருதியும் பகை வேந்தர்களின் நலன் கருதியும் வேந்தருக்கு அறிவுரை வழங்கியுள்ளனர். அதனால் வேந்தர்கள் தான் செய்யும் தவறினால் ஏற்படும் வரலாற்றுப் பிழையிலிருந்து அவர்களைக் காத்துள்ளனர்.

வேந்தர்களில் பலர் புலவராகவும் விளங்கியுள்ளனர். அகத்துறையிலும் புறத்துறையிலும் அறிவுத்திறம் சார்ந்த பல பாடல்களை வேந்தர்கள் இயற்றியுள்ளனர். நாடாளும் திறமை மட்டுமின்றி மக்களுக்குப் பயனுள்ள செய்திகளையும் தன்மான உணர்வுகளையும் தம்பாடல்களில் வேந்தர்கள் பதிவு செய்துள்ளனர்.